# ரமளான் 2012 - அனுதின தியான/ஆய்வுக் கட்டுரைகள்

ஆசிரியர்: உமர்

## பொருளடக்கம்

## *இந்த தொடர் கட்டுரைகளின் பின்னணி:*

*உமரின் தம்பி சௌதி அரேபியாவில் மூன்று வருடங்களாக வேலை செய்கிறார். ஒரு நாள் திடீரென்று 'தான் இஸ்லாமியராக மாறிவிட்டதாக' ஒரு மெயில் அனுப்பினார். அதன் பின்பு குடும்பத்தோடு தொலைபேசியில் பேசுவதையும் சிறிது சிறிதாக குறைத்துக்கொண்டு வருகிறார். உமர் இந்த ரமளான் மாதத்தில் தன் தம்பிக்கு கடிதங்கள் எழுத முடிவு செய்துள்ளார். ஒவ்வொரு நாளும் ஒரு கடிதத்தை எழுதி தன் தம்பிக்கு அனுப்பிக் கொண்டு இருக்கிறார்.*

### *நாள் 1 – நோன்பு (அன்புள்ள தம்பிக்கு உமர் எழுதும் கடிதம்)*

*முன்னுரை:*

*உமரின் தம்பி சௌதி அரேபியாவில் மூன்று வருடங்களாக வேலை செய்கிறார். ஒரு நாள் திடீரென்று 'தான் இஸ்லாமியராக மாறிவிட்டதாக' ஒரு மெயில் அனுப்பினார். அதன் பின்பு குடும்பத்தோடு தொலைபேசியில் பேசுவதையும் சிறிது சிறிதாக குறைத்துக்கொண்டு வருகிறார். உமர் இந்த ரமளான் மாதத்தில் தன் தம்பிக்கு கடிதங்கள் எழுத முடிவு செய்துள்ளார். ஒவ்வொரு நாளும் ஒரு கடிதத்தை எழுதி தன் தம்பிக்கு அனுப்பிக்கொண்டு இருக்கிறார்.*

## நாள் 1 – நோன்பு

*அன்புள்ள தம்பி,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*இந்த வருடம் என்னோடு சேர்ந்து கிறிஸ்துமஸ் கொண்டாடுவாய் என்று நினைத்தேன், ஆனால், நீ ரமளான் பண்டிகையை கொண்டாடப்போகிறாய். இந்த வருடம் டிசம்பர் மாதம் ஊருக்கு வருவாய் என்று நாங்கள் எல்லாரும் காத்திருக்கிறோம். ஆனால், நீயோ இன்னும் இரண்டு வருடங்கள் ஊருக்கு வரமுடியாது என்று சொல்லிவிட்டாய். உனக்குள் ஏற்பட்ட மாற்றம் பற்றி சிறிது அறிந்துக் கொள்ளலாம் என்றும், நீ இஸ்லாம் பற்றி முழுவதும் அறிந்த பிறகு தான் அதனை தழுவினாய் என்பதை அறிந்துக் கொள்ளவும் என்றும் இந்த கடிதங்களை எழுதுகிறேன்.*

*நானும் நீயும் ஒன்றாக சேர்ந்து வேதம் வாசித்தோம், ஜெபித்தோம், அனேக விஷயங்களை தியானித்தோம், எனவே உனக்கும் எனக்கும் இடையே இருக்கும் உறவு "அண்ணன் தம்பி" என்ற முறையில் இருந்தாலும், நாம் அதையும் தாண்டி நெருங்கிய நண்பர்களாக இருந்தோம். இதன் அடிப்படையில் இந்த ரமளான் மாதம் முழுவதும் ஒவ்வொரு நாளும் ஒரு சிறிய கடிதத்தை உனக்கு எழுதலாம் என்று முடிவு செய்துள்ளேன். இவைகளை நீ படித்து எனக்கு பதில் எழுதுவாய் என்று நம்புகிறேன். இந்த கடிதத்தை கண்டவுடன் நீ இதனை கிழித்துப்போடவேண்டாம், ஏனென்றால், இது உன் நித்தியத்தைப் பற்றிய விஷயமாகும். நீ எடுக்கும் முடிவுகளில் அதிமுக்கியமான முடிவு, உன் நித்தியம் பற்றிய முடிவாகும். உன்னுடைய வெற்றி இந்த அண்ணனின் வெற்றியாகும், உன்னுடைய தோல்வி இந்த அண்ணனின் தோல்வியாகும்.*

***இன்று ரமளான் முதல் நோன்பு ஆரம்பமாகியுள்ளது, நீயும் நோன்பு இருக்கிறாய் என்று நம்புகிறேன்.***

*நாம் இருவரும் அனேக முறை உபவாசம் இருந்துள்ளோம், அந்நாட்களில் அதிகமாக பல விஷயங்களுக்காக ஜெபித்துள்ளோம். உனக்கு ஞாபகம் இருக்கிறதா? ஒரு முறை நான் என் முகத்தை மிகவும் வாடலாக வைத்திருந்த போது என்னை நீ கண்டித்தாய், முகத்தை உற்சாகமாக வைத்திருக்கவேண்டும், மற்றவர்களுக்கு நாம் உபவாசம் இருப்பது தெரியக்கூடாது என்று கூறினாய், அந்தரங்கத்தில் தேவனுக்கு காணப்படவேண்டிய உபவாசத்தை மக்களின் முன்பாக மறந்தும் கூட காட்டக்கூடாது என்று கடிந்துக்கொண்டாய். ஆனால், இன்று நீ உபவாசம் இருக்கிறாய், எல்லாருக்கும் தெரிந்திருக்கிறபடி வெளிப்படையாக எல்லா சடங்காச்சாரங்களையும் செய்கிறாய், இஸ்லாமுக்கு முன்பு*

*வாழ்ந்த 'பல தெய்வ வழிப்பாட்டு மக்கள்' பின்பற்றின "30 நாட்கள் நோன்பு" என்ற சடங்காச்சாரத்தை இன்று நீ பின்பற்றுகிறாய். இஸ்லாமிய நோன்பு என்பது 'பல தெய்வங்களை வணங்கும் மக்களின்' மதச்சடங்கு என்று உனக்குத் தெரியுமா? மேலும் இஸ்லாமில் காணப்படும் அனேக சடங்காச்சாரங்களாகிய தொழுகை செய்வதிலிருந்து, மக்காவிற்கு ஹஜ் செய்யும் வரையுள்ள பெரும்பான்மையான சடங்குகள் பழங்குடி மக்கள் பின்பற்றியவைகள் என்று உனக்கு தெரியுமா?*

*அன்று தேவனுக்கு மட்டும் தெரிந்திருக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு அந்தரங்கத்தில் உன் பக்தியை காண்பித்த நீ, இன்று எல்லாவற்றையும் வெளிப்படையாக செய்கிறாய். இதைப் பற்றி நீ சிந்தித்து பார்த்ததுண்டா? கதவு மூடப்பட்ட ஒரு அறைக்குள்ளே உன் பிதாவை நோக்கி அந்தரங்கத்தில் வேண்டுதல் செய் என்ற கட்டளைக்கு எதிராக உலக மக்கள் காணும்படியாக வெளிப்படையாக நீ தொழுதுக்கொள்கிறாய்.*

*மெய்யான தேவனாகிய யெகோவா தான் 'அல்லாஹ்' என்று நீ சொல்கிறாய், ஆனால், அந்த பைபிளின் மெய் தேவன் விதித்த கட்டளைகளை நீ மறந்துபோனாய்? அந்நிய தெய்வங்களையும், அவர்களின் பாரம்பரியங்களையும் பின்பற்றாதீர்கள் என்று அவர் கட்டளையிட்டு இருக்கும் போது, நீ இஸ்லாமிய போர்வையில், அந்நிய தெய்வத்தை பின் பற்றிக்கொண்டு இருக்கிறாய்.*

*உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கும் தேசத்தில் நீ போய்ச் சேரும் போது, அந்த ஜாதிகள் செய்யும் அருவருப்புகளின்படி செய்யக் கற்றுக் கொள்ளவேண்டாம் (உபாகமம் 18:9) .*

*நீங்கள் குடியிருந்த எகிப்துதேசத்தாருடைய செய்கையின்படி செய்யாமலும், நான் உங்களை அழைத்துப்போகிற கானான் தேசத்தாருடைய செய்கையின்படி செய்யாமலும், அவர்களுடைய முறைமைகளின்படி நடவாமலும், என்னுடைய நியாயங்களின்படி செய்து, என்னுடைய கட்டளைகளைக் கைக்கொண்டு நடவுங்கள்; நான் உங்கள் தேவனாகிய கர்த்தர் (லேவியராகமம் 18:3-4).*

*நீங்கள் உபவாசிக்கும்போது, மாயக்காரரைப்போல முகவாடலாய் இராதேயுங்கள்; அவர்கள் உபவாசிக்கிறதை மனுஷர் காணும் பொருட்டாக, தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். நீயோ உபவாசிக்கும்போது, அந்த உபவாசம் மனுஷர்களுக்குக் காணப்படாமல், அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படியாக, உன் தலைக்கு எண்ணெய் பூசி, உன் முகத்தைக் கழுவு. அப்பொழுது, அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா உனக்கு வெளியரங்கமாய்ப் பலனளிப்பார் (மத்தேயு 6:16-18).*

*தம்பி, நீ எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்து முடிவு எடுப்பவன் என்று எனக்குத் தெரியும், ஆனால், இந்த விஷயத்தில் மட்டும் நீ சரியாக இஸ்லாமை சோதிக்காமல் முடிவு எடுத்துள்ளாய் என்பதை உனக்கு சொல்லிக்கொள்கிறேன். நம்முடைய இந்த கடிதத்தொடர்பு நம் இருவருக்கும் உபயோகமாக இருக்கும். உன்னுடைய புதிய மார்க்கம் பற்றி நீ அறிந்துக்கொண்டவைகளை என்னோடு பகிர்ந்துக்கொள்ள இது ஒரு அருமையான வாய்ப்பாகும். எனவே, இதனை நீ நல் முறையில் பயன்படுத்திக்கொள்வாய் என்று நம்புகிறேன்.*

*இந்த கடிதத்தை படித்த பிறகு எனக்கு நீ பதில் எழுதுவாய் என்று நம்புகிறேன்.*

*இப்படிக்கு,*

*கிறிஸ்துவிற்குள் உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## ***நாள் 2 – விடுதலை. . . விடுதலை. . . விடுதலை***

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* **இங்கு** *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பி,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*நேற்று நான் அனுப்பிய கடிதத்தை படித்து இருப்பாய் என்று நம்புகிறேன்.*

*நீ ஒரு முஸ்லிமோடு அதிகமாக நட்பாக இருக்கிறாய், உங்கள் இருவரின் நட்பு அதிகமாக உள்ளது என்று சௌதியில் இருக்கும் என் நண்பன் எனக்கு கூறியபோது, "இதிலென்ன தவறு? எனக்கும் இஸ்லாமியர்கள் நண்பர்களாக இருக்கிறார்கள் அல்லவா?" என்று நான் கூறினேன். என் தம்பி என்ன குழந்தையா? இவனோடு பேசு அவனோடு பேசாதே என்று கட்டுப்பாடு விதிப்பதற்கு? அவன் நண்பர்களோடு சுதந்திரமாக பழகட்டுமே, சுதந்திரத்திற்கு தடை போடவேண்டாம் என்று நான் என் நண்பனிடம் கூறினேன்.*

*ஆனால், சில நாட்களுக்கு பிறகு நீ ஒரு மெயில் அனுப்பி "நான் முஸ்லிமாகிவிட்டேன்" என்று கூறினாய், நான் சுயமாக இந்த முடிவை எடுத்தேன் என்றும் கூறினாய். அப்பா அன்று அதிகமாக துக்கப்பட்டார், நான் அவ்வளவு துக்கம் அடையவில்லை, ஏனென்றால் உன்னுடைய பலம் மற்றும் பலவீனம் எது என்று எனக்கு நன்றாகத் தெரியும். நீ சுதந்திரமாக எடுத்த முடிவை நான் மதிக்கிறேன்.*

*நான் உன்னிடம் ஒரு விஷயத்தை பற்றி கேட்க விரும்புகிறேன். நீ சுதந்திரமாக இஸ்லாமை தழுவினாய், அதற்கு உனக்கு சுதந்திரம் இருந்தது. ஆனால், நீ இஸ்லாமை விட்டு வெளியே வர விரும்பினால், அப்படி செய்ய உனக்கு சுதந்திரம் உண்டா?*

*உன்னை இஸ்லாமை தழுவும் படி உற்சாகப்படுத்திய உன் நண்பர்கள், நீ மறுபடியும் அதைவிட்டு வெளியேறவேண்டும் என்று விரும்பினால், அவர்கள் உனக்கு எந்த ஒரு தீங்கும் செய்யாமல் வெளியேற அனுமதிப்பார்களா?*

*நான் ஏன் இந்த கடிதங்களை எழுதுகிறேன் என்பதை உனக்கு விளக்குகிறேன். நீ நம் குடும்பத்தின் ஒரு அங்கம், நீ எங்கு இருந்தாலும், நன்றாக இருந்தால் அது போதும் எங்களுக்கு. ஆனால், ஒரு நாள் கர்த்தரிடத்தில் மறுபடியும் நீ வரவிரும்புகிறாய் என்று வைத்துக்கொள்வோம், அப்போது நீ இஸ்லாமை விட்டு வெளியேற விரும்பினால், இஸ்லாம் இடம் கொடுக்குமா? இஸ்லாமியர்கள் உன்னை வாழவிடுவார்களா? இது தான் என் பயம்.*

*உனக்கு நெருங்கிய நல்ல நேர்மையான இஸ்லாமிய நண்பன் ஒருவன் இருந்தால், அவனிடம் "ஒரு வேளை நான் இஸ்லாமை விட்டு வெளியேற விரும்பினால், நீங்கள் அனுமதிப்பீர்களா?" என்று கேட்டு அதற்கு அவன் என்ன பதில் சொல்கிறான் என்று கவனித்துப்பார். என் தம்பி இஸ்லாமில் பாதுகாப்பாக இருப்பானா? அவன் வெளியே வரவிரும்பினால் கூட பாதுகாப்பாக இருப்பானா? என்பதை கேட்டு எனக்குச் சொல்வாயா?*

*இஸ்லாமை விட்டு வெளியேறும் முஸ்லிம்கள் இஸ்லாமிய நாடுகளில் எப்படி நடத்தப்படுகிறார்கள் என்று சிறிது கவனித்துப்பார்? ஷரியா சட்டம் இஸ்லாமியர்களை என்ன பாடுபடுத்துகிறது என்று கவனித்துப்பார். இஸ்லாமை விட்டு வெளியேறியவர்கள் சந்தித்துக்கொண்டு இருக்கும் பிரச்சனைகளை செய்தித்தாள்களில் படித்துப்பார்? நீ குழந்தையல்ல, எனவே, அனைத்தையும் சோதித்துப் பார்.*

*நல்லவேளை நாம் இந்தியாவில் பிறந்தோம், இஸ்லாமிய நாட்டில் பிறக்கவில்லை, அதற்காக இறைவனுக்கு நன்றி சொல்லவேண்டும். ஆனால், அதிகமாக சந்தோஷப்பட முடியாது, இங்கும் மறைவாக அனேக தீங்குகள் இஸ்லாமை விட்டு வெளியேறுபவர்களுக்கு எதிராக நடந்துக்கொண்டு இருக்கிறது. தம்பி, ஒரு மனிதனுக்கு இருக்கும் மிகவும் முக்கியமான பொக்கிஷம், அவன் சுதந்திரமாக வாழுவதும், சுதந்திரமாக முடிவுகளை எடுப்பதுமாகும், இந்த இரண்டும் இந்நாள் வரை உனக்கு இருந்தது, இனி இப்படிப்பட்ட சுதந்திரம் உனக்கு கிடைக்குமோ என்பது தான் என் கேள்வி?*

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன். நான் கேட்ட விஷயத்தை மட்டும் உன் நண்பர்களிடம் கேட்டுச் சொல்வாயா? நீ மிகவும் ஜாக்கிரதையாக இருக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

"*சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும்*"

இப்படிக்கு, உன் அண்ணன்,

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

---

## நாள் 3 – நீ அல்லாஹ்வை நேசிக்கிறாயா?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்பு தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

என்னுடைய இரண்டாவது கடிதத்தை படித்தாயா? நான் கேட்கச்சொன்ன விவரங்களை கேட்டாயா?

இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் முக்கியமான வித்தியாசங்களை நீ அறியாததால் தான் இஸ்லாமை தழுவியுள்ளாய்.

இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் முக்கியமான வித்தியாசங்கள் இவைகளாகும்:

- இஸ்லாமின் தெய்வம் ஒரு எஜமான், நீ அவனது அடிமை (Master and Slave)
- கிறிஸ்தவத்தின் தெய்வம் ஒரு தந்தை, நீ அவரது செல்லக்குமாரன். (Father and Son)
- ஒரு மனிதனுக்கும் அல்லாஹ்விற்கும் இடையே இருப்பது ஒரு "ஒப்பந்தம்" (Contract).
- ஒரு மனிதனுக்கும் யெகோவா தேவனுக்கும் இடையே இருப்பது ஒரு "உறவு முறை" (Relationship).
- ஒரு அன்பான அப்பாவிற்கு மகனாக இருப்பதை உதறி தள்ளிவிட்டு, நீ ஒரு கடினமான எஜமானனுக்கு அடிமையாக வேலை செய்ய உன்னை விற்றுவிட்டாய்.

பைபிளின் தெய்வமாகிய நம் பரம பிதா தன் மகனுக்காக எதையும் செய்வார். இந்த பிதா தன் மகனுக்காக தன் நிலையிலிருந்து இறங்கி வருவார், தன் மகனை தன் தோளில் சுமப்பார், முதிர்வயது வரையும் சுமப்பார், ஆறுதல்படுத்துவார், கடினமான நேரங்களில் பலப்படுத்துவார், தன்னால் முடிந்த அனைத்தையும் தன் மகனுக்காக மகளுக்காக செய்வார். ஏன் இப்படி சர்வ வல்ல தேவன் செய்கிறார் என்று நாம் பார்த்தால், அதற்கு ஒரே ஒரு பதில் தான் நமக்கு கிடைக்கும், அது என்னவென்றால் "அவர் நம்மை நேசிக்கிறார்" என்பதாகும். இதைவிட வேறு எந்த காரணமும் இருக்கமுடியாது. இப்படிப்பட்ட பிதாவை நாம் நேசிக்க நமக்கு வேறு ஒரு பலமான காரணம் ஒன்று தேவையா?

ஆனால், அல்லாஹ் தன் அடியார்களிடம் நெருங்கி வந்து ஆறுதல்படுத்துகிறாரா? ஒரு தந்தையைப் போல அன்போடு நடந்துக்கொள்கிறாரா? சிந்தித்துப்பார்.

இதோ "நான் உனக்காக இவைகளை செய்தேன், இதோ உனக்காக நான் இவ்வளவு அதிகமாக அன்பு கூறுகிறேன்" என்று பைபிளின் தேவன் தன் அன்பை வெளிப்படுத்துகிறார். ஆனால், அல்லாஹ், எனக்கு கீழ்படிகிறாயா? நான் சொன்ன சட்டங்களை கைக்கொள்கிறாயா? எனக்கு அடிமையாக எப்பொழுதும் இருப்பாயா? என்று மக்களிடம் கேட்டு தம்முடைய ஒப்பந்தத்தை வெளிப்படுத்துகிறார். மனிதனுக்காக தன் நிலையிலிருந்து இறங்கி வருகிற ஒரு அப்பாவாக அல்லாஹ் இல்லை என்பது தான் மிகவும் வேதனையான விஷயம்.

நீ அப்பா இல்லாத அனாதையாக இருப்பதை நான் விரும்பவில்லை தம்பி. எனக்கு பரலோகில் ஒரு பிதா உண்டு. அவரே உனக்கும் பிதாவாக இருக்கிறார், நீ அவரை உதறிதள்ளிவிட்டாய். ஆனால், இன்னும் அவர் உனக்காக காத்துக்கொண்டு இருக்கிறார். இளையக் குமாரன் எப்போது வருவான் என்று எதிர்ப்பார்த்து வாசலிலேயே காத்துக்கிடந்த அந்த உவமையில் வரும் பிதாவைப்போல, நம் தேவன் கூட உனக்காக காத்துக்கொண்டு இருக்கிறார். நீ எப்போது வேண்டுமாலும் வரலாம், நிபந்தனைகளோ சட்டங்களோ கிடையாது. மகன் அப்பா வீட்டிற்கு வருவதற்கு எது தடையாக இருக்கமுடியும்?

இன்று நீ நோன்பு ஆரம்பித்து மூன்றாம் நாள் ஆகிறது. நீ உன் பரலோக அப்பாவின் பிரசன்னத்தை மற்றும் அன்பை உணர்ந்தாயா? அல்லது அல்லாஹ்விற்கு பயந்து ஒரு எஜமானனுக்கு முன்பாக நடுங்கிக்கொண்டு நிற்கும் ஒரு அடிமையைப்போல தொழுதுக்கொள்கிறாயா? சிந்தித்து பாரடா தம்பி சிந்தித்து பாரு,

அம்மாவின் அன்பை நீ ருசி பார்த்துள்ளாய்; நம் அப்பாவின் அன்பையும் நீ ருசி பார்த்துள்ளாய், நம் சகோதர சகோதரிகளின் அன்பையும் நீ ருசி பார்த்துள்ளாய், உன் நல்ல நண்பர்களின் நட்பையும் நீ ருசி பார்த்துள்ளாய். ஆனால், உன்னை படைத்த இறைவன் உன்னை அதிகமாக நேசிக்கிறார் என்பதை உணராமல் போய்விட்டாயே, அவரது அன்பை ருசி பார்க்காமல் சென்று விட்டாயே!

இன்று நீ அல்லாஹ்வை தொழுதுக்கொள்ளும் போது "யா அல்லாஹ், நீங்கள் என் தந்தை, நான் உம்முடைய மகன், நான் உம்மை நேசிக்கிறேன், நீங்களும் என்னை நேசிக்கிறீர்களா இல்லையா என்பதை எனக்கு எவ்விதத்திலாவது தெரியப்படுத்தும்" என்று வேண்டிக்கொள். ஆனால், தம்பி இஸ்லாமில் இப்படி வேண்டுவது பாவமாகவும், மிகப்பெரிய தவறாகவும் கருதப்படுகிறது என்பதை நீ அறிந்துக்கொள். நீ அல்லாஹ்வை ஒரு அப்பாவைப்போல நேசிக்கமுடியாது. ஒரு அடிமையைப் போல வெறும் கீழ்படிய மட்டுமே உன்னால் முடியும். உன் அல்லாஹ் உன் வேண்டுதலுக்கு பதில் அளிக்கமாட்டார், ஆனால், நான் உனக்கு சவால் விடுகிறேன், அல்லாஹ்விடம் நீ கேட்ட வேண்டுதலுக்கு நம் தேவன் பதில் அளிப்பார். இந்த சவாலை ஏற்க நீ தயாராக இருந்தால், தினமும் இந்த வேண்டுதலை செய்துப்பார்.

நான் உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்,

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

மூலம்

உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்

---

## நாள் 4 – இருவரும் ஒருவரல்ல

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்பு தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

நீ எழுதிய மெயில் (கடிதம்) கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். என்னுடைய மூன்று கடிதங்களுக்கு ஒரு பதிலையாவது நீ எழுதினாய் என்று நினைக்கும் போது மகிழ்ச்சியாக உள்ளது. நீ அந்த கடிதத்தில். பைபிளின் தேவனாகிய "யெகோவா தேவனும், அல்லாஹ்வும் ஒருவரே" என்று குறிப்பிட்டு இருந்தாய். இன்று அதே தலைப்பு குறித்து ஒரு சில விவரங்களை சுருக்கமாக நான் உனக்கு எழுதட்டுமா? நம்முடைய இந்த உரையாடல் மிகவும் உபயோகமான ஒன்றாக இருக்கும் என்று நம்புகிறேன்.

ஒரு தவறான தகவலை முஸ்லிம்கள் உனக்குச் சொல்லியுள்ளார்கள். பைபிளின் தேவனும், குர்-ஆனின் அல்லாஹ்வும் ஒரே நபர் அல்ல, இவர்கள் வெவ்வேறானவர்கள். வானத்துக்கும் பூமிக்கும் எவ்வளவு தூரம் இருக்கிறதோ அவ்வளவு இடைவெளி இவ்விருவருக்கும் இடையே உள்ளது. நீ சௌதி சென்ற பிறகு பல மாதங்களாக சபை ஐக்கியத்தையும், சகோதர ஐக்கியத்தையும் உதறி தள்ளிவிட்டதினால் தான், நீ

இஸ்லாமியர்களின் சொற்களை கேட்டு, அவர்கள் சொல்வது உண்மை என்று நம்பியுள்ளாய். சரி விஷயத்திற்கு வருகிறேன். யெகோவா தேவனும், அல்லாஹ்வும் வெவ்வேறானவர்கள் என்பதை விளக்க ஒரு புத்தகமே எழுதலாம், ஆனால், நீண்ட விளக்கங்களை படித்தால் என் தம்பிக்கு சலிப்பு உண்டாகுமே என்ற எண்ணத்தால், சுருக்கமாக சில குறிப்புக்களை எழுதுகிறேன். உனக்கு நேரம் கிடைக்கும்போது நான் சொல்லும் விவரங்களை நீயே படித்து தெரிந்துக்கொள்.

**முதலாவதாக,** பைபிளின் இறைவன் தன்னை திரித்துவ தேவனாக வெளிப்படுத்துகிறார், பிதா குமாரன் பரிசுத்த ஆவியானவராக இருக்கிறார். ஆனால், அல்லாஹ்வோ ஏக இறைவனாக தம்மை வெளிப்படுத்துகிறார்.

**இரண்டாவதாக,** பைபிளின் தேவன் தம்மை ஒரு பிதாவாக அனேக இடங்களில் தம்மை வெளிப்படுத்துகிறார். ஆனால், அல்லாஹ்வோ ஒரு எஜமானன் போல காட்சி அளிக்கிறார். தம்மை பின்பற்றுபவர்களை தன் பிள்ளைகளைப்போல அன்பாக பார்க்காத இறைவனாக அல்லாஹ் இருக்கிறார். உனக்கு சந்தேகம் இருந்தால், இஸ்லாமிய அறிஞர்களை கேட்டுப்பார், அதாவது "நான் அல்லாஹ்வை அப்பா என்று அழைக்கலாமா? அப்பா என்ற உரிமையோடு வேண்டிக்கொள்ளலாமா?" என்று கேட்டு தெரிந்துக்கொள். ஜாக்கிரதை நீ இஸ்லாமியர்களிடம் கேட்கும் கேள்விகள் உன்னை ஆபத்தில் கொண்டுச் சேர்க்கும்.

**மூன்றாவதாக,** பைபிளின் தேவன் மக்களின் மீது "நிபந்தனையற்ற அன்பை பொழிகிறார், பாவி மீதும் அன்பு கொள்கிறார், அவன் திருந்தி மறுபடியும் தன்னிடம் வருவதற்கு தேவையான எல்லா ஏற்பாடுகளையும் செய்துள்ளார்".

ஆனால், அல்லாஹ் இப்படி இல்லை:

அவர் தீயவர்களை நேசிப்பதில்லை, பாவிகளை நேசிப்பதில்லை (ஸூரா 28:77, 30:45).

நற்செயல்களைச் செய்து தம்மை தொழுதுக்கொள்கிறவர்களை மட்டுமே நேசிக்கிறார் (ஸூரா 2:195, 2:222, 3:76, 3:146, 3:159, 5:13).

நாம் பாவிகளாக இருக்கும் போதே நம் தேவன் நம்மீது அன்பு கூர்ந்து, தம்மைத் தாமே நமக்காக ஒப்புக்கொடுத்தார் (உனக்கு பைபிள் வசனங்களை அதிகமாக மேற்கோள் காட்டவேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். இன்னும் உன் பைபிள் உன்னிடம் உள்ளதா? அல்லது அதனை தூக்கி எறிந்துவிட்டாயா?)

**நான்காவதாக,** பைபிளின் தேவன் நம் நிலைக்கு இறங்கிவந்து நம்முடன் ஒரு நண்பனைப்போல நட்புறவை வைத்துக்கொள்ள விரும்புகிறார். நாமும் முழு இருதயத்தோடு அவரை நேசிக்கவேண்டும் என்று விரும்புகிறார். ஆனால், அல்லாஹ் தன் மக்களிடம் எதிர்ப்பார்ப்பதெல்லாம் 'கீழ்படிதல்' மட்டுமே ஆகும். இயந்திரங்களைப் போல மக்கள் தன்னை தொழுதுக்கொள்ள வேண்டும், புரிந்தாலும், புரியாவிட்டாலும் தன் வேதத்தை படிக்கவேண்டும் என்று எதிர்ப்பார்க்கிறார். கிறிஸ்தவர்களுக்கு தேவன் ஆறுதல்படுத்தும் பிதாவாகவும் உற்ற நண்பனாகவும் இருக்கிறார். ஆனால், முஸ்லிம்களுக்கு அல்லாஹ் அதிகாரம் செலுத்தும் ஒரு எஜமானனாக இருக்கிறார்.

**ஐந்தாவதாக,** பைபிளின் தேவன் அன்பானவர் மட்டுமல்ல, அவர் பரிசுத்தராகவும் பரிபூரண நீதியுள்ளவராகவும் இருக்கிறார். அதாவது நாம் பாவம் செய்யும் போது நம் தேவனுக்கு அவமானத்தை கொண்டு வருகிறோம், அவருக்கு எதிராக செயல்படுகிறோம், இதற்காக நீதியுள்ள தேவனிடமிருந்து நமக்கு தண்டனை காத்திருக்கும். அவர் நீதியுள்ளவர் என்பதால் தண்டனை நமக்கு தப்பாது. அதே நேரத்தில் அவர் அன்புள்ளவராக இருப்பதினால், நம்முடைய தண்டனையை அவர் தம்முடைய வார்த்தையை குமாரனாக அனுப்பி தாமே அதனை சுமந்தார். ஆனால், மக்கள் பாவங்கள் செய்து அல்லாஹ்வை அவமானப்படுத்தினாலும் சரி, சில சடங்காச்சாரங்களை செய்து மன்னிப்பு கேட்டால் அதனை அல்லாஹ் மன்னித்துவிடுகிறார், தன் நீதி பற்றி தனக்கே அக்கரையில்லாத இறைவனாக அல்லாஹ் காணப்படுகிறார். தம்மை மக்கள் அவமானப்படுத்தினதை காற்றில் விட்டுவிட்டார். எனவே அல்லாஹ் "பரிபூரண நீதியுள்ள நியாயாதிபதி" அல்ல. பைபிளின் தேவன் பரிபூரண நீதியுள்ள நியாயாதிபதியாகவும் இருக்கிறார், அதே நேரத்தில் அன்பாகவும் இருக்கிறார்.

**ஆறாவதாக,** பைபிளின் தேவன் தம்மை விட பெரியவர் யாரும் இல்லை என்பதால் தம்மீது மட்டுமே சத்தியம் செய்வார். ஆனால், அல்லாஹ் அனேக காரியங்கள் மீது சத்தியம் செய்வார், அதாவது இரவின் மீதும், மலையின் மீதும், நட்சத்திரங்கள் மீதும், நகரத்தின் மீதும், காலத்தின் மீதும் இன்னும் அனேக விஷயங்கள் மீதும் சத்தியம் செய்கிறார். இவ்விருவருக்கும் இடையே இருக்கும் வித்தியாசத்தைப் பார்.

**ஏழாவதாக,** பைபிளின் தேவனின் பரலோகம் அல்லது சொர்க்கம் ஆவிக்குரிய சொர்க்கமாகும். பரலோகில் திருமணம் இல்லை, உடலுறவு இல்லை என்று வேதம் தெளிவாகச் சொல்கிறது. ஆனால், அல்லாஹ்வின் சொர்க்கமோ, மோகம் நிறைந்த ஒரு இடமாக காட்சி அளிக்கிறது. குறைந்த பட்சம் ஒரு முஸ்லிம் சொர்க்கத்தில் தன் மனைவியோடு உடலுறவு கொள்கிறார் என்று சொன்னாலும் ஒருவகையில் ஏற்றுக்கொள்ளலாம், ஆனால் அல்லாஹ்வின் சொர்க்கம் கிட்டத்தட்ட ஒரு விபச்சார விடுதி போல காட்சி அளிக்கிறது (தம்பி இந்த வார்த்தையை பயன்படுத்த எனக்கு வேதனையாக உள்ளது, ஆனால் வேறு வழியில்லை, உண்மை கசக்கத்தான் செய்யும்). அனேக கன்னிப்பெண்கள் முஸ்லிம்களுக்கு கிடைப்பதாகவும், அவர்களோடு முஸ்லிம்கள் உடலுறவில் ஈடுபட்டு இருப்பதாகவும் இஸ்லாம் கூறுகிறது. நீ சிந்தித்துப்பார், பைபிளின் தேவனின் சொர்க்கத்திற்கும், அல்லாஹ்வின் சொர்க்கத்திற்கும் இடையே எவ்வளவு பெரிய இடைவெளி, இவ்விருவரும் ஒருவராக இருக்கமுடியுமா? நிச்சயமாக இல்லை.

இப்படி அனேக வித்தியாசங்களைச் சொல்லிக்கொண்டு போகலாம். ஒரு சில மாதங்களாக இஸ்லாமியனாக இருக்கின்ற நீ, நிச்சயம் இஸ்லாமிய சொர்க்கம் பற்றி, அல்லது இஸ்லாமியர்களுக்கு சொர்க்கத்தில் கிடைக்கவிருக்கும் பெண்கள் பற்றிய ஒரு பிரசங்கத்தையாவது (பயானை) கேட்டு இருப்பாய் என்று நிச்சயமாக நான் நம்புகிறேன்.

ஆகவே, தம்பி நீ நினைப்பதுபோல, பைபிளின் தேவனும் குர்-ஆனின் அல்லாஹ்வும் ஒருவரல்ல என்பதை நீ புரிந்துக்கொள்ளவேண்டும்.

இதைப் பற்றி இன்னும் அதிகமாக உனக்கு விவரம் தேவைப்பட்டால் எனக்கு தெரிவிக்க மறந்துவிடாதே.

அடுத்த கடிதத்திலுல் உன்னை சந்திக்கிறேன்.

இப்படிக்கு

உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

---

## நாள் 5 – கிறிஸ்தவத்தின் தொடர்ச்சி இஸ்லாம் அல்ல

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்பு தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

என்னுடைய முந்தைய கடிதத்தை நீ படித்து இருப்பாய் அதாவது, அல்லாஹ்விற்கும், பைபிளின் தேவனுக்கும் எந்த ஒரு சம்மந்தமும் இல்லை என்பதை விளக்கியிருந்தேன்.

இந்த கடிதத்தில் கிறிஸ்தவர்களிடம் இஸ்லாமியர்கள் சொல்லும் இன்னொரு தவறான தகவல் பற்றி விளக்குகிறேன்.

**சபை ஐக்கியம்:** ஒரு கிறிஸ்தவர் சபை ஐக்கியத்தில் தொடர்ந்து பங்கு பெற்று, பைபிளை படித்து தியானித்து, பழைய ஏற்பாடு மற்றும் புதிய ஏற்பாட்டின் பொதுவான வேத அறிவை பெற்று இருந்தால், அவரிடம் இஸ்லாமியர்களின் வாதம் எடுபடாது. அவர்கள் சொல்லும் விவரங்களை அந்த கிறிஸ்தவன் பைபிளோடு உரசிப்பார்த்து அவர்கள் சொல்லும் விவரங்களில் எது உண்மை எது தவறு என்று அறிந்துக்கொள்வான். ஆனால், சபை ஐக்கியத்தில் ஈடுபடாமல், வேதத்தில் அதிகமாக முக்கியத்தும் காட்டாத சராசரி கிறிஸ்தவர்கள் இஸ்லாமியர்களின் வாதத்தை நம்பிவிடுகின்றனர். கிறிஸ்தவர்கள் இஸ்லாமியர்களாக மாறுவதற்கு அனேக காரணங்கள் உண்டு, அதில் சபை ஐக்கியத்தை விட்டுவிடுதலும் ஒரு முக்கியமான காரணமாக இருக்கிறது.

**ஏன் இஸ்லாம் கிறிஸ்தவத்தின் தொடர்ச்சி இல்லை என்பதை இப்போது காண்போம்:**

1. **அல்லாஹ் தம்மை பைபிளின் தேவனோடும்**, அவரது தீர்க்கதரிசிகளோடும், பைபிளின் நிகழ்ச்சிகளோடும் சம்மந்தப்படுத்திக் கொள்கிறார். இது தவறானதாகும், ஏனென்றால், நான் உனக்கு எழுதிய முந்தைய கடிதத்தில் குறிப்பிட்டதுபோல, அல்லாஹ்வும் பைபிளின் தேவனும் வெவ்வேறானவர்கள்.
2. **பழைய மற்றும் புதிய ஏற்பாட்டின் படி,** தேவன் மேசியாவை அனுப்பி தம் திட்டத்தை நிறைவேற்றியுள்ளார். அதாவது இயேசுவின் முதல் வருகை மற்றும் அவர் நிறைவேற்றிய காரியங்கள் யெகோவா தேவனின் மிகப்பெரிய வெற்றியாகும்.
3. **அதே பழைய மற்றும் புதிய ஏற்பாட்டின் படி,** மேசியாவின் இரண்டாம் வருகைக்காக உலகம் காத்துக்கொண்டு இருக்கிறது. பைபிள் தெளிவாக முழு விவரங்களையும் சொல்லும் போது, இடையில் இஸ்லாம் எங்கேயிருந்து வந்தது?
4. **குர்-ஆனில் பல பைபிள் நிகழ்ச்சிகள், தீர்க்கதரிசிகளின் பெயர்கள்** குறிப்பிட்டு இருந்தால், அதனை யெகோவா தேவன் தான் அனுப்பினார் என்று எப்படி நம்பமுடியும்? பைபிளின் அடிப்படை சத்தியத்திற்கு எதிராக குர்-ஆன் பேசும் போது, எப்படி இவ்விரு வேதங்களையும் அனுப்பினவர் ஒருவராக இருக்கமுடியும்?
5. **பைபிளின் தேவன் தம்மை "பிதா" என்ற உறவு முறையில்** தம்மை வெளிப்படுத்துகிறார், இதனை குர்-ஆன் நிராகரிக்கிறது. இயேசு தேவனுடைய வார்த்தையாக இருக்கிறார், தேவகுமாரனாக இருக்கிறார் என்று பைபிள் சொல்லும் போது குர்-ஆன் அதனை நிராகரிக்கிறது. இயேசுவின் பாடுகள், சிலுவையில் அறையப்படுதல், மரணம் மற்றும் உயிர்த்தெழுதலை குர்-ஆன் நிராகரிக்கிறது. இப்படி இருக்கும் போது எப்படி கிறிஸ்தவத்தின் தொடர்ச்சியாக "இஸ்லாம்" இருக்கமுடியும்? கிறிஸ்தவத்தை நிராகரிக்கும் இஸ்லாம், கிறிஸ்தவத்தின் தொடர்ச்சி அல்ல.
6. **பைபிளில் காணப்படும் நிகழ்ச்சிகளை குர்-ஆன்** எடுத்துக்கொண்டதோடு மட்டுமல்லாமல், அவைகளை மாற்றியும் திருத்தியும் கூறியுள்ளது, இப்படி இருக்க பைபிளையும் குர்-ஆனையும் கொடுத்தவர் எப்படி ஒரே இறைவனாக இருக்கமுடியும்? எப்படி அந்த தேவன் கிறிஸ்தவத்திற்கு பிறகு இஸ்லாமை தொடரச்செய்வார்?
7. **பிதாவையும்,குமாரனையும் மறுதலிக்கிறவன் பொய்யன் என்றும்**, அந்திக்கிறிஸ்து என்றும் முதல் நூற்றாண்டிலேயே புதிய ஏற்பாடு ஆணித்தரமாக கூறுகிறது, ஆறு நூற்றாண்டுகளுக்கு பிறகு வந்த இஸ்லாம் சொல்லிவைத்தாற் போல பிதாவையும், குமாரனையும் மறுதலித்துள்ளது. புதிய ஏற்பாட்டின் பாடி இஸ்லாம் ஒரு பொய்யான மற்றும் அந்திக் கிறிஸ்துவின் மார்க்கம் என்றுச் சொல்லவேண்டும்.
8. **முஹம்மது என்ற பெயரில் ஒரு நபி/தீர்க்கதரிசி வருவார்** என்று இயேசு முன்னுரைத்தார் என்று அறியாமையில் இஸ்லாமியர்கள் கூறுகிறார்கள். பரிசுத்த ஆவியானவர் பற்றி இயேசு கூறிய முன்னறிவிப்பை திருத்தி, முஹம்மதுவிற்கு முடிச்சு போட இஸ்லாமியர்கள் முயற்சி எடுக்கிறார்கள், இதுவும் இஸ்லாமியர்களின் தவறான தகவலாகும். (யோவான் 14.16-17, 14.26, 15.26 & 16.70)
9. **இயேசு முன்னுரைத்தது முஹம்மதுவை அல்ல**, அவர் பரிசுத்த ஆவியானவரைத் தான் என்பதை நிருபிக்க அனேக காரணங்களை காட்டலாம், அவைகளில் சிலவற்றை நான் உனக்காக சுருக்கமாக குறிப்பிடுகிறேன். இயேசு வருவார் என்றுச் சொன்ன 'தேற்றரவாளனை' தம்முடைய சீடர்களுக்கு இயேசு வாக்குபண்ணினார். அதாவது பேதுரு, யோவான், மத்தேயூ போன்ற சீடர்கள் உயிரோடு இருக்கும் போதே 'தேற்றரவாளனை' அனுப்புவேன் என்று இயேசு சொன்னாரே தவிர, 600 ஆண்டுகளுக்கு பிறகு வரும் அரேபிய மக்களுக்காக 'தேற்றரவாளனை' அனுப்புவேன் என்று கூறவில்லை.
10. **உங்களோடு கூட அவர் (தேற்றரவாளன்) எப்போதும் இருப்பார்** என்று இயேசு கூறினார். இயேசுவின் காலத்தில் முஹம்மது வரவில்லை மற்றும் அவர் எப்போதும் மக்களோடு

இருக்கப்போவதுமில்லை. 63 ஆண்டுகள் வாழ்ந்து முஹம்மது மரித்துவிட்டார். ஆகையால் இயேசு கூறியது பரிசுத்த ஆவியானவரைத்தான், முஹம்மதுவை அல்ல என்பது திண்ணம்.

11. **இயேசு சீடர்களிடம் கூறும் போது,** அவர் உங்களுக்குள் வாழுகிறார், உங்களோடு இருக்கிறார் என்று கூறினார். முதல் நூற்றாண்டின் சீடர்களுக்குள் எப்படி 7ம் நூற்றாண்டில் வந்த முஹம்மது வாழமுடியும் அல்லது அவர்களோடு இருக்கமுடியும்?

எந்த வசனங்களை இஸ்லாமியர்கள் மேற்கோள் காட்டுகிறார்களோ அதே வசனங்களைக் கொண்டு இயேசு முன்னறிவித்தது பரிசுத்த ஆவியானவரைத் தான் முஹம்மதுவை அல்ல என்று தெளிவாக முடியும்.

எனவே, பரிசுத்த ஆவியானவர் பற்றிய முன்னறிவிப்பை, முஹம்மதுவிற்கு முடிச்சுப்போடுவது அறியாமையாகும். மேலும், கிறிஸ்தவத்தின் தொடர்ச்சி தான் இஸ்லாம் என்றுச் சொல்வதும் அடிப்படையிலிருந்தே தவறானதாகும்.

தம்பி, இதைப் பற்றி மேலும் அறிய நீ ஆவலாக இருந்தால், ஒரே ஒரு முறை புதிய ஏற்பாட்டை படித்துப்பார், பரிசுத்த ஆவியானவர் பற்றிய ஒரு சில வசனங்களை படித்து ஆராய்ந்துப்பார், உனக்கே உண்மை விளங்கும். மேலும் விளக்கம் தேவை என்று விரும்பினால், எனக்கு எழுது, நான் மறுபடியும் உனக்கு அதிக விளக்கங்களைத் தருவேன்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

மூலம்

உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்

---

## நாள் 6 – குர்-ஆனின் சிறந்த இலக்கிய நடையழகு?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

சாந்தியும் சமாதானமும் உனக்கு உண்டாகட்டும்.

நீ என் கடிதங்களை படித்து, எனக்கு பதில் எழுதுகிறபடியால் அதிக மகிழ்ச்சியாக இருக்கிறேன்.

தம்பி, உன் பதில் கடிதத்தில், நான் எழுதும் விவரங்கள் பற்றி இன்னும் ஆழமாக ஆராய்வதை விட்டுவிட்டு, அதைக் குறித்து என்னிடம் கேள்விகள் கேட்பதை விட்டுவிட்டு, நீ ஒரு தலைப்பிலிருந்து இன்னொரு தலைப்பிற்கு தாவுகிறாய். குர்-ஆனின் இலக்கிய நடையும், அழகும் உலகில் வேறு எந்த ஒரு நூலிலும், அல்லது வேதத்திலும் இல்லை என்று என்னிடம் சவால் விடுகிறாய். இந்த என்னுடைய கடிதத்தில் நீ குறிப்பிட்டு இருந்த விவரம் பற்றி ஆராய்வோம்.

பல நாட்களுக்கு முன்பு நான் ஒரு சிறிய கட்டுரையை படித்தேன், அது உன்னுடைய கேள்விக்கு பதில் அளிக்கும் என்று நம்புகிறேன். ஒரு மனிதன் கீழ்கண்ட விதத்தில் ஒரு வாதத்தை வைப்பதாக நினைத்துக்கொள்வோம்.

**1. உலகத்திலேயே என் மனைவி தாம் மிகவும் அழகான பெண்**

**2. உங்களால் முடிந்தால், இவளைப் போல இன்னொரு பெண்ணை கொண்டுவாருங்கள்!**

**3. உங்களால் முடியவில்லையானால், இவள் சொல்லும் அனைத்தும் உண்மையானது என்று நீங்கள் எல்லாரும் ஏற்றுக் கொள்ளவேண்டும்.**

தம்பி, மேற்கண்ட வாதம் சரியான வாதம் இல்லை என்று எண்ணுகின்றாய் அல்லவா? ஆம், நீ நினைப்பது சரியானது தான், அதாவது மேற்கண்ட வாதம் சரியான வாதமன்று. இதைப் போலத்தான் இஸ்லாமியர்கள் கூட "குர்-ஆன் பற்றிய வாதத்தை முன்வைக்கிறார்கள்". அதாவது, "உங்களால் முடிந்தால் குர்-ஆனை போல உள்ள ஒரு ஸூராவையோ வசனத்தையோ கொண்டுவாருங்கள், உங்களால் முடியவில்லையானால், குர்-ஆனை இறைவன் தான் இறக்கினான் என்று நீங்கள் நம்பவேண்டும், அது சொல்லும் அனைத்தையும் நீங்கள் நம்பவேண்டும்", இது தான் இஸ்லாமியர்களின் வாதம்.

ஒரு பெண்ணைப் பற்றி நாம் கவனித்தோமானால், அவளது அழகிற்கும், அறிவிற்கும் ஒற்றுமை எதுவுமே இல்லை. அதாவது அவள் அழகாக இருக்கிறாள் எனவே, நிச்சயமாக அவள் அறிவுள்ளவளாக ஞானியாக இருப்பாள் என்று எந்த ஒரு மனிதனும் முடிவு செய்யமுடியாது. இதே போலத்தான், குர்-ஆனின் இலக்கிய நடைக்கும், அதன் தெய்வீகத்திற்கும் இடையே எந்த ஒரு ஒற்றுமையும் இல்லை. உலகத்திலே இலக்கிய நடை அழகாக இருக்கும் நூல் நிச்சயமாக தெய்வீகமானது என்று உன்னால் கூறமுடியுமா? ஒருவேளை இலக்கிய நடை நன்றாக இருக்கும் புத்தகமெல்லாம் தெய்வீகமானது என்று ஒரு பேச்சுக்காக ஏற்றுக்கொண்டாலும், அந்த இலக்கிய நடை உலகிலேயே சிறந்தது என்று யார் முடிவு செய்வார்கள்? எந்த தரத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு இந்த முடிவை எடுப்பது?

ஒரு பெண்ணுடைய அழகும், ஒரு நூலுக்கு இருக்கும் இலக்கிய அழகும் ஒன்று தான். அதாவது பல வகையான மக்கள் பலவகையான விருப்பங்களை, கொண்டு இருப்பார்கள். உலகில் யாராவது வந்து:

• "என் மனைவி தான் உலகத்திலேயே அழகானவள் என்று நான் முடிவு செய்துவிட்டேன், எனவே உலகில் வேறு எந்த பெண்ணின் அழகும் என் மனைவியின் அழகிற்கு குறைவானதாகத் தான் இருக்கும்" என்று கூறினால், அது ஏற்றுக்கொள்ளக்கூடிய வாதமாக இருக்குமா?

• "என் வேதத்தில் உள்ள இலக்கிய அழகு தான் உலகில் சிறந்த இலக்கிய அழகு என்று நான் முடிவு செய்துவிட்டேன், எனவே உலகில் வேறு எந்த புத்தகத்தின் இலக்கிய அழகும் இதைவிட குறைவானதாகத் தான் இருக்கும்" என்று கூறினால், அது ஏற்றுக்கொள்ளக்கூடிய வாதமாக இருக்குமா?

சிலர் குர்-ஆனின் இலக்கிய நடை சிறந்தது என்பார்கள், வேறு சிலர் அது தவறு என்பார்கள். ஒரு கணவன் தன் மனைவி தான் 'உலக அழகி' என்றுச் சொல்கிறான், ஒரு முஸ்லிம் 'குர்-ஆனின் இலக்கிய அழகு உலகிலேயே சிறந்தது' என்றுச் சொல்கிறான். இவ்விதமாக இவர்கள் சொல்வதற்கு காரணமென்ன? ஒரு மனிதன் தன் மனைவியை உண்மையாக நேசித்தால், தன் மனைவி தான் உலகில் சிறந்தவள் என்று நம்பக்கூடும், ஆனால், மற்ற மனிதன் அந்தப் பெண்ணை அப்படி உலக அழகி என்று நினைக்கமாட்டார், இது உண்மையே. ஒருவருக்கு உலக அழகியாக தெரியும் பெண், எல்லாருக்கும் உலக அழகியாக தெரியும் என்று நாம் நிச்சயமாகச் சொல்லமுடியாது. காரணம் என்னவென்றால், மற்றவர்கள் அந்த பெண்ணோடு கொண்டு இருக்கும் உறவுமுறை கணவன் கொண்டு இருக்கும் உறவுமுறை போன்றதல்ல. தம் மனைவி மீது கொண்டுள்ள (குருட்டுத்தனமான)

அன்பினிமித்தம் கூட, அவளே உலகில் சிறந்த அழகி என்பான், அல்லது மனைவிக்கு பயப்படும் கணவனாக இருந்தால், மற்றவர்கள் முன்பு அவள் அவ்வளவு அழகி இல்லை என்று சொல்லமாட்டான்.

இதே போலத்தான், முஸ்லிம்கள் குர்-ஆனை (குருட்டுத்தனமாக) நேசிக்கிறார்கள், அதைப் பற்றி நல்லதையே பேசுவார்கள். ஒருவேளை குர்-ஆனில் காணப்படும் தீய விஷயங்கள் பற்றி பேச அவர்கள் பயப்படுகிறவர்களாக இருக்கலாம். குர்-ஆனைப் பற்றிய எதிர்மறை கருத்துக்களை வெளியே சொன்னால் என்ன தண்டனை கிடைக்கும் என்று இஸ்லாமியர்களுக்கு தெரியும்.

எனவே, "உலகத்திலேயே என் மனைவி தாம் மிகவும் அழகான பெண்" என்ற சவாலை யாராலும் சந்திக்கமுடியாது. இந்த மனிதன் தன்னையே "நீதிபதி" என்று கருதிக்கொண்டு தீர்ப்பை கொடுத்துவிட்டான், எனவே, இந்த விஷயத்தில் (அம்மனிதனின் மனைவி விஷயத்தில்) அவனை மிஞ்சி யாரும் தீர்ப்பு அளிக்கமுடியாது. ஒருவேளை இந்த மனிதனிடம் குறுக்குக் கேள்வி கேட்டால், நான் என்

*மனைவியின் உள்ளான அழகைச் சொன்னேன், இதனை அறிய உங்களால் முடியாது. (இதன் அர்த்தம் என்ன? ஒரு மனிதன் இந்த பெண்ணின் கணவனாக மாறினால் தவிர அந்த உள்ளான அழகு அவனுக்குத் தெரிய வாய்ப்புஇல்லை).*

*இதே வகையில் இஸ்லாமியர்களிடம், தர்க்க ரீதியான கேள்விகள் குர்-ஆன் பற்றி கேட்கும் போது, அரபியில் படித்தால் தான் குர்ஆனின் அழகு உங்களுக்கு தெரியும் என்பார்கள். சரி, எனக்கு அரபி நன்றாகத் தெரியும், குர்-ஆனை அரபியில் முழுவதுமாக படித்துவிட்டேன். ஆனால், அப்படியொன்றும் குர்-ஆனின் இலக்கிய அழகு சிறந்த அழகாக தெரியவில்லையே என்று அரபி அறிஞர்கள் கூறினால், அதற்கும் முஸ்லிம்களிடம் பதில் இருக்கும், அதாவது நீங்கள் முஸ்லிமாக மாறி அரபியில் படித்தால் தான் உள்ளான அழகு தெரியும், முஸ்லிமல்லாதவர்களுக்கு அதன் அழகு தெரியாது என்றுச் சொல்வார்கள்.*

*தம்பி, அந்த மனிதனுக்கும், இந்த முஸ்லிம்களுக்கும் இடையே ஏதாவது வித்தியாசம் இருப்பதாக உனக்குத் தெரிகின்றதா?*

*ஆக, உன்னுடைய சவால் அல்லது கேள்வி பிரயோஜனமற்ற ஒரு சவாலாக உள்ளது. உன் கேள்வி தர்க்க ரீதியாக எவ்வளவு பலவீனமானது என்று உனக்கு இப்போது புரிந்து இருக்கும்.*

*கடைசியாக முக்கியமான கேள்வியை கேட்கிறேன்: நீ இஸ்லாமியனாக மாறி ஒரு சில மாதங்களே ஆகியுள்ளது, இன்னும் ஒரு முறை கூட குர்-ஆனை அரபியில் நீ முழுவதுமாக படித்து இருந்திருக்கமாட்டாய். ஒருவேளை அரபியில் படித்து இருந்தாலும், பொருள் தெரியாமல் ஒரு இயந்திரம் போல மூளைக்கு எட்டாமல் படித்து இருந்திருப்பாய். இப்படி இருக்கும் போது, எந்த தைரியத்தில் "குர்-ஆனே உலகில் இலக்கிய நடையில் சிறந்தது என்று சவால் விடுகிறாய்?" அரபி மொழியே தெரியாத உனக்கு அரபி மொழி பற்றிய சவால் விடுவதற்கு உரிமை எங்கே இருந்து வந்தது? ஒரு மொழியை தெரிந்துக்கொள்ளாமல், அந்த மொழியில் இலக்கிய நடைப்பற்றி சவால் விடுவது அறிவுடமையாக உனக்கு தென்படுகின்றதா?*

*நான் உன் அண்ணன் என்பதால் நான் சொல்வதை அங்கீகரிக்கவேண்டும் என்பதில்லை, நீயே சுயமாக சிந்தித்துப்பார், ஆராய்ந்து பார் உனக்கே உண்மை புரியும்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு உன் அண்ணன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## *நாள் 7 – அல்லாஹ் தன்னை வணங்க இயந்திரங்களை படைத்துள்ளனா?*

*[அன்புள்ள தம்பிக்கு உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* ***இங்கு*** *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பி,*

*உனக்கு சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக.*

*எனக்கு நீண்ட நாட்களாக இஸ்லாமியர்களிடம் ஒரு குறிப்பிட்ட கேள்வியை கேட்கவேண்டும் என்ற ஆசை இருந்தது. அதை எந்த முஸ்லிமிடம் கேட்பது? இன்று அதற்கு எனக்கு நல்ல வாய்ப்பு கிடைத்துள்ளது, ஏனென்றால், என் தம்பி தன்னை ஒரு முஸ்லிம் என்று சொல்லியுள்ளான்.*

*என் கேள்வி இது தான்:*

## அல்லாஹ் தன்னை வணங்க படைத்தது இயந்திரங்களையா? அல்லது மனிதர்களையா?

தம்பி, நான் ஏன் இந்த கேள்வியை கேட்கிறேன் என்று உனக்கு புரிகின்றதா? அதாவது உனக்கு தமிழ், ஆங்கிலம் மற்றும் ஒரு சில இதர மொழிகள் தெரியும். உனக்கு அரபி மொழி தெரியாது என்று எனக்குத் தெரியும்.

ஆனால்,

- நீ அல்லாஹ்வை எப்படி தொழுதுக்கொள்கிறாய்? எவைகளைச் சொல்லி தொழுதுக்கொள்கிறாய்?
- உனக்கு புரியும் மொழிகளாகிய தமிழ் அல்லது ஆங்கிலத்தில் அல்லாஹ்வை தொழுதுக்கொள்கிறாயா? அல்லது அரபியில் தொழுதுக்கொள்கிறாயா?
- நீ நமாஜ் செய்யும் போது எந்த மொழியை முக்கியமாக பயன்படுத்துகிறாய்? எந்த மொழியில் கலிமாக்களை சொல்கிறாய்?
- நீ அரபியில் தான் நமாஜ் செய்கிறாய் என்பது நிச்சயம். அப்படியானால், நீ என்ன சொல்கிறாயோ அது உனக்கு புரிகின்றதா? அல்லது ஒரு டேப்ரிகார்டர் போல, மனப்பாடம் செய்ததை புரியாமல் ஒப்புவிக்கிறாயா?
- நீ அரபியில் சில வசனங்களை மனப்பாடம் செய்து, அவைகளை ஒப்புவிக்கிறாய் என்றால், நீ மனிதனா அல்லது இயந்திரமா?

இயந்திரங்களில் விவரங்களை சேமித்து வைத்துவிட்டால், தேவைப்படும்போதெல்லாம் அவைகள் ஒலிப்பெருக்கியில் வாசித்துத்தள்ளும். ஒரு இலட்சம் முறை அவைகளை அது வாசித்தாலும், அந்த இயந்திரத்திற்கு எந்த ஒரு உணர்வும், சொரணையும் இருக்காது. தான் வாசித்துத் தள்ளிய வார்த்தைகளில் உள்ள உண்மையும், கருத்துக்களும் அந்த இயந்திரத்திற்கு தெரியாது.

தம்பி, இந்த இயந்திரத்தைப் போல நீயும் அரபியில் தான் உன் இறைவனை தொழுதுக்கொள்கிறாயா? ஆம் என்று தான் நீ பதில் அளிக்கவேண்டும்.

உனக்கு புரியாத மொழியில் நீ எப்படி மற்றவர்களிடம் பேசுவாய்? உனக்கு புரியாதவற்றை ஒப்புவிப்பதினால், உன் உள்ளத்தில் எந்த ஒரு மாற்றமோ அல்லது பேசப்பட்ட வார்த்தைகளில் இருக்கும் பொருளோ புரியப்போவதில்லை, இதனால் என்ன பயன்? இப்படி செய்வதினால் இயந்திரத்திற்கும், உனக்கும் இடையே எந்த ஒரு வித்தியாசமும் இல்லை.

காது கேளாதவர்கள் செய்திகளை அறிந்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக செய்திகள் வாசிக்கும் போது, "காது கேளாதவர்கள் புரிந்துக்கொள்ள சைகை மூலமாக" செய்திகளை தெரிவிக்கிறார்கள். உலக செய்திகளுக்கே இவ்வளவு முக்கியத்துவம் என்றால், இறைவனை தொழுதுக்கொள்வதற்கு எவ்வளவு முக்கியத்துவம் இஸ்லாம் கொடுத்திருக்கவேண்டும்? உலக விஷயங்களுக்கே இவ்வளவு முக்கியத்துவம் என்றால், ஆன்மீக விஷயங்களுக்கு எவ்வளவு முக்கியத்துவம் தரவேண்டும்?

தம்பி, உனக்கு "பிரைலி" என்று ஒன்று இருப்பது தெரியுமா? அதாவது கண்கள் தெரியாதவர்கள் படித்து தெரிந்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக உருவாக்கப்பட்ட ஒரு எழுத்துமுறையாகும். எனக்கு கண்கள் தெரியாது எனவே நான் படிக்கவில்லை, உலகை புரிந்துக்கொள்ள வில்லை என்று யாரும் இந்த காலத்தில் சொல்லமாட்டார்கள். ஆனால், கண்கள் இருந்தும், காதுகள் இருந்தும், இன்னும் நீ உன் இறைவனை புரியாமலேயே தொழுதுக்கொள்கிறாய். என்ன ஆச்சரியம் பார்த்தாயா? குருடர்கள் பிரைலி முறையை கற்றுக்கொண்டு படித்து தெரிந்துக்கொள்கிறார்கள், காது கேளாதவர்கள் கூட சைகை மொழியை கற்றுக்கொள்கிறார்கள், ஆனால் நீ என்ன செய்யப்போகிறாய்?

ஒரு உண்மையான இறைவன், தன்னை வணங்கும் மனிதர்கள் வெறும் மனப்பாடம் செய்த வசனங்களை தலை கால் புரியாமல் மடமடவென்று ஒப்புவிப்பதை விரும்புவானா? அல்லது தன்னை வணங்கும் மனிதன் தன் இருதய ஆழத்திலிருந்து நான்கு வார்த்தைகளைச் சொல்லி, இறைவனை புகழ்ந்து, அவன் செய்த நன்மைகளை நினைத்து, நன்றி சொல்லுவதை விரும்புவானா? இறைவனை

தொழுதுக்கொள்கின்றவர்கள் உண்மையோடும், தாம் பேசும் வார்த்தைகளின் பொருளை புரிந்துக்கொண்டும் தொழவேண்டும் என்று பரிசுத்த பைபிளில் இயேசு கூறியுள்ளார்.

மனிதனுக்குத் தான் இயந்திரங்கள் தேவை, இறைவனுக்கு மனிதன் தான் தேவை இயந்திரங்கள் அல்ல.

ஒரு மனிதன் 50 ஆண்டுகள் இஸ்லாமியனாக வாழ்ந்து, ஒவ்வொரு நாளும் 5 வேளை தொழுகிறான் என்று வைத்துக்கொள்வோம். இந்த 50 ஆண்டுகளில் அவன் (50*365*5) 91250 முறை தொழுகை செய்வான், ஆனால், தனக்கு புரியாத, மொழியில் இத்தனை முறை தொழுதுக்கொண்டும், எந்த ஒரு பயனும் அவனுக்கு கிட்டுவதில்லை. பெயரளவிற்கு ஒரே பயன் மட்டும் கிட்டும் என்றுச் சொல்லிக்கொள்ளலாம், அது என்ன? "நான் இஸ்லாமிய கடைமையை நிறைவேற்றினேன் (என்ன செய்கிறோம் என்று புரிந்துக்கொள்ளாமலேயே). அதாவது, படிப்பு படிக்காமலேயே பெயருக்கு பின்னால், M.A. MSc. என்று சிலர் எழுதிக்கொள்கிறார்களே, அது போல நானும் இறைவனை தொழுதுக்கொண்டேன் என்ற வரட்டு திருப்தி மட்டும் கிடைக்கும். இதனை இறைவன் அங்கீகரிப்பான் என்று நீ நினைக்கிறாயா?

"அல்லாஹ் தான் இப்படி சொல்லியுள்ளான்" என்று நீ சொல்லலாம், இப்போது கேள்வி அதுதான், இயந்திரங்களைப் போல தன்னை வணங்க உண்மையான இறைவன் விரும்புவானா? "ஆம்" என்று நீ சொன்னால் அவன் உண்மையான இறைவன் இல்லை என்பது தான் உண்மை.

நீ இவைகளைப் பற்றி சிறிது சிந்துத்துப்பார்க்கவேண்டுமென்று உன்னை உற்சாகப்படுத்துகிறேன்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்,

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

---

## நாள் 8 - அல்லாஹ்வின் சொர்க்கத்தில் நுழைந்த முதல் நாள்

[அன்புள்ள தம்பிக்கு உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பி,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

குர்-ஆன் பற்றியும், இஸ்லாமிய தொழுகைப்பற்றியும் அதிகமாக எழுதிவிட்டேன். அல்லாஹ்வின் சொர்க்கம் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுத விரும்புகிறேன். சில விஷயங்கள் உரைநடையில் படித்தால் கருத்து விளங்கும், சில முக்கியமான காரியங்களை நாடகவடிவில் அல்லது கதை வடிவில் விளக்கினால், அதன் சாரம் சரியாக புரியும், எனவே இந்த கடிதத்தில் ஒரு கதையைப் போல உனக்கு ஒரு விஷயத்தை தெளிவாக்க விரும்புகிறேன்.

**நான் உனக்கு ஒரு சூழ்நிலையை விளக்குகிறேன், அதை கேட்டுவிட்டு, எனக்கு நீ பதில் அளிக்கவேண்டும்.**

நீ ஒரு பட்டணத்திற்குள் முதல் முறை நுழைகிறாய், அது உலகிலேயே மிகவும் அழகான பட்டணம். எங்கு பார்த்தாலும் மக்கள் அழகான வீடுகளில் உட்கார்ந்துக்கொண்டு, பழங்கள் சாப்பிட்டுக்கொண்டும், பானங்கள் பருகிக்கொண்டும், அனேக பெண்களோடு உள்ளாசமாக உடலுறவில் ஈடுபட்டுக்கொண்டும் இருக்கிறார்கள். இந்த நிகழ்ச்சி ஏதோ ஒரு வீட்டில் நடக்கும் நிலை அல்ல, ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரம் நடக்கும் நிகழ்ச்சி அல்ல, தொடர்ந்து நித்திய நித்தியமாக இது நடந்துக்கொண்டே இருக்கிறது. ஒரு கையில் பானம், இன்னொரு கையில் சோலைமயில், எப்போது பார்த்தலும், எங்கு பார்த்தாலும் ஆண்கள்

*அழகான பெண்களோடு உடலுறவில் ஈடுபட்டுக்கொண்டு இருக்கிறார்கள். அதுவும் ஒரே பெண்ணுடன் இல்லை, பல பெண்களுடன். இவைகளைக் கண்டவுடன் 'ஒரு சராசரி ஆண் எப்படி இப்படி தொடர்ந்து உடலுறவில் ஈடுபடமுடியும், விஞ்ஞானத்தின் படி இது முடியாதல்லவா?" என்ற கேள்வி உன் மனதில் எழுகிறது. உடனே உன் செவிகளில் 'இம்மக்களின் இறைவன், இவர்களுக்கு இப்படிப்பட்ட விநோத சக்தியை கொடுத்துள்ளான்' என்ற சத்தம் கேட்கிறது.*

*இப்பொழுதுச் சொல், நீ சென்றுக்கொண்டு இருந்த இடத்திற்கு என்ன பெயர் வைப்பாய்?*

- *பரிசுத்தமான இறைவன் தங்கும் இடமா?*
- *அல்லது பரிசுத்தமில்லாத பட்டணமா?*

*இவைகளைக் கண்டால் ஒரு விபச்சார விடுதிபோலவும், விபச்சார பட்டணம் போலவும் காட்சி அளிக்கிறது.*

தம்பி, இது வேறு எந்த இடமும் இல்லை, நீ வணக்கும் அல்லாஹ்வின் சொர்க்கம் ஆகும். இம்மக்களுக்கு இப்படிப்பட்ட அதீத சக்தியை கொடுக்கப்போகிறவர் வேறு யாருமில்லை, தினமும் ஐந்து வேளை நீ தொழுதுக்கொள்ளும் அல்லாஹ் தான். இஸ்லாமின் அல்லாஹ், முஸ்லிம்களுக்கு 100 ஆண்களின் சக்தியை கொடுத்து, மேலும் அவர்கள் உடலுறவுக்கு பெண்களை தயார்படுத்தியும் கொடுக்கிறார்.

*கீழ்கண்ட வசனங்களை ஒரு முறை படித்துப்பார், முக்கியமாக இவ்வசனங்கள் பற்றி இஸ்லாமிய விரிவுரையாளர்களாகிய இப்னு கதீர் போன்றவர்களின் விரிவுரையை நீயே படித்துப்பார். மேலும், இஸ்லாமிய சொர்க்கம் பற்றிய பயான்களை கேட்டுப்பார்.*

*அவற்றில் அடக்கமான பார்வையுடைய (அமரு) கன்னியர் இருக்கின்றனர். அவர்களை இவர்களுக்கு முன்னர் எந்த மனிதனும், எந்த ஜின்னும் தீண்டியதில்லை. (குர்-ஆன்* 55:56)

[*எந்த மனிதனும், ஜின்னும் இப்பெண்களை தொடவில்லை என்று அல்லாஹ் ஏன் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்? ஆண்களின் ஆர்வத்தை அதிகமாக தூண்டும் வண்ணமாக அல்லாஹ் தன் வஹியை இறக்கியுள்ளார். நிச்சயமாக இது உண்மை இறைவனின் வசனமாக இருக்கமுடியாது]*

*அவற்றில், அழகு மிக்க நற் குணமுள்ள கன்னியர் இருக்கின்றனர். (குர்-ஆன்* 55:70)

*ஹூர் (என்னும் அக்கன்னியர் அழகிய) கூடாரங்களில் மறைக்கப்பட்டிருப்பர். (குர்-ஆன்* 55:72)

*அவர்களை இவர்களுக்கு முன்னர் எந்த மனிதனும், எந்த ஜின்னும் தீண்டியதில்லை. (குர்-ஆன்* 55:74)

*(அவர்கள்) பசுமையான இரத்தினக்கம்பளங்களின் மீதும், அழகு மிக்க விரிப்புக்கள் மீதும் சாய்ந்தவர்களாக இருப்பார்கள். (குர்-ஆன்* 55:76)

*(அங்கு இவர்களுக்கு) ஹூருல் ஈன் (என்னும் நெடிய கண்களுடைய) கன்னியர் இருப்பர். (குர்-ஆன்* 56:22)

*நிச்சயமாக (ஹூருல் ஈன் என்னும் பெண்களைப்) புதிய படைப்பாக, நாம் உண்டாக்கி, (குர்-ஆன்* 56:35)

*அப்பெண்களைக் கன்னிகளாகவும், (குர்-ஆன்* 56:36)

*(தம் துணைவர் மீது) பாசமுடையோராகவும், சம வயதினராகவும், (குர்-ஆன்* 56:37)

*வலப்புறத்தோருக்காக (ஆக்கி வைத்துள்ளோம்). (குர்-ஆன்* 56:38)

*ஒரே வயதுள்ள கன்னிகளும். (குர்-ஆன்* 78:33)

*பானம் நிறைந்த கிண்ணங்களும், (இருக்கின்றன). (குர்-ஆன்* 78:34)

*(முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம்)*

*நீ இவைகளைக் கண்டு சிறிது வேதனைப்பட்டு இருப்பாய், ஆனால், நாம் ஒன்றும் செய்வதற்கில்லை, இது தான் இஸ்லாமிய சொர்க்கம். இஸ்லாமின்படி ஒவ்வொரு ஆணுக்கும் 100 ஆண்களின் சக்தியை அல்லாஹ் கொடுப்பாராம். ஒரு நாளுக்கு ஒரு ஆண் 100 பெண்களிடம் உடலுறவு கொள்ளமுடியும். இஸ்லாமிய இறைவன் எவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார் என்பதை கவனி.*

*இஸ்லாமின் சொர்க்கத்தில் வெறும் கன்னிகள் மட்டும் கிடைப்பார்கள் என்று நான் சொல்லவில்லை, கனிவகைகள், மயக்கம் வராத பானங்கள் என்று அனேகம் உண்டு என்று குர்-ஆன் கூறுகிறது. இஸ்லாமிய பரலோகில் முஸ்லிம்கள் உடலுறவு கொள்வதற்காகவே அழகான பெண்களை படைப்பதாக அல்லாஹ் கூறுகிறார். இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால், இஸ்லாமிய பெண்களுக்கும் சொர்க்கத்தில் கணவரல்லாத ஆண்களோடு உடலுறவு கொள்ள அல்லாஹ் வகை செய்வானாம். ஒரு முறை பீஜே என்ற இஸ்லாமிய அறிஞர், இஸ்லாமிய ஆண்களுக்கு புதிய பெண்கள் கிடைப்பது போல, இஸ்லாமிய பெண்களுக்கும் புதிய ஆண்கள் கிடைப்பார்கள் என்று கூறுகிறார், என்னே அல்லாஹ்வின் சொர்க்கம்!*

*உனக்கு யெகோவா தேவனின் பரலோகம் பற்றி தெரியுமல்லவா?*

*இறைவன் இருக்கும் இடம் பரிசுத்த இடமாகும், அங்கு பெண் கொடுப்பதுமில்லை, பெண் கொள்வதுமில்லை என்று பைபிள் சொல்கிறது. முக்கியமாக, உடலுறவு என்பது மனித இனம் பூமியில் பெருக இறைவன் அமைத்த ஒரு வழியாகும். அது பரலோகில் தேவையேயில்லை.*

*தம்பி, உன்னிடம் தனிப்பட்ட முறையில் சில கேள்விகளை கேட்க விரும்புகிறேன்:*

*உனக்கு அல்லாஹ் அனேக பெண்களை சொர்க்கத்தில் கொடுக்கவேண்டுமென்று விரும்புகிறாயா?*

*இறைவன் இருக்கும் இடத்தில் ஒரு ஆண் அனேக பெண்களுடன் உடலுறவில் ஈடுபடுகிறார்கள் என்ற கோட்பாட்டை நீ ஜீரணித்துக் கொள்கிறாயா? அல்லது இதுவரை இந்த விவரம் பற்றி உன் இஸ்லாமிய நண்பர்கள் உன்னிடம் கூறவே இல்லையா?*

*பைபிளின் பரலோகம் மற்றும் குர்-ஆனின் சொர்க்கம், இவைகளில் எது சரியானதாக இருக்கும் என்று நீ நினைக்கிறாய்? இஸ்லாமியனாக மாறிய நீ, விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், இஸ்லாமிய சொர்க்கமே சரியானது என்பதை நம்பவேண்டும். இதைப் பற்றி உன் தனிப்பட்ட கருத்தை அறிய விரும்புகிறேன்.*

*தம்பி, நீ இதைப்பற்றி அதிகமாக ஆய்வு செய்யவேண்டும் என்று உனக்கு ஆலோசனை சொல்கிறேன். இந்த கடிதத்தில் நான் சொன்ன விவரங்கள் சரியானவையா இல்லையா என்பதை நீயே சோதித்துப்பார். இமாம்கள், அறிஞர்கள் இந்த சொர்க்கம் பற்றி அதிகம் பேசி இஸ்லாமிய ஆண்களை மூளைச் சலவை செய்வதாக ஒரு குற்றச்சாட்டும் உண்டு, அதாவது ஜிஹாதில் ஆண்கள் ஈடுபடவேண்டும் என்பதற்காக இப்படி செய்வதாக கேள்விப்பட்டுள்ளேன்.*

*ஒரு தம்பியிடம் இஸ்லாமிய சொர்க்கம் பற்றி பேச வெட்கமாகத் தான் உள்ளது, ஆனால், என்ன செய்யமுடியும் சிலருக்கு சில சத்தியங்கள் சொல்ல இவைகளை சொல்லவேண்டியுள்ளது. நீ எல்லாவற்றையும் சோதித்துப்பார்த்து நலமானதைப் பற்றிக்கொள்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு, உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

## நாள் 9 - இஸ்லாமியர்களின் நோன்பு இயேசுவின் நோன்பா?

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* ***இங்கு*** *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பி,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*நீ ஒரு அருமையான கடிதத்தை எழுதியிருந்தாய். பைபிளின் வசனங்களை மேற்கோள் காட்டி கடிதம் எழுதினாய், அதற்காக மிக்க மகிழ்ச்சியாக இருக்கிறேன்.*

*என்னுடைய முதல் கடித்தத்தில் நான் முன்வைத்த விவரத்திற்கு நீ பதிலை எழுதினாய், அதாவது இஸ்லாமியர்களின் நோன்பு என்பது ஏதோ பழங்குடி மக்களின் சடங்காச்சரமல்ல, அது இஸ்லாமுக்கு முன்பு வாழ்ந்த மக்களின் வழக்கமல்ல, அது இயேசு பின்பற்றிய நோன்பு, யூதர்கள் பின்பற்றிய நோன்பு என்றுச் சொல்லி பதில் எழுதியிருந்தாய். அதற்காக, கீழ்கண்ட மூன்று பைபிளின் வசனங்களை மேற்கோள் காட்டியிருந்தாய்.*

***இயேசு 40 நாட்கள் நோன்பு (உபசாவம்) இருந்தார்:*** *மத்தேயு 4:2 அவர் இரவும் பகலும் நாற்பது நாள் உபவாசமாயிருந்தபின்பு, அவருக்குப் பசியுண்டாயிற்று.*

***இவ்விதமான பிசாசு உபவாசத்திலும்,ஜெபத்தினாலுமே தவிர போகாது*** *– மத்தேயு 17:21 இந்த ஜாதிப்பிசாசு ஜெபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தினாலும் புறப்பட்டுப்போகாது என்றார்.*

***நோன்பு இருக்கும் போது மாயக்காரரைப்போல இருக்கவேண்டாம் என்று இயேசு கூறிய அறிவுரை:*** *– மத்தேயு 6:16 நீங்கள் உபவாசிக்கும்போது, மாயக்காரைப்போல முகவாடலாய் இராதேயுங்கள்; அவர்கள் உபவாசிக்கிறதை மனுஷர் காணும் பொருட்டாக, தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.*

*17 நீயோ உபவாசிக்கும்போது, அந்த உபவாசம் மனுஷர்களுக்குக் காணப்படாமல், அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படியாக, உன் தலைக்கு எண்ணெய் பூசி, உன் முகத்தைக் கழுவு.*

*18 அப்பொழுது, அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா உனக்கு வெளியரங்கமாய்ப் பலனளிப்பார்.*

*உன்னுடைய பதிலுக்காக மிக்க நன்றி, ஆனால் மேற்கண்ட வசனங்களை காட்டி நீ எடுத்த முடிவு தவறானதாகும், அதாவது இஸ்லாமிய நோன்பும், பைபிளின் நோன்பும் ஒன்று தான் என்று நீ நினைத்துக்கொண்டாய். மேலோட்டமாக வசனங்களை நாம் பார்த்தால், இரண்டும் ஒன்று போல காட்சி அளிக்கும், ஆனால், சிறிது ஆய்வு செய்தோமானால் அனேக வித்தியாசங்கள் காணப்படும். நீ மேற்கோள் காட்டிய வசனங்களிலிருந்தே உனக்கு நான் சில விவரங்களை விளக்குகிறேன்.*

***இஸ்லாமிய நோன்பிற்கும், கிறிஸ்தவ நோன்பிற்கும் இடையே இருக்கும் வித்தியாசங்கள்:***

1. *இஸ்லாமிய நோன்பு என்பது இஸ்லாமிய கடமைகளில் ஒரு கடமையாகும். அதை தகுந்த காரணங்கள் இல்லாமல் மீறுவது இஸ்லாமிய சட்டத்தின் படி குற்றமாகும். ஆனால், கிறிஸ்தவத்தில் நோன்பு (உபவாசம்) என்பது நிச்சயமாக கடைபிடிக்கவேண்டிய கடமையல்ல. நம்முடைய தேவையை பொருத்து நாம் கடைபிடிக்கலாம். பழைய ஏற்பாட்டு காலத்தில் ஒரு ஆபத்து வந்தாலோ, யாராவது மரித்துவிட்டாலோ யூதர்கள் உபவாசம் இருப்பார்கள். யூதர்களுக்கு மோசேயின் மூலமாக ஒரு குறிப்பிட்ட நாளில் உபவாசம் இருக்கும்படி கூறப்பட்டுள்ளது.*
2. *இஸ்லாமிய நோன்பு என்பது அதிகாலை ஆரம்பித்து, சூரியன் அஸ்தமிக்கும் வரை தொடருகிறது, ஆனால், கிறிஸ்தவ உபவாசம் என்பது நாள் முழுவதும் தொடரும். இத்தனை மணிக்கு ஆரம்பித்து, இத்தனை மணிக்கு முடிக்கவேண்டும் என்ற நிபந்தனை இல்லை. பழைய மற்றும் புதிய ஏற்பாட்டில் நாள் முழுவதும் உபவாசம் இருந்ததாக அனேக எடுத்துக்காட்டுகளை*

காணலாம். இதுமட்டுமல்லாமல், யூதர்கள் தனிப்பட்ட ஒரு நாள் உபவாசம் இருக்கும் போது, ஒரு நாளின் மாலையில் ஆரம்பித்து மறுநாள் மாலைவரை இருப்பார்கள் (முழு நாள்).

3. இஸ்லாமில் வருடத்திற்கு ஒரு முறை ரமளான் மாதத்தில் 30 நாட்கள் நோன்பு இருக்கவேண்டும் என்பது கட்டளை, ஆனால், கிறிஸ்தவத்திலே வருடத்தின் இந்த குறிப்பிட்ட மாதம் இத்தனை நாட்கள் நோன்பு இருக்கவேண்டும் என்ற கட்டளையில்லை. அவரவருக்கு விருப்பமான நாட்களில், விருப்பமான எண்ணிக்கையில் உபவாசம் இருப்பார்கள்.
4. இஸ்லாமிய நோன்பில், அதிகாலையில் எழுந்திருந்து, சாப்பிடுவார்கள், கிறிஸ்தவத்திலே இப்படி அதிகாலையில் எழுந்து சாப்பிடும் கட்டளையில்லை.
5. முக்கியமாக, இஸ்லாமிலே ஒரு குறிப்பிட்ட மாதம் ஒதுக்கி ரமளான் நோன்பு இருப்பதினால், எல்லாருக்கும் இவர் நோன்பு இருக்கிறார் என்பது தெரியவரும். ஆனால், கிறிஸ்தவத்தில் ஒருவன் உபவாசம் இருக்கிறேன் என்று சொன்னால் தவிர வெளியே தெரிய வழியில்லை. இஸ்லாமியர்களின் ரமளான் நோன்பு மத்தேயு 6ம் அதிகாரத்தில் இயேசு சொன்ன அறிவுரைக்கு எதிராக இருக்கிறது. அதாவது வெளிப்படையான ஒன்றாக இருக்கிறது.
6. இஸ்லாமிய ரமளான் நோன்பு என்பது இஸ்லாமிய கடமைகளில் ஒன்றாக இருப்பதினால், ஒருவேளை நோன்பு வைக்கமுடியாதவர்கள் அதற்கான பரிகாரங்கள் செய்யவேண்டும். ஆனால், கிறிஸ்தவ உபவாசத்தில் இப்படிப்பட்ட பரிகாரங்கள் ஒன்றுமில்லை.
7. ரமளான் மாதம் நோன்பு என்றுச் சொல்கிறீர்களே தவிர, மீதமுள்ள மாதங்களில் உணவுக்கு செலவாகும் பணத்தை விட ரமளான் மாதத்தில் அதிகமாக செலவாகும். அதாவது உணவு பணடங்களின் விற்பனையும் இரண்டு அல்லது மூன்று மடங்கு அதிகமாக ஆகிறது. ஏதோ அதிகாலையிலிருந்து மாலைவரை நோன்பு இருக்கிறார்கள், மீதமுள்ள பாதி நாள் நன்றாக சாப்பிடுகிறார்கள். இப்படி பாதி நாள் நன்றாக சாப்பிடுவதை நான் தவறு என்றுச் சொல்லவில்லை, ஆனால், இப்படிப்பட்ட வழக்கங்கள் கிறிஸ்தவத்தில் இல்லை என்றுச் சொல்கிறேன், அவ்வளவு தான்.
8. புகாரி ஹதீஸில் "ரமளான் மாதத்தில் நம்பிக்கையுடனும், நன்மையை எதிர்ப்பார்த்தும் நோன்பு நோற்கிறவர்களின் முந்தைய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன" என்று கூறப்பட்டுள்ளது. ஆனால், கிறிஸ்தவத்தில் உபவாசம் இருப்பதினால் நம்முடைய முந்தைய பாவங்கள் மன்னிக்கப்படும் என்ற கோட்பாடு இல்லை. (புகாரி பாகம் 2, அத்தியாயம் 30, எண் 1901). இயேசுக் கிறிஸ்துவின் மீது விசுவாசம் வைத்து, நம்முடைய பாவங்களை அவர் சிலுவையில் சுமந்து தீர்த்தர் என்பதை நம்பி, மேற்கொண்டு பாவமில்லாத வாழ்க்கையை வாழ நம்மை ஒப்புக்கொடுப்பதினால் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.

இஸ்லாமிய நோன்பிற்கு, கிறிஸ்தவ உபவாசத்திற்கும் இடையே இருக்கும் வித்தியாசத்தை கண்டாய், ஆனால், இஸ்லாமிய நோன்பிற்கும், சேபியன்கள் என்ற ஜனங்களுக்கும் இடையே இருக்கும் ஒற்றுமையை காண்போமானால், உனக்கு ஆச்சரியமாக இருக்கும். இந்த சேபியன்கள் ரமளான் மாதத்தில் நோன்பு இருப்பார்கள், காபாவை மதிப்போடு தெய்வீகமாக கருதுவார்கள் மற்றும் தாங்கள் தொழுதுக்கொள்ளும் போது காபாவை நோக்கிய தொழுவார்கள். இவர்களைப் பற்றி குர்-ஆனில் குறிப்பு உண்டு, இவர்களை நம்பிக்கையாளர்களின் பட்டியலில் குர்-ஆன் சேர்த்து பேசுகிறது (குர்-ஆன் 2:62, 5:69 & 22:17 பார்க்க **answering-islam.org/Silas/pagansources.htm**)

தம்பி, இஸ்லாமிய நோன்பும், பைபிளின் நோன்பும் ஒன்றல்ல. சேபியன்கள் பின்பற்றிய பழக்கங்களை, மத சடங்காச்சாரங்களை ஓர் இறைக்கொள்கை என்றுச் சொல்லிக்கொள்கின்ற இஸ்லாமில் முஹம்மது புகுத்தியுள்ளார்.

கிறிஸ்தவ மற்றும் யூதர்களை குறிப்பிடும் போது குர்-ஆன் மூன்று இடங்களில் சேபியன்களையும் குறிப்பிடுகிறது. இஸ்லாம் ஓர் இறைக்கொள்கை என்று சொல்லிக்கொண்டாலும், அதில் அனேக பல தெய்வ வழிபாட்டு மக்களின் பழங்கங்கள் உள்ளன என்பது திண்ணம். இதுமட்டுமல்ல, அஷூரா நாள் நோன்பு கூட யூதர்கள் கடைபிடிக்கிறார்கள் என்பதால் முஹம்மது கடைபிடிக்க ஆரம்பித்தார். ரமளான் மாத நோம்பு கடமையாக்கப்பட்டதும் இந்த அஷூரா நோன்பு தளர்த்தப்பட்டது.

தம்பி, நீ எழுதிய விவரங்கள் தவறானதாகும், அதாவது இயேசுவின் நோன்பும், இஸ்லாமிய நோன்பும் ஒன்றல்ல. பைபிளில் காணப்படும் அனேக விவரங்களை, நிகழ்ச்சிகளை நாம் குர்-ஆனில் காண்பது உண்மை தான், ஆனால் குர்-ஆனில் காணப்படும் தொழுகை, மற்றும் நோன்பு போன்ற விவரங்கள் மட்டும்

*பைபிளிலிருந்து எடுக்கப்பட்டதல்ல, அவைகள் இஸ்லாமுக்கு முன்பு இருந்த பல தெய்வ வழிப்பாட்டு மக்கள் பின்பற்றிய பழக்கங்களாகும்.*

*உன்னை அடுத்த கடித்ததில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## நாள் 10 - தாவீது ராஜாவின் அயலான் முஹம்மது ஆகமுடியுமா?

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* ***இங்கு*** *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு*

*உன்மீது சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக.*

*நீ எழுதிய கடிதத்திற்காகவும், கேள்விக்காகவும் மிக்க நன்றி.*

*உன் கடிதத்தில் நீ கீழ்கண்ட குற்றச்சாட்டை வைத்தாய்:*

*"தீர்க்கதரிசிகள் பாவம் செய்தார்கள் என்று பைபிள் சித்தரிக்கிறது, நபிகள் பாவம் செய்வார்களா? தாவீது பாவம் செய்தார் என்றுச் சொல்வது ஏற்கத்தக்கது அல்ல. முஹம்மது பாவம் செய்யாத ஒரு மேன்மையான மனிதராக இருக்கிறார் என்று இஸ்லாம் சொல்கிறது. ஆனால் பைபிள் நபிகளை குற்றப்படுத்துகிறது. இது தவறல்லவா?"*

*இன்று நான் 2 சாமுவேல் புத்தகத்தில் 11ம் 12ம் அதிகாரங்களை வாசித்தேன். உடனே உன் கேள்வி எனக்கு ஞாபகம் வந்தது. இறைவேதத்தில் உனக்கு பிடித்த கதாபாத்திரங்களில் ஒன்றான தாவீது ராஜாவின் (தாவூத் நபி) சம்பவம் அங்கேயிருந்தது. உன் சிறுவயது முதல் நீ நேசித்த கதாபாத்திரம் இந்த தாவீது. இன்றும் உனக்கு 23ம் சங்கீதமும், தாவீது கோலியாத் நிகழ்ச்சி ஞாபகத்தில் இருக்கும் என்று நம்புகிறேன். ஆனால் நீ இப்போது முஹம்மதுவை நேசிக்கிறாய். அது உன்னுடைய சுதந்திரம். ஆனால் இந்த இரண்டு கதாபாத்திரங்களின் வாழ்வில் நடந்த ஒரு நிகழ்ச்சியை உனக்காக இந்த கடிதத்தில் பகிர்ந்து கொள்கிறேன். உன்னுடைய கேள்விக்கும் இது பதிலாக அமையும். முடிவை உன்னுடைய சிந்தனைக்கு விட்டு விடுகிறேன்.*

*ஒரு நாள் தாவீது ராஜா, தனது படைகளை யோவாபின் தலைமையில் யுத்தத்துக்கு அனுப்பிவிட்டு அரண்மனையில் இருக்கிறான். மொட்டை மாடியில் உலாவிக்கொண்டிருக்கும் பொழுது ஒரு அழகிய பெண் குளித்துக்கொண்டிருப்பதை காண்கிறான். அவள் அழகில் மயங்கிய ராஜா அவளை பற்றி விசாரித்து சொல்லுமாறு தனது சேவகர்களுக்கு கட்டளையிடுகிறான். அவள் உரியாவின் மனைவி என்று ராஜாவுக்கு அறிவிக்கப்பட்டது. தாவீது ராஜா அவளை வரவழைத்து அவளுடன் உடலுறவு கொள்கிறான். மீண்டும் அவளை அவள் வீட்டிற்கே அனுப்பி விடுகிறான். இந்த உரியா தன் இராணுவத்தில் வேலை செய்யும் தேச பக்தியுள்ள ஒரு போர் சேவகனாக இருக்கிறான். மேலும் ஒரு சதி செய்து, உரியா போரில் கொல்லப்பட திட்டம் தீட்டுகிறான். ராஜாவின் திட்டப்படியே உரியா மரணிக்கிறான். ஹித்தா (துக்க) காலம் முடிந்தவுடன் உரியாவின் மனைவியாகிய பெத்சேபாலை அழைத்து ராஜா திருமணம் செய்துகொள்கிறான். இந்த பாவத்திற்கு தேவன் தண்டனை கொடுத்தார்.*

*தம்பி, இந்த நிகழ்ச்சி போதிக்கும் சில படிப்பினைகளை முதலில் உன்னோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.*

- ஒரு இராஜாவின் கடமை போர்காலத்தில் போருக்கு செல்வதாகும். தாவீது தனது கடமையை தவறினான்.
- அந்த காலத்தில் ஒரு ராஜா விரும்பினால் எத்தனை திருமணங்களையும் செய்யலாம். ஒரு பெண், இன்னொருவனின் மனைவியென்று அறிந்தும் அவளை அழைத்து உடலுறவு கொண்டான்.
- ராஜா திட்டமிட்டு அவள் கணவரை கொன்றான்.

தம்பி, நாங்கள் செய்யும் பாவங்களை அறியாமல் செய்தோம் என்று சாக்குபோக்கு சொல்லமுடியாது. இறைவன் தீமைகளால் எம்மை சோதிக்கிறவரல்ல என்று இறைவேதம் சொல்கிறது. இங்கு தாவீது ராஜா எல்லாம் தெரிந்தும் தனது இச்சைக்கு கீழ்படிந்தான் என்பது புலனாகின்றது.

சரி தம்பி, இப்பொழுது நீ உயிரிலும் மேலாய் நேசிக்கும் முஹம்மதுவின் வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவத்தை பார்ப்போம்.

**முஹம்மதுவின் (வளர்ப்பு) மகன் தன் தகப்பனிடம் வந்து** "நான் என் மனைவியை விவாகரத்து செய்ய போகிறேன், நீங்கள் அவளை திருமணம் செய்துக்கொள்ளுங்கள் என்று கூறுகிறான், இதனை குர்-ஆன் 33:37ல் காணலாம். அந்த வசனத்தை ஒரு முறை படிப்போமா?

(நபியே!) எவருக்கு அல்லாஹ்வும் அருள் புரிந்து, நீரும் அவர் மீது அருள் புரிந்தீரோ, அவரிடத்தில் நீர்; "அல்லாஹ்வுக்குப் பயந்து நீர் உம் மனைவியை (விவாக விலக்குச் செய்து விடாமல்) உம்மிடமே நிறுத்தி வைத்துக் கொள்ளும்" என்று சொன்ன போது அல்லாஹ் வெளியாக்க இருந்ததை, மனிதர்களுக்குப் பயந்து நீர் உம்முடைய மனத்தில் மறைத்து வைத்திருந்தீர்; ஆனால் அல்லாஹ் அவன் தான், நீர் பயப்படுவதற்குத் தகுதியுடையவன்; ஆகவே ஜைது அவளை விவாக விலக்கு செய்துவிட்ட பின்னர் நாம் அவளை உமக்கு மணம் செய்வித்தோம்; ஏனென்றால் முஃமின்களால் (சுவீகரித்து) வளர்க்கப்பட்டவர்கள், தம் மனைவிமார்களை விவாகரத்துச் செய்து விட்டால், அ(வர்களை வளர்த்த)வர்கள் அப்பெண்களை மணந்து கொள்வதில் யாதொரு தடையுமிருக்கக் கூடாது என்பதற்காக (இது) நடைபெற்றே தீர வேண்டிய அல்லாஹ்வின் கட்டளையாகும். (33:37)

எந்த ஒரு மகனாவது தன் தந்தையிடம் வந்து, நான் என் மனைவியை விவாகரத்து செய்கிறேன், அதன் பிறகு நீங்கள் அவளை திருமணம் செய்துக்கொள்ளுங்கள் என்று ஒரு காரணமும் இல்லாமல் சொல்லமுடியுமா? கணவன் மனைவிக்கு இடையே தகராறு இருந்தால், அவளை விவாரகரத்து செய்ய விரும்பினால், இது சாதாரணமான விஷயம் தான், ஆனால், நீங்களே அவளை திருமணம் செய்துக்கொள்ளுங்கள் என்று தன் தந்தையிடம் ஏன் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்? இதில் ஏதோ மர்மம் அடங்கியிருக்கிறது.

இஸ்லாமிய சரித்திர ஆசிரியரான அல் தபரியின் கூற்றுப்படி, முஹம்மது ஒரு முறை தனது வளர்ப்பு மகனாகிய ஜையத் வீட்டிற்கு சென்றபோது, அப்போது ஜையத் அங்கு இல்லை, அவனது மனைவி ஜைனப் (மருமகள்) மட்டுமே இருந்தாள். நீங்க என் அப்பா அம்மாவை விட அன்பானவர், எனவே உள்ளே வாருங்கள் என்று மருமகள் அழைக்கிறாள். அவர் உள்ளே செல்லவில்லை, ஆனால், அந்த சமயத்தில் ஜைனப் இருந்த நிலையைக் கண்டு (அறைகுறை ஆடை) அந்த ஜைனப்பின் அழகில் மயங்கியவராக முஹம்மது திரும்பி வந்துவிடுகிறார், அப்படி வரும் போது, "உள்ளங்களை மாற்றுகின்ற இறைவனுக்கு நன்றி (Glory be to God the Almighty! Glory be to God, who causes the hearts to turn!")" என்று சொல்லிக்கொண்டு வந்துவிடுகிறார்.

கணவன் வந்தவுடன் "முஹம்மது வந்து அவரை கேட்டவிஷயத்தையும், போகும் போது, மேற்கண்ட விதத்தில் அவர் முனுமுனுத்துக்கொண்டு சென்றதையும், ஜைனப் அறிவிக்கிறாள்". அப்பொது தன் மனைவியை முஹம்மது விரும்புகிறார் என்பதை அறிந்த முஹம்மதுவின் வளர்ப்பு மகன் ஜையத் (இவன் மகன் அல்ல மகான்), முஹம்மதுவிடம் சென்று, நான் விவாகரத்து செய்கிறேன், நீர் அவளை திருமணம் செய்துக்கொள்ளும் என்று சொல்கிறார். ஆரம்பத்தில் முஹம்மது மறுக்கிறார். ஆனால், அல்லாஹ் வசனத்தை வெளிப்படுத்தி, மனிதர்களுக்கு பயந்து உன் உள்ளத்தில் இருந்த ஆசையை வெளியே சொல்ல தயங்கினாய், இதோ விவாகரத்து முடிந்தவுடன், உனக்கு அவளை நான் மனைவியாக கொடுத்தேன் என்று அல்லாஹ் வசனத்தை இறக்கினான் (குர்-ஆன் 33:37). (பார்க்க : **www.answering-islam.org/Shamoun/zaynab.htm) **;

தனது மருமகள் விதவையாக தத்தளிக்க கூடாது எனும் எண்ணத்தில் முஹம்மது அவளை திருமணம் செய்தார். இது உலகத்தார் அனைவருக்கும் முன்மாதிரியாக செய்துகாட்டினார்கள் என்று உனது இஸ்லாமிய நண்பர்கள் சொல்வார்கள். ஆனால் இதுவல்ல உண்மை காரணம்.

உன் சிந்திக்கும் திறனை நீ இன்னும் இழக்கவில்லையென்று நினைக்கிறேன். அப்படியானால் சிந்தித்துபார். இறைவேதமோ நாங்களோ தாவீது செய்ததை நியாயப்படுத்தவில்லை. அவன் செய்த தவறுகளிலிருந்து பாடம் கற்கிறோம். ஆனால் முஹம்மது செய்த இந்த இழிவான செயலை இஸ்லாமியர் எப்படி பரிசுத்தமாக பார்க்கிறார்கள் என்று சிந்தித்து பார். மத்தேயு 5:27,28ம் வசனங்களின் படி, முஹம்மது உள்ளத்திலும் பாவம் செய்துள்ளார், அதனை செயலிலும் செய்து காட்டினார்.

இறைவேதத்தின் கதாநாயகன் இறைவன் மட்டுமே! ஆகவே மற்றவர்களின் நன்மை தீமை இரண்டையும் எமது படிப்பினைக்காக இறைவேதத்தில் இறைவன் உள்ளடக்கியிருக்கிறான். ஆனால் இஸ்லாம் முஹம்மது செய்த எல்லா பாவங்களுக்கும் நியாயம் கற்பிப்பதாகவேயிருக்கிறது. உனக்கு புரிந்திருக்கும் என்று நம்புகிறேன். முஹம்மதுவின் கையிலே அல்லாஹ் பொம்மையாக இருக்கிறாரோ என்று எண்ணத்தோன்றுகிறது.

தாவீது ராஜா செய்த பாவத்தை இறைவன் உணர்த்தி, தண்டனையும் கொடுத்து, மனந்திரும்பியவுடன் மீண்டும் இறைவனுடைய இருதயத்துக்கு ஏற்றவனாக மாறுகிறான். இது தான் இறைவன் வகுத்த வழி முறை. பாவம் உணர்த்தப்படும். தண்டனையை அனுபவிக்கவேண்டும். மனந்திரும்பியவுடன் இறைவன் மன்னித்துவிடுவான். மீண்டும் பழைய நிலைக்கு வர முடியும்.

முஹம்மது நபி செய்த பாவத்தை சற்று சிந்தித்து பார் எனதன்பு தம்பி. அவர் தன்னை நியாயப்படுத்துவது மட்டுமல்ல. அல்லாஹ்வும் அவர் செய்தது சரியென்று சான்றிதழ் கொடுக்கிறான். மல்கியா 2:13-16ன் படி கர்த்தர் விவாகரத்தை வெறுக்கிறார், ஆனால்,குர்-ஆன் 33:37ம் படி அல்லாஹ்வே அந்த விவாகரத்தை நிறைவேற்றுகிறார். இதில் இன்னொரு வேதனையான விஷயம் என்னவென்றால், ஒரு பெண் இன்னொருவனின் மனைவியாக இருக்கும் நிலையிலேயே, அவளை பிரித்து மற்றொருவனுக்கு தந்தேன் என்று அல்லாஹ் சொல்வது தான். இதிலிருந்து இந்த அல்லாஹ் எப்படிபட்டவன் என்பது உனக்கு புரிந்திருக்கும். பெண்கள் விஷயத்தில் சிறப்பு சலுகைகள் முஹம்மதுவுக்கு மட்டும் கொடுத்திருப்பதையும் குர்ஆனில் காணலாம். இதை குறித்து நான் மேலும் தெளிவுபடுத்த தேவையில்லையென்று நினைக்கிறேன். முஹம்மதுவின் வாழ்க்கையையும் தாவீதின் வாழ்க்கையையும் ஒப்பிட்டு பார்த்து இருவரில் யார் சிறந்தவர் என்பதை நீயே முடிவு செய்துகொள்.

தான் செய்தது பாவம் என்பதை உணர்ந்து மனந்திரும்பியவர் சிறந்தவரா? அல்லது தான் செய்த பாவத்துக்கு நியாயம் கற்பித்து, அதிலிருந்து மனந்திரும்பாமல் இருந்தவர் சிறந்தவரா?

தன் அடியான் செய்த பாவத்தை உணர்த்தி தண்டனை கொடுத்து அவன் மனந்திருந்தியவுடன் பழையபடி அவனை நேசித்த இறைவன் சிறந்தவரா? தன் அடியான் செய்யும் பாவங்களையெல்லாம் நியாயப்படுத்தி வானத்திலிருந்து "வஹி" அனுப்புவதுடன் சிறப்புச் சலுகைகளும் வழங்கும் அல்லாஹ் சிறந்தவரா? முடிவாக, நபிகள் கூட பாவம் செய்பவர்கள் தான் என்பதை இஸ்லாமியர்களின் இறைவேதத்திலிருந்தே நாம் பார்த்தோம், எனவே, இனி பைபிளை குற்றப்படுத்துவதை இஸ்லாமியர்கள் நிறுத்திக்கொள்ளட்டும்.

இவை உன் சிந்தனைக்கு. முடிவு உன் கையில். மீண்டும் அடுத்த கடிதத்தில் தொடர்வோம்.

இப்படிக்கு

உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்

முஹம்மதுவின் ஜைனப்புடன் நடந்த திருமணம் பற்றிய இதர கட்டுரைகள்:

1) **Muhammad, Zaid and Zaynab Revisited**

2) **Revisiting Muhammad's Marriage to His Adopted Son's Divorcee, Zaynab Bint Jash:**

3) **EVALUATION OF THE CHALLENGE THAT MOHAMMED OUGHT TO BE THE MODEL OF ALL MANKIND**

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

## நாள் 11 - வாசிக்கிறவனும், கேட்கிறவனும், கைக்கொள்கிறவனும் பாக்கியவான்?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்புள்ள தம்பி,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

உன் கடிதம் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். நீ திறந்த மனதுடன் என் கடிதங்களை படித்து, திறந்த மனதுடன் பதில் எழுதுகிறபடியால் நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன்.

***உன் கடிதத்தில் சில முக்கியமான கீழ்கண்ட கேள்விகளை கேட்டு இருந்தாய்:***

1. தேவன் தம் வார்த்தையை தீர்க்கதரிசிகள் மூலம் இறக்கினார், பைபிளில் தேவனுடைய வார்த்தை எபிரேயம், கிரேக்கம் மற்றும் சிறிது அராமிக் மொழியிலும் உள்ளது. தேவன் இறக்கிய வார்த்தைகளில் உள்ள உண்மை அர்தத்தை அறிந்துக்கொள்ள வேண்டுமானால், அம்மொழியில் (எபிரேய, கிரேக்க) படித்தால் தானே புரியும். தமிழில் படித்தால் எப்படி புரியும்?
2. மேலும் வெளிப்படுத்தின விசேஷம் 1:3ம் வசனத்தில், " இந்தத் தீர்க்கதரிசன வசனங்களை வாசிக்கிறவனும், கேட்கிறவர்களும், இதில் எழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் பாக்கியவான்கள் " என்று உள்ளது, அதாவது வாசிப்பவனும், கேட்பவனும், கீழ்படிகிறவனும் பாக்கியவான். இறைவன் எந்த மொழியில் இறக்கினானோ அதே மொழியில் வாசிப்பதும்,கேட்பதும் பாக்கியமாக பைபிள் கருதுகிறது அல்லவா?
3. ஆக, பைபிளே இப்படி சொல்லும்போது, குர்ஆனை அரபியில் படித்தல் எப்படி செல்லாததாக ஆகும். ஏன் நீங்கள் இஸ்லாமை குற்றப்படுத்துகிறீர்கள்?

உன் கேள்விகளை மேலோட்டமாக படித்தால், நீ சொன்ன விவரங்களில் நியாயம் இருக்கிறது என்று சொல்லத்தோன்றும், ஆனால், அவைகளை சிறிது ஆராய்ந்து பார்த்தால், உன் கேள்விகளில் உள்ள அறியாமை வெளிப்படும். இப்போது அவைகளை சுருக்கமாக விளக்குகிறேன்.

பைபிளின் தேவன் தன் தீர்க்கதரிசிகள் மூலமாக பேசும் போது, அவர்கள் பேசிய மொழியிலேயே பேசினார். அந்த தீர்க்கதரிசிகளுக்கு விவரம் புரிந்தால் தான் அவர்கள் அதனை மக்களிடம் கொண்டு சேர்க்க முடியும். அவர்கள் எபிரேய, கிரேக்க மற்றும் அராமிக் மொழியில் அதனை மக்களிடம் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

மூலமொழியில் படித்தால் தான் உண்மை அர்த்தம் விளங்கும், மொழியாக்கங்களில் படித்தல் அதன் அர்த்தம் பாதிக்கப்படும் என்பது உன் கேள்வி. உன்னுடைய கேள்வி சரியான கேள்வி தான். மேலும் நாம் ஆய்வு செய்வதற்கு முன்பாக, ஒரு சில உதாரணங்களை உனக்கு நான் காட்ட விரும்புகிறேன்.

கீழ்கண்ட இரண்டு வசனங்களை நான் மூலத்தில் கொடுத்துள்ளேன், அவைகளை படித்துப் பார்த்து, உனக்கு முழுவதுமாக புரிகின்றதா என்று பார்.

ஆங்கிலத்தில் உள்ள Transliterationஐ நீ படிக்கலாம்.

Transliteration: Houtōs gar ēgapēsen ho Theos ton kosmon, hōste ton Huion ton monogenē edōken, hina pas ho pisteuōn eis Auton mē apolētai all' echē zōēn aiōnion.

Transliteration: Qāla 'Innamā 'Anā Rasūlu Rabbiki Li'haba Laki Ghulāmāan Zakīyāan

உனக்கு இவ்விரு வசனங்களின் பொருள் மிகவும் ஆழமாக புரிந்ததா? ஏனென்றால், இவைகள் மூல மொழிகளில் உள்ளன. உனக்கு தேவையானால், மூல மொழி எழுத்துக்களிலேயே தருகிறேன், கீழே உள்ளவற்றை படித்துப்பார்.

Greek: Οὕτως γὰρ ἠγάπησεν ὁ Θεὸς τὸν κόσμον, ὥστε τὸν Υἱὸν τὸν μονογενῆ ἔδωκεν, ἵνα πᾶς ὁ πιστεύων εἰς Αὐτὸν μὴ ἀπόληται ἀλλ' ἔχῃ ζωὴν αἰώνιον.

Arabic: قَالَ إِنَّمَا أَنَا رَسُولُ رَبِّكِ لِأَهَبَ لَكِ غُلَامًا زَكِيًّا

நீ மூலமொழியில் படித்தாலும் உனக்கு புரியாது, அதனுடைய டிரான்ஸ்லிடெரேஷனில் படித்தாலும் புரியாது.

ஆனால், உன்னுடைய முதல் கேள்வி என்னவாக இருந்தது? இறைவன் இறக்கிய மூல மொழியில் படித்தால் தானே பொருள் சரியாக புரியும்? என்பதாகும். ஆனால், மேலேயுள்ள இரண்டு வசனங்களை நீ மூல மொழியில் படித்தாய் ஆனால், உனக்கு 1% சதவிகிதமும் புரியவில்லை.

மூல மொழியில் படித்தால் உண்மை பொருள் புரியும் என்பது ஒரு புறமிருக்க, முதலாவது நமக்கு அந்த மொழி தெரிந்து இருக்கவேண்டும் என்பது அடிப்படை தேவையாகும். எனக்கு எபிரேய மொழி தெரியாது, கிரேக்க மொழியும் தெரியாது. நான் சங்கீதம் 1 (அ) 23 மற்றும் இயேசுவின் மலைப்பிரசங்கத்தை எபிரேய மற்றும் கிரேக்க மொழியின் டிரான்ஸ்லிடெரஷனில் படித்தல் அதனால் என்ன பயன் கிடைக்கும்?

எனக்கு, கர்த்தர் சொன்ன வசனத்தின் பொருள் 100% புரியவேண்டும் என்பதற்காக நான் இப்போது உட்கார்ந்துக்கொண்டு, எபிரேயம் மற்றும் கிரேக்க மொழியை கற்கமுடியாது, ஒருவேளை எனக்கு நேரமும், திறமை இருந்து கற்றுக்கொண்டாலும், உலகத்தின் எல்லா மக்களும் மூல மொழிகளை கற்றுக்கொண்டு வேதங்களை படித்தால் தான் அந்த வேதங்களை கொடுத்த இறைவன் அங்கீகரிப்பான் என்பது தவறான கோட்பாடாகும்.

சங்கீதம் 1:1,2 வசனங்கள் எனக்கு தமிழ் மொழியிலேயே 100% புரிந்துவிட்டது, இதை புரிந்துக்கொள்ள நான் ஏன் மூல மொழிக்குபோகவேண்டும், அது வீணான காரியமாகும்:

சங்கீதம் 1:1,2 துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும், பரியாசக்காரர் உட்காரும் இடத்தில் உட்காராமலும், கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து, இரவும் பகலும் அவருடைய வேதத்தில் தியானமாயிருக்கிற மனுஷன் பாக்கியவான்.

மேலும் இயேசுவின் மலைப்பிரசங்கத்தில் உள்ள சாராம்சம் எனக்கு தமிழிலேயே நன்றாக புரிந்துவிடுகிறது, நான் ஏன் கிரேக்க மொழியில் அவைகளை படிக்க முயற்சி எடுக்கவேண்டும்?

மத்தேயு 5:7,8 இரக்கமுடையவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் இரக்கம் பெறுவார்கள். இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.

வேதபண்டிதர்கள் அல்லது பைபிள் ஆய்வு செய்பவர்கள் தங்களின் ஆய்விற்கு உபயோகமாக இருக்கும் என்பதற்காக மூல மொழியை கற்று அவர்கள் அதன் அடிப்படையில் தங்கள் ஆய்வை செய்யலாம். இப்படிப்பட்டவர்களுக்கு மூல மொழியை கற்பது உபயோகமாக இருக்குமே ஒழிய, சாதாரண மக்களுக்கு மூல மொழியில் படிப்பது அவசியமற்றவது, இது சாத்தியமும் இல்லாதது. இறைவன் மூல மொழியில் படித்தால் தான் அங்கீகரிப்பேன் என்றுச் சொன்னால், அவன் உண்மையான இறைவனே இல்லை.

இரண்டாவதாக, நீ வெளி 1:3ம் வசனத்தை குறிப்பிட்டு, அதில் இருக்கும் வாசிக்கிறவனும், கேட்கிறவனும் பாக்கியான் என்ற சொற்றொடரை குறிப்பிட்டு உன் புரிந்துக்கொள்ளுதலை வெளிப்படுத்தியிருந்தாய்.

நீ புரிந்துக்கொண்டது போல, கிரேக்க அல்லது எபிரேய மொழியில் படித்தால் தான், கேட்டால் தான் பாக்கியவான் என்று தேவன் கூறவில்லை. ஏனென்றால், அப்படி செய்வது உண்மையாக இருந்திருந்தால், கடந்த 2000 ஆண்டுகளாக கிறிஸ்தவர்கள் பின்பற்றி இருந்திருப்பார்கள், ஆனால், அப்படி யாரும் செய்யவில்லை, அதாவது எல்லாரும் கிரேக்க மற்றும் எபிரேய மொழியை கற்றுக்கொண்டு வந்திருப்பார்கள், வேதபண்டிதர்கள் தவிர மற்ற யாரும் இபப்டி செய்யவில்லை. மேலும், அதே வசனத்தில் "கைக்கொள்கிறவனும்" என்ற சொற்றொடர் இருப்பதையும் காணவும். ஒருவருக்கு

*புரியவில்லையானால் எப்படி அவன் அவைகளை கைக்கொள்ளமுடியும்? ஒருவன் கீழ்படியவேண்டும் என்றுச் சொன்னால், அவனுக்கு முதலாவது புரியவேண்டும். ஒருவனுக்கு புரியவேண்டுமென்றால், அவனுக்கு புரியும் மொழியில் அவனுக்கு சொல்லவேண்டும்.*

*ஆக, வெளி 1:3ல் சொல்லப்பட்ட விவரத்தின் படி, கிறிஸ்தவர்கள் எபிரேய மற்றும் கிரேக்க மொழியில் இயந்திரங்களைப் போல, படிக்கவேண்டும், கேட்கவேண்டும் என்று சொல்லப்பட்ட கட்டளையில்லை. கேட்பது நமக்கு புரியும் மொழியில் இருக்கவேண்டும், படிப்பது நமக்கு புரியும் மொழியில் இருக்கவேண்டும், அப்போது தான் படித்தவைகளுக்கு கீழ்படியமுடியும். ஆக, உன் புரிதல் தவறாக உள்ளது தம்பி.*

*நான் அடிக்கடி கேள்விபடுகின்ற விவரம் என்னவென்றால், குர்ஆனை அரபியில் படிக்கும் ஒவ்வொரு எழுத்துக்கும் அல்லாஹ் நன்மைகளை தருவார் என்பதாகும். இது மிகவும் தவறான ஒன்றாகும், ஒரு மனிதனுக்கு தான் படிப்பதே தனக்கு புரியாது என்று இருக்கும் போது இறைவன் எப்படி நன்மைகளை தருவான், இது அறிவுடையோருக்கு ஏற்றது அல்ல. ஒருவேளை அரபி தெரிந்தவர்கள் குர்ஆனை அரபியில் படிக்கும் போது ஒவ்வொரு எழுத்துக்கும் அல்லாஹ் நன்மைகளை தருவான் என்று சொன்னால், ஒரு பேச்சுக்காகவாவது ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், அரபியே தெரியாமல் ஒரு இயந்திரம் போல படித்துக்கொண்டே போனால், அல்லாஹ் நன்மைகளை தருவான் என்பது ஏமாற்றுவேலையாகும்.*

*மேலும், அரபியில் குர்ஆனை புரியாமல் படிப்பதற்கும், அதே குர்ஆனை நமக்கு புரியும் மொழியில் படிப்பதற்கும் அல்லாஹ் எப்படி நன்மைகளை தருவான் என்று கேள்வி கேட்டால், இரண்டிற்கும் நன்மைகள் உண்டு, ஆனால், அரபியில் படிப்பதற்கு (புரியாமல் படித்தாலும்) அதிக நன்மையை அல்லாஹ் கொடுப்பான் என்றுச் சொல்வார்கள். தமிழாக்கத்தில் குர்ஆனை படித்து புரிந்துக்கொள்ளவேண்டும் என்று ஆர்வம் இருப்பவர்களுக்கு இப்படிப்பட்ட விளக்கங்கள் தடைக்கற்களாக மாறிவிடுகின்றன.*

*தம்பி அதிகமாக எழுதிவிட்டேன், உன்னுடைய அடுத்த கடிதத்திற்காக காத்துக்கொண்டு இருக்கிறேன்.*

*இப்படிக்கு, உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

## நாள் 12 - ஓடி விளையாடு பாப்பா, நீ ஓய்ந்திருக்கலாகாது பாப்பா

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு,*

*உனக்கு சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக.*

*உன் கடிதங்கள் கண்டு, மட்டில்லா மகிழ்ச்சி அடைகிறேன். நீ ஒளிவு மறைவின்றி நேர்மையுடன் உன் கருத்துக்களை என்னுடன் பகிர்ந்துக் கொள்கின்றபடியால் என் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. நேற்று நீ எழுதிய கடிதத்தில் "**முஹம்மது ஒரு நல்ல வழிகாட்டி, அவரை நீங்கள் ஏன் பின்பற்றக்கூடாது?**" என்று என்னிடத்தில் கேள்வி எழுப்பியிருந்தாய். தம்பி, நல்ல மனிதர்களை பின் பற்றுவதில் எனக்கு மாற்று கருத்தில்லை. நீ சொல்வது உண்மையாக இருக்குமானால், முஹம்மதுவை பின்பற்ற எனக்கு எந்த ஒரு தடையும் இல்லை. ஆனால், உண்மை உனக்கு விரோதமாக இருக்கிறது தம்பி.*

*நான் இஸ்லாமிய நூல்களை படித்தேன், ஹதீஸ்களை படித்தேன், குர்-ஆனை அனேக மொழியாக்கங்களில் படித்துள்ளேன், மேலும் இஸ்லாமிய விரிவுரையாளர்களின் கருத்துக்களையும் படித்துள்ளேன். என் தம்பி பின்பற்றும் வழிகாட்டியை பின் பற்ற எனக்கும் ஆவளாகத் தான் உள்ளது, ஆனால், அந்த வழிகாட்டியின் முழு வாழ்க்கை வரலாறை படித்த பிறகு, என் எண்ணங்களை மாற்றிக்கொண்டேன். உடன் பிறந்த தம்பியின் ஆசையை நிறைவேற்றுவதை விட நேர்மையும், ஒழுக்கவும், உண்மையும், சத்தியமும் உயர்ந்தது. தம்பிக்காக உயிரை விடலாம், ஆனால், அநீதிக்கும் பொய்யுக்கும் வக்காளத்து வாங்கமுடியாதே! எனவே உன் விருப்பத்தை நான் நிறைவேற்ற முடியாமல் போகிறதே என்று வருத்தப்படுகிறேன். நாம் பின்பற்றக்கூடிய நிலையில் முஹம்மதுவின் வாழ்க்கை இல்லை என்பதை*

வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். ஒரே ஒரு விஷயத்தை உனக்கு முன்பாக நான் வைக்க விரும்புகிறேன்.

இயேசுவிடம் சிறு பிள்ளைகள் வருவதை சீடர்கள் தடுத்தபோது, அவர்களை தடை செய்யாதீர்கள், பரலோக இராஜ்ஜியம் அப்படிப்பட்டவர்களுடையது என்றுச் சொல்லி, அந்த பிள்ளைகள் மீது தன் கரங்களை வைத்து ஆசீர்வதித்து அனுப்பினார். தன்னுடைய சீடர்களுக்கு பாடம் புகட்ட ஒரு சிறு பிள்ளையை காட்டி, இதோ இவர்களைப் போல நீங்கள் மாறாவிட்டால் பரலோக இராஜ்ஜியத்தில் பிரவேசிக்க முடியாது என்றார். சிறு பிள்ளைகளைப்போல நாமும் கள்ளம் கபடமில்லாமல் இருக்கவேண்டும் என்று இயேசு சுட்டிக்காட்டினார். ஆனால், உன் வழிகாட்டியாகிய முஹம்மது தனக்கு 50 வயதாகும் போது, 6 வயது ஆயிஷா என்ற ஒரு சிறுமியை திருமணம் செய்துக்கொள்ள நிச்சயம் புரிந்தார், அதன் பிறகு தனக்கு 53 வயதாகும் போது, கள்ளம் கபடமற்ற 9 வயதான அந்த சிறுமியை திருமணம் செய்துக்கொண்டு, அந்த சிறுமியோடு தாம்பத்திய உறவில் ஈடுபட்டார்.

எனக்கு என்னவோ இந்த செயல் ஒரு ஆன்மீக தலைவர் செய்யக்கூடிய செயலாக தோன்றவில்லை. இதனை ஜீரணித்துக்கொள்ள முடியவில்லை. 9 வயது சிறுமியை 53 வயதுடைய ஆண் எப்படி கட்டிலுக்கு அழைக்கலாம்? நாம் அவ்வப்போது செய்தித்தாள்களில் "பள்ளிக்கூடம் சென்றுக்கொண்டு இருந்த சிறுமியை வழிமறைத்து பலாத்காரம் செய்தார்கள், கற்பழித்தார்கள்" என்ற செய்திகளை வாசிக்கிறோம். இப்படி வாசிக்கும் போது ஏதோ மனதில் இனம் புரியாத வேதனை ஆட்கொள்கிறது, உலகத்தின் மீது ஒரு வகையான வெறுப்பு உண்டாகிறது. ஏன் இப்படி சில ஆண்கள் நடந்துக்கொள்கிறார்கள். தங்களுக்கு காமம் அதிகமாக இருந்தால் விபச்சார விடுதிக்குச் சென்று சாகவேண்டியது தானே? ஏன் இப்படி விளையாடவேண்டிய வயதில் இருக்கும் சிறுமிகளை கொடுமைப்படுத்துகிறார்கள் என்று பலவாறு கேள்விகள் எழுகின்றன.

உன்னுடைய வழிகாட்டியாகிய முஹம்மது தனக்கு 53 வயதாகும் போது, ஒரு 9 வயது சிறுமியை திருமணம் செய்துக்கொண்டது எந்த வகையில் நியாயமாகும். அவர் அன்று செய்த இந்த காரியத்தினால், இன்று இஸ்லாமிய உலகில் படிக்கவேண்டிய வயதில் இருக்கும் சிறுமிகள் தங்கள் வயதான கணவர்களுக்கு பிள்ளைகளை பெற்றுத் தருகின்ற இயந்திரங்களாக மாறியிருக்கின்றனர். இவைகளை பார்க்கும் போது மனதிலே வேதனையாக உள்ளது. இந்த நிலையில் நான் எப்படி உன் வழிகாட்டியை என் வழிகாட்டியாக எண்ணமுடியும்? இன்று உன்னிடம் நான் கேட்கும் கேள்வியை, என்னிடம் யாராவது கேட்டால் நான் என்ன பதில் சொல்லமுடியும்? நம்மால் சமுதாயத்திற்கு நன்மை ஏற்படவில்லையானாலும் பரவாயில்லை, தீமை ஏற்படக்கூடாது?

புகாரி ஹதீஸ் ஒன்றை இப்போது காண்போம்:

பாகம் 6, அத்தியாயம் 78, எண் 6130

ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் (சிறுமியாக இருந்தபோது) பொம்மைகள் வைத்து விளையாடுவேன். எனக்குச் சில தோழியர் இருந்தனர். அவர்கள் என்னுடன் விளையாடிக் கொண்டிருப்பார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வீட்டுக்குள் நுழைந்தால் அவர்களைக் கண்டதும் தோழியர் (பயந்து கொண்டு) திரைக்குள் ஒளிந்து கொள்வார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் தோழியரை என்னிடம் அனுப்பி வைப்பார்கள். தோழிகள் என்னுடன் (சேர்ந்து) விளையாடுவார்கள்.

"அல்லாஹ்வின் திட்டப்படித் தான் முஹம்மது ஆயிஷாவை திருமணம் செய்தார்" என்று நீ சொல்லலாம். ஆனால் தம்பி, உண்மை இறைவன் இப்படியெல்லாம் செய்வார் என்று நீ நம்புகிறாயா? இது தவறான வழிகாட்டலாக இருக்கிறது. ஒன்பது வயது சிறுமியை நான் திருமணம் செய்துக்கொள்கிறேனே, அதுவும் என் பேத்தி வயதில் இருக்கும் சிறுமியாக இருக்கிறாளே என்ற எண்ணம் கூடவா உன் வழிகாட்டிக்கு இல்லாமல் போனது? நீ சொல்லு, உனக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து, அந்த குழந்தைக்கு ஒன்பது வயதாகும் போது, ஒரு இஸ்லாமிய இமாம் வந்து அதுவும் 50க்கும் அதிகமான வயதுள்ளவர் வந்து, இந்த சிறுமியை நான் திருமணம் செய்துக்கொள்கிறேன் என்றுச் சொன்னால், அவருக்கு உன் பதில் என்னவாக இருக்கும்? இப்படி கேட்பது நியாயமில்லை, அது பாவம் என்றுச் சொல்வாயா, அல்லது என் நபி இப்படி தான் வாழ்ந்துவிட்டுச் சென்றார், ஆகையால் நானும் அவரது வழியில் நடப்பேன் என்றுச் சொல்லி, அந்த கிழவனுக்கு உன் குழந்தையை தாரவாத்து கொடுப்பாயா?

*உனக்குத் தெரியுமா? முஹம்மதுவின் இந்த ஒரு செயலால் அனேக சிறுமிகள் இஸ்லாமிய நாடுகளில் நரகத்தை அனுபவித்துக்கொண்டு இருக்கிறார்கள். ஒருவயது குழந்தையோடு கூட திருமணம் ஒப்பந்தம் செய்யலாம் என்று இஸ்லாமிய அறிஞர்கள் அறிக்கையிடுகிறார்கள். உலகத்தை உன் வழிகாட்டி எந்த நிலைக்கு கொண்டு வந்து விட்டுள்ளார் என்பதை கீழே உள்ள வீடியோக்களைப் பார்த்து தெரிந்துக்கொள். எந்த மார்க்கமாக இருந்தாலும் சரி, சிறுவயதில் திருமணம் செய்துவைப்பது தவறானதாகும்.*

**http://www.youtube.com/watch?v=cbZIVFyrx-s**

**http://www.youtube.com/watch?v=F13gtjjDEgE**

**http://www.youtube.com/watch?v=qYleXcpbzKY**

*தம்பி, இந்த ஆண்கள் உன் நபியை பின்பற்றி இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபடுகின்றார்கள். இதே போல என்னையும் செய்யச் சொல்கிறாயா? உன்னை மிகவும் வருந்திக்கேட்டுக்கொள்கிறேன், நீயும் இப்படிப்பட்டவர்களில் ஒருவனாக மாறிவிடாதே! முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு முழுவதையும் நீ படித்துள்ளாயா? அல்லது இஸ்லாமியர்கள் எழுதும் ஒரு சில நல்ல புத்தகங்களை மட்டுமே படித்துள்ளாயா?*

*ஓடி விளையாட வேண்டிய வயதில், திருமணத்தை செய்துவிட்டு, எதிர்காலத்தை சூன்யமாக்கிவிடுவது நாகரீகமுள்ளவர்கள் செய்யும் செயலா? உடல் திருமணத்திற்கு தயாராகிவிட்டாலும், மனது முதிர்ச்சி அடையவேண்டியது திருமண வாழ்விற்கு மிகவும் அவசியம் என்பதை உணரக்கூடாத அளவிற்கு உங்களுடைய மூளை கெடுக்கப்பட்டுள்ளதா? தம்பி சிந்தித்துப் பாரடா!*

*தம்பி ஒரு விஷயத்தை புரிந்துக்கொள், ஒன்பது வயதில் உள்ள ஒரு சிறுமியை, 90 வயதுள்ள ஆணோடு திருமணம் செய்ய இஸ்லாம் அனுமதிக்கும் என்பதை மறந்துவிடாதே! நெஞ்சை கல்லாக்கிக்கொண்டு கேட்கிறேன், ஒரு 90 வயது கிழவனுக்கு உன் 9 வயது மகளை திருமணம் செய்துவைப்பாயா? "ஆம் இஸ்லாம் அனுமதித்தால், நான் என் மகளை 90 வயது கிழவனுக்கும் தருவேன்" என்று நீ சொல்ல விரும்பினால், தம்பி ஒரு வரியில் எனக்கு தெரிவித்துவிடு, இனி உன் பக்கம் நான் தலைவைத்து கூட படுக்க மாட்டேன், உனக்கு ஒரு கடிதமும் எழுதமாட்டேன். "இல்லை இல்லை நான் இப்படியெல்லாம் செய்யமாட்டேன்" என்று எனக்கு பதில் எழுதினால், உன்னோடு மேலும் நான் தொடர்ந்து கடிதத்தொடர்பு வைத்துக்கொள்வேன்.*

*இதோடு முடித்துக்கொள்கிறேன், உன்னுடைய பதிலுக்காக காத்துக்கொண்டு இருக்கிறேன். என் அடுத்த கடிதம் உன்னிடமிருந்து வரும் பதிலின் மீது சார்ந்துள்ளது.*

*உன் மனக்கண்கள் திறக்கப்படவும், சத்தியத்தை அறிகிற அறிவு உனக்கு கிடைக்கவும், நான் கர்த்தரிடம் வேண்டிக்கொள்கிறேன்.*

*இப்படிக்கு, உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## நாள் 13 - பழைய ஏற்பாட்டில் பலதாரதிருமணங்கள் இல்லையோ?

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பி,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

முதலாவதாக உனக்கு நான் நன்றிச் சொல்லவேண்டும், அதாவது ஒன்பது வயது சிறுமியை ஒரு கிழவனுக்கு திருமணம் செய்வது தவறானது, அதை நான் நிச்சயமாக செய்யமாட்டேன் என்று நீ சொன்னதற்காக மகிழ்ச்சியாக உள்ளது. இருந்த போதிலும், என்னுடைய முந்தைய கடிதத்தில் நான் குறிப்பிட்ட ஆயிஷா திருமணம் பற்றி மேலும் நீ இஸ்லாமிய புத்தகங்களை படித்து தெரிந்துக்கொள்வதாக கூறினாய். நிச்சயமாக இறைத்தூதர் 9 வயது சிறுமியை திருமணம் செய்து இருக்கமாட்டார், ஆயிஷா அவர்களுக்கு குறைந்தபட்சம் 18 வயது இருந்திருக்கும், இதனை ஆய்வு செய்து தெரிந்துக்கொள்ளப் போவதாக கூறியிருந்தாய். உன்னுடைய பதிலுக்காகவும், மேலும் நீ அனேக இஸ்லாமிய நூல்களை படிக்கப்போவதாக கூறியதற்காகவும் மிக்க நன்றி.

என்னுடைய முந்தைய கடிதத்தைக் கண்டு உடனே பதில் அளித்ததற்காக நன்றி. எங்கே நான் உன் வழிகாட்டியின் பலதார திருமணத்தைப் பற்றி கேள்வி எழுப்புவேனோ என்று எண்ணி முன்னெச்சரிக்கையாக நீயே அதைப் பற்றி எனக்கு கடிதம் எழுதியுள்ளாய். மேலும், பழைய ஏற்பாட்டு நபர்கள் கூட பல திருமணங்களை புரிந்துள்ளார்கள் அல்லவா? என்று என்னிடம் கேள்வி கேட்டுள்ளாய். எப்போதெல்லாம் கிறிஸ்தவர்கள் முஹம்மதுவின் பல தார மணத்தைப் பற்றி கேள்வி எழுப்புகிறார்களோ, அப்போதெல்லாம் பொதுவாக இஸ்லாமியர்கள் பழைய ஏற்பாட்டை நோக்கி தங்கள் விரல்களை நீட்டுவார்கள்.

நீ என்னிடம் கேட்ட கேள்விகளின் சுருக்கம்:

"பழைய ஏற்பாட்டில் அனேகர் பல திருமணங்களை செய்து இருக்கும் போது, ஏன் கிறிஸ்தவர்கள் (அண்ணா நீங்களும் தான்) குர்ஆனுக்கு நேராகவும், நம்முடைய நபிக்கு நேராகவும் விரலை நீட்டுகிறார்கள்? அவர்கள் தங்கள் பழைய ஏற்பாட்டை படிக்கவில்லையா? எல்லாம் தெரிந்தும் ஒன்றுமே தெரியாதவர்களைப் போல கிறிஸ்தவர்கள் நடிக்கிறார்களா? அல்லது அறியாமையில் இப்படி கேள்வி எழுப்புகிறார்களா? ஏன் இந்த இரட்டை வேஷம்?".

உன்னுடைய கேள்வியும், வேதனையும் நியாயமானது தான், ஆனால், உண்மையை சரியாக புரிந்துக்கொள்ளாததால், பழைய ஏற்பாட்டையும், புதிய ஏற்பாட்டையும் சரியாக புரிந்துக்கொள்ளாததால் உனக்கு குழப்பம் வந்துள்ளது. இப்போது நான் உனக்கு எல்லாவற்றையும் சுருக்கமாக விளக்குகிறேன்.

- ஆதியிலிருந்து தேவன் "ஒருத்தனுக்கு ஒருத்தி" என்ற கோட்பாட்டை திருமணத்திற்கு அடிப்படையாக கொண்டு இருந்தார் (ஆதி 1:27; 2:21-25).
- ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடு மனித ஆரம்பத்திலிருந்து கடைபிடிக்கப்பட்டு வந்தது , பாவம் அதனை முறிக்கும் வரைக்கும் (ஆதி 4:1).
- மோசேயின் சட்டம் "அனேக ஸ்திரிகளை திருமணம் செய்யவேண்டாம்" என்று தெளிவாகச் சொல்கிறது. (உபா 17:17)
- பலதாரமணத்தைப் பற்றிய எச்சரிக்கையை மறுபடியும் 1 இராஜாக்கள் 11:1,2 வசனங்கள் எடுத்துக்கூறுகின்றன. அனேக திருமணங்கள் மூலமாக எப்படி தேவனுக்கு எதிரான பாவத்தை சாலொமோன் செய்தார் என்று இந்த அதிகாரத்தில் தெளிவாக கூறப்பட்டுள்ளது.
- இயேசுவும் "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற ஆதியிலிருந்த அமைப்பை மறுபடியும் மத்தேயு 19:4ல் ஞாபகப்படுத்துகிறார்.
- புதிய ஏற்பாடு, "ஆகிலும் வேசித்தனம் இராதபடிக்கு அவனவன் தன் சொந்த மனைவியையும், அவனவன் தன் சொந்தப் புருஷனையும் உடையவர்களாயிருக்கவேண்டும்" என்று கட்டளையிடுகிறது (1 கொரிந்தியர் 7:2)
- மேலும் சபை ஊழியர்கள் ஒரே மனைவியை உடையவர்களாக இருக்கவேண்டும் என்று மறுபடியும் புதிய ஏற்பாடு கட்டளையிடுகிறது (1 தீமோத்தேயு 3:,2,12). இது சபை ஊழியர்களுக்கு மட்டுமல்ல, ஒவ்வொரு விசுவாசிக்கும் இந்த கட்டளை பொருந்தும்.

பழைய ஏற்பாட்டுக் காலத்தில் வாழ்ந்த நபர்கள் பல திருமணங்களை செய்தார்கள், அதை தேவன் கட்டளையிட்டதினால் தான் செய்தார் என்று சொல்லமுடியாது. பழைய ஏற்பாட்டுக் காலத்தில் பலதாரமணத்தை தேவன் ஆசீர்வதிக்கவில்லை, அதற்கு பதிலாக இதனால் விளையும் தீமைகளை ஆங்காங்கே குறிப்பிட்டு எச்சரித்துள்ளார். ஆபிரகாமின் குடும்பத்தில் நிலவிய பிரச்சனை(சாராள், ஆகார், இஸ்மவேல், ஈசாக்கு), யோசேப்புவின் வாழ்வில் நடந்த காரியங்கள் (தன் சகோதரர்களால் பட்ட பாடுகள்),

*சாலொமோனின் பாவம் என்று அனேக இடங்களில் பலதாரமண குடும்பத்தில் நிலவும் பிரச்சனைகளை தேவன் வெளிக்காட்ட தவறவில்லை.*

*பழைய ஏற்பாட்டின் நிகழ்ச்சிகள் நமக்கு எச்சரிக்கையாகவும், படிப்பினையாகவும் எழுதப்பட்டுள்ளது. மேலும், ஒரு கிறிஸ்தவன் இயேசு போதித்த போதனையில் வாழுவதினால், அவன் பலதார மணத்தை பின்பற்றுவதில்லை.*

***குர்ஆனின் பலதாரமணம்:***

*குர்ஆனின் பலதாரமணம், அல்லாஹ் அங்கீகரித்த ஒன்றாக உள்ளது. முஸ்லிம்கள் பல திருமணங்களை செய்துக்கொள்ளலாம் என்று கட்டளை கொடுக்கப்பட்டுள்ளது. முஹம்மதுவும் 11 திருமணங்களை புரிந்துள்ளார். இதனை முஹம்மதுவின் காலத்திற்கு மட்டும் என்று சொல்லியிருந்தால், பிரச்சனையில்லை, ஆனால் உலகம் இருக்கும் வரையிலும் இந்த குர்ஆனின் கட்டளை அமுலில் இருக்குமே. உனக்குத் தெரியுமா? பல திருமணங்களை புரியும் சமுதாயத்தில் அனேக பிரச்சனைகள், தீமைகள் நடக்கிறதாக ஒரு ஆய்வு(Science Daily) சொல்கிறது. ஒருவனுக்கு ஒருத்தி என்ற அமைப்பே சிறந்தது, என்று இந்த ஆய்வு கூறுகிறது.*

### *Monogamy Reduces Major Social Problems of Polygamist Cultures*

*ScienceDaily (Jan. 23, 2012) — In cultures that permit men to take multiple wives, the intra-sexual competition that occurs causes greater levels of crime, violence, poverty and gender inequality than in societies that institutionalize and practice monogamous marriage.*

*[. . .]*

*"Our findings suggest that that institutionalized monogamous marriage provides greater net benefits for society at large by reducing social problems that are inherent in polygynous societies."*

*Considered the most comprehensive study of polygamy and the institution of marriage, the study finds significantly higher levels rape, kidnapping, murder, assault, robbery and fraud in polygynous cultures.*

*[. . .]*

*Source: **http://www.sciencedaily.com/releases/2012/01/120124093142.htm***

*பல திருமணங்கள் புரியும் சமுதாயங்களில் அனேக குற்றங்கள், கற்பழிப்புக்கள், ஏழ்மை, ஆண் பெண் உயர்வு தாழ்வு பிரச்சனைகள், ஆள் கடத்தல், கொலை, நேர்மையற்ற செயல்கள் என்று சமுதாயத்திற்கு கேடு விளைவிக்கும் அனேக குற்றங்கள் அதிகமாக நடப்பதாக ஆய்வு கூறுகிறது.*

*இந்த விஷயம் ஏன் உன் அல்லாஹ்விற்கு தெரியாமல் போனது? ஒன்று செய், நீ இருக்கும் நாட்டில் அதாவது சௌதியில் இந்த குற்றங்கள் நடைப்பெறுகிறதா இல்லையா? என்பதை ஆய்வு செய்துப்பார். எனக்கு தெரிந்த சௌதியில் இருக்கும் ஒரு நண்பன், அனேக நாட்களுக்கு முன்பாக ஒரு விஷயத்தைக் கூறினான், அதாவது பெண்கள் தனியாக இருந்தால் கடத்திக்கொண்டு சென்றுவிடுகிறார்கள் மற்றும் சில நாட்களுக்கு பின்பு கொண்டு வந்து சாலையில் எங்கேயோ விட்டுவிடுகிறார்கள், அதாவது அந்த பெண்ணை கற்பழித்து கடைசியாக விட்டுவிடுகிறார்கள். இது நடப்பது எங்கே என்று கேட்டால், சௌதியின் தலைநகரம் ரியாத்தில்.*

குர்ஆனில் நவீன விஞ்ஞானம் உண்டு என்று இஸ்லாமியர்கள் சொல்வார்கள், ஆனால், பல தார திருமணங்கள் புரியும் சமுதாயத்தில் இப்படிப்பட்ட பிரச்சனைகள், இதர சமுதாயத்தை விட அதிகமாக நடக்கிறது என்ற உண்மையை அல்லாஹ் ஏன் அறியவில்லை?

தம்பி, நீ சிந்தித்துப்பார். ஒரு குடும்பத்தில் ஒரு ஆண் நான்கு பெண்களை திருமணம் செய்துக்கொண்டால், அந்த குடும்பத்தில் அமைதி நிலவுமா? ஒவ்வொரு பெண்ணுக்கும் குழந்தைகள் பிறந்த பிறகு, அங்கு பிரச்சனைகள் வராமல் இருக்குமா? நீ விரும்பினால், இதைப் பற்றி மேலும் நாம் விவாதிக்கலாம். அவ்வளவு ஏன் முஹம்மது குடும்பத்திலும் பல தாரமணத்தால் அனேக பிரச்சனைகள் மனைவிகளின் மத்தியிலே இருந்தது.

நான் மேலே கொடுத்த தொடுப்பை சொடுக்கி படித்துப்பார், அதாவது ஒரு மனைவியை மட்டும் திருமணம் புரியும் சமுதாயத்தில் அனேக நன்மைகள் கிடைக்கிறது என்பதை ஆய்வு செய்து சொல்லியுள்ளார்கள். நீயே படித்துப்பார் மற்றும் சிந்தித்துப்பார்.

உண்மையான இறைவன் பலதார திருமணத்தை ஒரு நித்திய சட்டமாக கொடுக்கமாட்டார். ஆனால், அல்லாஹ் இதனை அனுமதித்து இருக்கிறார் என்பதிலிருந்து அல்லாஹ்வின் நம்பகத்தன்மை எத்தகையது என்பதை அறிந்துக்கொள். இஸ்லாமுக்கு இருக்கும் பிரச்சனை வெறும் பலதாரமணம் மட்டுமல்ல, அடிமைப்பெண்களோடு இஸ்லாமிய ஆண்கள் உடலுறவு கொள்ளலாம் என்ற கட்டளை இன்னும் மோசமானது, தேவைப்பட்டால் அதைப் பற்றியும் ஒரு கடிதத்தை உனக்கு எழுத முயற்சி எடுப்பேன்.

நீயே ஆய்வு செய், கணக்கெடுத்துப் பார், நீ இருக்கும் நாட்டின் நிலையை சேகரித்து, மற்ற நாடுகளோடு ஒப்பிட்டுப்பார், உனக்கே உண்மை புரியும்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

[மூலம்]

[உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்]

---

## நாள் 14 - நீ புலியின் மீது சவாரி செய்துக்கொண்டு இருக்கிறாய்

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

இன்று ஒரு முக்கியமான விஷயத்தை உன்னோடு பகிர்ந்துக்கொள்ளப் போகிறேன். நீ விரும்பினால், இதனை படித்துவிட்டு, இந்த மெயிலை அழித்துவிடு.

நீ ஒரு இஸ்லாமிய நாட்டில் இப்போது வாழ்ந்துக்கொண்டு இருக்கிறாய், மற்றும் உன்னை ஒரு இஸ்லாமியனாக பிரகடனம் செய்துவிட்டாய். எனவே, இனி நீ மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும், நான் பேச்சு சுதந்திரத்தை பயன்படுத்துவேன், உண்மையை பேசுவேன், தீய காரியங்களுக்கு எதிர்த்து குரல் கொடுப்பேன், பெண் உரிமைக்காக போராடுவேன், குறைந்த பட்சம் குரல் கொடுப்பேன் என்றுச் சொல்லி, சுதந்திரமாக செயல்பட்டால், ஆபத்து உன் வாசற்படியில் படுத்துயிருக்கிறது என்பதை அறிந்துக்கொள். இந்த ஆபத்து வேறு மார்க்கத்தார்கள் மூலம் அல்ல, இஸ்லாமியர்கள் மூலமாகவே உனக்கு வரும் என்பதை மறந்துபோகாதே,

*ஒரு கிறிஸ்தவன் இஸ்லாமை தழுவும் போது, இஸ்லாமியர்கள் உனக்கு நண்பர்களாக இருந்து அன்போடும், நட்புடனும் கவனித்துக்கொள்வார்கள். ஆனால், நீ சிறுவயது முதற்கொண்டு ஒரு கிறிஸ்தவனாக வளர்க்கப்பட்டபடியினால் சுதந்திரமாக வாழ கற்றுக்கொண்டு இருக்கிறாய்.*

*கிறிஸ்தவம் பற்றி நகைச்சுவையாக ஏதாவது சொன்னாலும் உன்னை யாரும்(கிறிஸ்தவர்கள்) ஒன்றும் சொல்லமாட்டார்கள், கருத்து சுதந்திரம் உனக்கு இருந்தது. இப்பொது இஸ்லாமியனாக மாறியதால், இனி நீ சுதந்திரமாக செயல்படமுடியாது, குறைந்தபட்சம், சௌதியில் இருக்கும் வரையில் நீ சுதந்திரமாக இருக்க முடியாது.*

***குர்-ஆன் பற்றியோ, முஹம்மது பற்றியோ, இஸ்லாம் பற்றியோ நீ எவைகளை பேசினாலும், அவைகளை சிந்தித்து பேசவேண்டும்.***

*உன்னை அறியாமல் இஸ்லாமுக்கு எதிராக ஏதாவது சொல்லிவிட்டு, அதன் பிறகு, "நான் வேடிக்கையாகத் தான் சொன்னேன்" (அ) "இதில் என்ன தவறு, இது பொதுவாக விஷயம் தானே" என்று நீ கூறினால், இஸ்லாமியர்கள் அதனை அங்கீகரித்துக் கொள்ளமாட்டார்கள். நீ உண்மையாகவே அறியாமையில் சொல்லியிருந்தாலும், ஆபத்து உனக்குத் தான். எனவே, இதர இஸ்லாமியர்களிடம் பேசும் போதும், இணையத்தில் எழுதும் போதும், எதை செய்தாலும் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்பதை உனக்கு தெரிவித்துக் கொள்கிறேன்.*

***இஸ்லாமியர்கள் எப்படி நடந்துக் கொள்வார்கள் என்பதற்கு ஒரு நடந்த நிகழ்ச்சியை உனக்கு தெரிவிக்கிறேன்.***

*பாங்களாதேஷ் நாட்டில் ஒரு குறிப்பிட்ட செய்தித்தாளில் ஒரு சிறிய கார்ட்டூன் மற்றும் ஒரு நகைச்சுவை செய்தி வந்தது. இஸ்லாமியர்கள் தங்கள் பெயர்களுக்கு முன்னால் "முஹம்மது" என்ற வார்த்தையை சேர்த்துக்கொள்வது அங்கு வழக்கமாக இருந்தது. ஒரு சின்ன பையனிடம் ஒரு முதியவர் (இஸ்லாமிய இமாம்) உன் பெயர் என்ன என்று கேட்டார். அவன் "முஹம்மது" என்ற வார்த்தையை விட்டுவிட்டு, தன் பெயரை மட்டும் சொன்னான், உடனே அந்த முதியவர், பெயருக்கு முன்னால் இருக்கும் "முஹம்மது" என்ற வார்த்தையை விட்டுவிடாதே, அதோடு சேர்த்து பெயரைச் சொல்லவேண்டும் என்று அறிவுரை கூறினார். அதன் பிறகு அந்த பையனிடம் உன் கையில் இருப்பது என்ன என்று கேட்க, அந்த பையன் தன் கையில் பூனையை வைத்து இருந்ததினால், இப்போது கேட்ட அறிவுரையின் படி, "முஹம்மது பூனை" என்று சொல்கிறான். இது தான் கார்ட்டூன் சொல்லும் செய்தி.*

**http://en.wikipedia.org/wiki/2007_Bangladesh_cartoon_controversy**

**http://news.bbc.co.uk/2/hi/7006528.stm**

**http://www.islam-watch.org/Assets/Aalpin_Muhammad_Cartoon.jpg**

*இந்த கார்ட்டூனை வரைந்தவனும் ஒரு இஸ்லாமியன் தான். இஸ்லாமியர்கள் கொந்தளித்தார்கள், மிகப்பெரிய கலவரம் நடந்தது. பூனைக்கு முன்னால் எங்கள் நபியின் பெயரைச் சொல்வதா? இது மிகப்பெரிய அவமானம் என்று கலவரத்தில் ஈடுபட்டார்கள். அதை வரைந்தவன் இப்படியெல்லாம் நடக்கும் என்று நான் நினைக்கவில்லை, நான் அறியாமல் இதை செய்துவிட்டேன் என்று மன்னிப்பு கேட்டான், செய்தித்தாளின் முதலாளியும் மன்னிப்பு கோரினார், இஸ்லாமியர்கள் கேட்டபாடில்லை. எனவே, அரசாங்கம் அந்த வாலிபனை கைது செய்து பாதுகாப்பிற்காக சிறையில் அடைத்தது. மேலும் என்ன நடந்தது என்பதை மேலேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி அறிந்துக்கொள்.*

*நான் என்ன சொல்லவருகிறேன் என்றால், நீ அறிந்து செய்தாலும், அறியாமையில் செய்தாலும் இஸ்லாமிய மக்களில் சிலர் உன்னை மன்னிக்கமாட்டார்கள். இது ஒரு புறமிருக்க, ஒரு வேளை, சில மாதங்களுக்கு பிறகு, உண்மை இஸ்லாமை அறிந்துக்கொண்டு, எனக்கு இது சரிபட்டு வராது என்று எண்ணி, இஸ்லாமை விட்டு வெளியரங்கமாக நீ வெளியேற நினைத்தால், அதுவும் உனக்கு ஆபத்தாக முடியும். ஒரு முறை இஸ்லாமியனாக மாறி மறுபடியும் அதைவிட்டு வெளியேறினால், இஸ்லாமியர்கள் காயப்படுவார்கள், அவர்களை நீ ஏமாற்றிவிட்டதாகவும், இஸ்லாமை அவமானப்படுத்திவிட்டதாகவும் நினைப்பார்கள். இஸ்லாமியர்களின் மனநிலை கடினமான உண்மைகளை கிரகிக்கமுடியாத நிலையில் இருக்கிறது.*

*ஆகையால், நீ இஸ்லாமை விட்டு வெளியேற விரும்பினால், யாரிடமும் சொல்லாமல் இருப்பது தான் நல்லது மற்றும் நீ அப்போது இந்தியாவில் வந்து நிரந்தரமாக தங்குவது தான் உனக்கு பாதுகாப்பு.*

*நீ இப்போது என்னிடம் "அண்ணே, இஸ்லாமில் என் நம்பிக்கை திடமாக உள்ளது, என் இஸ்லாமிய நண்பர்கள் அன்பானவர்கள், நான் தவறு செய்தால் அவர்கள் மன்னிப்பார்கள், நீங்கள் சொல்வது போல வன்முறையில் ஈடுபடமாட்டார்கள்" என்று சொல்ல விரும்புவாய். நல்லது தம்பி, உன் நண்பர்கள் உன்னை நேசித்து, எந்த நிலையிலும் உனக்கு ஆபத்து விளைவிக்காமல் இருந்தால் அதுவே எனக்கு போதும், ஆனால் உன் நண்பர்களாக இல்லாமல் இருக்கும் இதர இஸ்லாமியர்களிடமிருந்து பிரச்சனை நேரங்களில் உன்னை எப்படி பாதுகாத்துக்கொள்வாய்? எனவே, உன் மீது அன்பு கூர்ந்து நான் வேண்டிக்கொள்வதெல்லாம், எச்சரிக்கையாக இரு என்பது மட்டும் தான்.*

*தம்பி, நீ புலியின் மிது சவாரி செய்துக்கொண்டு இருக்கிறாய், வேகம் குறைந்தாலும், நீ கீழே இறங்கப் பார்த்தாலும் உனக்கு ஆபத்து, எனவே தொடர்ந்து உன் பயணம் வேகமாக தொடரட்டும். நீ கீழே இறங்க விரும்பினால், நான் உனக்கு முன்னமே சொன்னது போல இந்தியாவிற்கு வரும் வரை எச்சரிக்கையாக இரு.*

*எனக்கு இரண்டு காரியங்கள் மீது முழு நம்பிக்கை உண்டு, முதலாவது நீ எல்லாவற்றையும் ஆராய்ந்து சரி பார்க்க ஆரம்பித்துள்ளாய் என்பதாகும் (இப்படி இல்லையென்றால் நீ என்னோடு கடிதத் தொடர்பு வைத்துக்கொண்டு இருப்பாயா?), இரண்டாவது இஸ்லாம் என்றால் என்ன என்பதும் எனக்குத் தெரியும். உன்னைப்போல ஆராய்ச்சி செய்து படித்துப் பார்த்து சிந்தித்து செயல்படுபவனை இஸ்லாம் ஒருபோதும் அனைத்துக்கொள்ளாது, அல்லது உன் மனது இஸ்லாமை தொடர்ச்சியாக பிடித்துக்கொண்டு இருக்காது. எனவே ஒரு நாள் நீ உண்மையை அறியும் போது, உனக்கு இந்த என்னுடைய வார்த்தைகள் உபயோகமாக இருக்கும் என்பதற்காக இவைகளை எழுதுகிறேன்.*

*இப்போது உனக்கு நானே அனுமதி தருகிறேன், இந்த கடிதத்தை படித்துவிட்டு, உன்னால் என் வார்த்தைகளை ஜீரணித்துக்கொள்ள முடியாவிட்டால், இதனை கிழித்து எரிந்துவிடு (உன் கணினியிலிருந்து அழித்துவிடு). ஆனால், எப்போதும் உன் மீதே அன்பு கூர்ந்து காத்துக்கொண்டு இருக்கின்ற ஒரு சகோதரன் இந்தியாவில் உனக்கு உண்டு என்பதை மறந்துவிடாதே.*

***புலி மீது சவாரி செய்வது வீரமல்ல தம்பி, அது வீம்பு.***

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு, உன் அண்ணன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## நாள் 15 - விசுவாசிக்காதவர்களுக்காக மட்டுமே ஒரு அற்புத அடையாளம்

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு.*

*உன் மீது சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக.*

*உன் கடிதம் கண்டேன், அதில் நீ எழுதியவைகளை படித்தேன், ஆனால், இந்த கடிதத்தில் நீ எழுதியவைகளை படிக்கும் போது, இயேசுவின் உயிர்த்தெழுதல் பற்றி உனக்கு குழப்பம் இருப்பதாக உணர்ந்தேன்.*

*உன்னை குழப்பியவர்கள் இயேசு கிறிஸ்து சிலுவையில் மரிக்கவுமில்லை உயிர்த்தெழவுமில்லை. யூனுஸ் நபியின் அடையாளம் இயேசுவின் சிலுவை மரணத்திற்கு ஒப்பிட முடியாது என்று உன்னிடம் கூறியதாக தெரிகிறது. இந்த கடிதத்தில் வாழ்விலும், மரணத்திலும் எப்போதும் நம்மை வெற்றி சிறக்கச் செய்யும் ஒரே வல்லமையாகிய இயேசுக் கிறிஸ்துவின் (ஈஸா அல்-மஸீஹ்) வல்லமையை, யோனா தீர்க்கதரிசியின் அடையாளம் மூலம் நான் உனக்கு விளங்கப்படுத்துகிறேன்.*

**1) *விசுவாசியாத மக்களுக்காக ஒரே ஒரு அடையாளம்:***

*இயேசுக் கிறிஸ்து தாம் பூமியில் வாழ்ந்த காலத்தில் தம்மை விசுவாசிக்காத மக்களுக்கு, தம்முடைய ஆதிகாரத்தை நிரூபிக்க, ஒரே ஒரு அற்புத அடையாளம் மட்டுமே கொடுக்கப்படும் என்று அறிவித்தார். அது யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயாகும் (மத்தேயு* 12:38-41 *மற்றும் லூக்* 11:29-30).

*இஸ்லாத்தில் யூனுஸ் (துல் நூன் -* Dhan-Nun) *நபியை ப்பற்றிய இந்த சம்பவம் குறிப்பிடப்பட்டுள்ளதை குர்ஆனில் நீ காணலாம்.*

*யோனா கடலில் வீசியெறியப்பட்டான், அங்கு அவன் ஒரு மிகப்பெரிய மீனால் விழுங்கப்பட்டு, இயல்பில் அவன் இறந்தான். ஆனால் மூன்று நாளைக்குப் பின் மீன் யோனாவை வெட்டாந்தரையில் வாந்திபண்ணிற்று; தேவன் அவனை திரும்பவும் உயிரோடு எழுப்பினார் என்பதை நீ மறந்திருக்க வாய்ப்பில்லை.*

*இஸ்லாமியர் கூற்றுபடி, யோனா மீனின் வயிற்றில் மூன்று நாள் சுவாசமில்லாமலேயே அற்புதவிதமாக உயிரோடு காக்கப்பட்டான் என்று கூறுவது இந்த கதைக்கு எந்த பலனையும் கொடுக்கப்போவதில்லை. மேலும் இயேசு இந்த கதையை பயன்படுத்துவதிலிருந்து, அவர் யோனா இறந்ததை புரிந்துகொண்டிருந்தார் என்பது தெளிவாகிறதல்லவா?*

*யோனா தம் அனுபவத்தைக் குறித்து விவரிக்கும்போது, "நான் பாதாளத்தின் வயிற்றிலிருந்து கூக்குரலிட்டேன்" (யோனா* 2:2); *"ஆனாலும் என் தேவனாகிய கர்த்தாவே, நீர் என் பிராணனை அழிவுக்குத் தப்புவித்தீர்" (யோனா* 2:6) *என்று கூறுகிறான்.*

*உன்னுடைய சில முஸ்லீம் நண்பர்கள் மூன்று பகல் மற்றும் மூன்று இரவு என்ற கருத்தின் அடிப்படையில் உன்னுடன் விவாதம் செய்திருப்பார்கள். இது, இயேசு வாக்களித்து நிறைவேற்றின உன்னத வாக்குத்தத்தமான மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுதல் என்ற மிக முக்கிய கருத்தை மறைப்பதற்கு மேற்கொள்ளப்படும் வாதமாகும். உனக்கு ஒரு உதாரணத்தின் மூலம் இதனை புரிய வைக்கிறேன். உனது நண்பன் உனக்கு* 5 *நிமிடத்தில்* 10 *லட்சம் ரூபாய் தருவதாக வாக்களித்து விட்டு, உன் கடிகாரத்தின்படி* 10 *நிமிடங்கள் சென்றபின்பே அவன் அந்த பணத்தை தருவதால், நீ அந்த பணத்தை வாங்க மறுப்பதை போலாகும். நீ சிந்தித்து பார்ப்பாய் என்று நம்புகிறேன். இந்த மூன்று நாள் இரவு பகல் என்பதைப் பற்றி விவரமாக விளக்கம் தேவையானால் எனக்கு தெரிவிக்க மறக்காதே.*

**2) *கொடுக்கவும் மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் அதிகாரம்:***

*உனக்கு இன்னும் தெளிவாக புரிய, மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுதலைக் குறித்து இயேசுக் கிறிஸ்து கூறிய வேறு சில முன்கூற்றுகளையும் பார்போம்.*

*இயேசுக் கிறிஸ்து தம் மரணம் மற்றும் உயிர்த்தெழுதலைக்குறித்து ஏற்கனவே பலமுறை கூறியுள்ளார். உதாரணமாக மாற்கு* 8:31, 10:34. *அவர் தீர்க்கதரிசனமாகவோ, வாக்குத்தத்தமாகவோ மட்டும் இதை கூறாமல், தம் சீஷர்கள் இந்த சம்பவத்தைக்குறித்து அறிந்திருக்கவும், அதை எதிர்பார்த்திருக்கவும் வேண்டுமென விரும்பினார்.*

*அவர் இதை, வெறுமனே, நடக்கப்போகும் ஒரு சம்பவமாக மாத்திரம் கூறாமல், தமக்குள்ள அதிகாரம் நிறைவேறுதலைக் குறித்தே பேசினார். "அதைக் கொடுக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் எனக்கு அதிகாரமுண்டு"* (யோவான் 10:17-18)

*உனது இஸ்லாமிய நண்பர்கள் இயேசு மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தார் என்பதை உணரும் போது அவர்கள் உனக்கு இப்படி சொல்வார்கள். "ஈஸா மரித்தோரை எழுப்பினார் என்று குர்ஆன் சொல்கிறது. ஆக, அவருக்கு முன் பலர் உயிர்த்தெழுந்து உள்ளனரே! எனவே ஈஸாவின் உயிர்த்தெழுதலை மட்டும் எப்படி விசேஷமாக கருத முடியும்?"*

*இந்த கேள்விகளுக்கு பதில் மிகவும் சுலபமானது. இயேசு எப்படி லாசருவை மரித்தோரிலிருந்து எழுப்பினார், எப்படி நாயீன் ஊர் விதவையின் மகனை எழுப்பினார் என்றெல்லாம் வேதத்தில் சுவிசேஷ நூல்களில் விரிவாக நீ வாசித்திருக்கிறாய். லாசருவுக்கு, தாமாக மரித்தோரிலிருந்து எழுந்திருக்கும் வல்லமை இல்லை. அவருக்கு அதை முன்னறிவிக்கவும் இயலவில்லை. ஆனால் இயேசுவோ, தாம் மரித்தோரிலிருந்து எழுந்திருப்பதை முன்னறிவித்ததுமல்லாமல் அதை நிறைவேற்றிக் காண்பித்தார்.*

*இயேசு சிலுவையிலறையப்பட்டு, மரித்து கல்லறையில் அடக்கம்செய்யப் பட்டார். ஆனால் மூன்றாவது நாள் உயிரோடு எழுந்தார். அவர் உயிர்த்தெழுந்தபின்பு, பலமுறை தம்மைப் பின்பற்றியவர்களுக்கு காணப்பட்டார். உதாரணமாக, மகதலேனா மரியாள் மற்றும் சில பெண் சீடர்கள், பேதுரு, எம்மாவூருக்கு சென்ற இரு சீடர்கள், 11 அப்போஸ்தலர் கூடியிருந்த இடம், மேலும் 500 பேர் கூடியிருந்த கூட்டத்திலும் (1 கொரி. 15:3-7) அவர் தம்மை வெளிப்படுத்தினார். 40 நாட்களுக்குப் பின் அவர் பரத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு, தம் சீடர்களை வல்லமையால் ஆட்கொள்ளும் படி பரிசுத்தாவியின் வரத்தை பொழிந்தருளினார்.*

### 3) *இஸ்லாமியர்களின் குழப்பம்:*

*தம்பி, உன்னுடைய இஸ்லாமிய நண்பர்கள் இயேசு நேரடியாக கடவுளால் மரணமில்லாமல் வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டார் என்றும், அவர் திரும்பவும் வரும்வரை அங்கேயே இருப்பார் என்றும் உனக்கு போதிக்கின்றனர்.*

*இவர்கள் சொல்லும் இந்தக் கதை இயேசுவின் பரிகாரபலி (குர்பானி)யையும், மரணத்திலிருந்து வெற்றி பெற்றதையும் மாத்திரம் மறுக்க முயலவில்லை, மாறாக ஒரு மனிதன் சாதாரண மனித உடலோடு 2000 வருடமாக பரலோகத்தில் வாழ்வதாக ஒரு விநோதமான, தேவையற்ற அற்புதமாகிய ஒரு கருத்தையும் முன்வைக்கிறது. ஆனால் சிலர் இந்த விநோதத்தை தவிர்க்கும்பொருட்டு, இயேசு சிலுவையில் மரிக்கவுமில்லை, வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்படவுமில்லை, மாறாக அவர் எல்லோரையும்போல எங்கோ ஒரு இடத்தில் ஒரு சாதாரண மரணமடைந்தார் என்கின்றனர். உதாரணமாக அகமதியா முஸ்லீம்கள், அவர் காஷ்மீரில் மரணமடைந்தார் என்கின்றனர். கிறிஸ்தவரோடு பல விவாதங்கள் செய்த அகமது தீதட் என்பவர் இந்த கருத்தை ஒருவகையாக போதித்துவந்தார். குர்-ஆனும் இஸ்லாமியர்களும் அதிகமாக குழம்பியிருக்கிற ஒரு காரியம் உண்டு என்றுச் சொன்னால், அது இயேசுவின் சிலுவை மற்றும் உயிர்த்தெழுதல் பற்றியதாகும். ஒவ்வொரு இஸ்லாமிய அறிஞரும் ஒவ்வொரு விதமாக பதில் அளிப்பார்.*

*எனதன்பு தம்பியே, யோனாவின் அடையாளத்தை இயேசுவின் மரணத்தோடு ஒப்பிட்டு பார்த்து ஓரளவிற்கு தெளிவடைந்திருப்பாய் என்று நம்புகிறேன்.*

*கடிதம் மிகவும் நீண்டதாக இருக்கக்கூடாது என்பதற்காக, நான் சுருக்கமாக எழுதுகிறேன். கண்டிப்பாக நீ ஒரு மெயில் அனுப்புவாய் என்று எதிர்பார்க்கிறேன். உன் சந்தேகங்களை எழுது. என்னால் முடிந்த மட்டும் உனக்கு தெளிவு படுத்த முயற்சிக்கிறேன். நாளை ஒரு கடிதத்தோடு உன்னை சந்திக்கிறேன். அதாவது சிலுவையின் நேரத்தில் அல்லாஹ் செய்த காரியங்கள் எவ்வளவு பெரிய பாதிப்பை இஸ்லாமுக்கு உண்டாக்கியிருக்கிறது என்பதை அடுத்த கடிதத்தில் உனக்கு விவரிப்பேன்.*

*இப்படிக்கு, உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

## நாள் 16 - இயேசுவின் சீடர்களை அல்லாஹ் ஏமாற்றலாமா?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக

நீ எழுதிய கடிதத்தில் "இயேசு சிலுவையில் அறையப்படவில்லை, அல்லாஹ் இயேசுவை அப்படியே எடுத்துக்கொண்டார், இயேசுவின் இடத்தில் இன்னொரு நபரை வைத்துவிட்டார், அங்கு இருந்தவர்கள் அனைவரும், இயேசு தான் சிலுவையில் மரித்ததாக நினைக்கும்படி அல்லாஹ் செய்துவிட்டார்" என்று எழுதியிருந்தாய். இதற்கு என்னுடைய பதில் என்ன என்று கேட்டு இருந்தாய்.

இந்த கேள்விகளுக்கு முதல் பதிலை நான் நேற்று அனுப்பினேன், இப்போது இரண்டாவது பதிலை பார்க்கலாம்.

**அல்லாஹ் செய்த மிகப்பெரிய தவறு இது தான் என்று நான் சொல்லுவேன்.**

நீ உன் கடிதத்தில் ஏன் நீங்கள் இஸ்லாமை தழுவக்கூடாது என்று அடிக்கடி கேட்கிறாய், ஆனால், இப்போது நீ கடிதத்தில் எழுதிய படி, அல்லாஹ் அனேக தவறுகள் செய்து இருப்பதினால் அவரை இறைவன் என்று நம்ப முடிவதில்லை. அப்படி என்ன அல்லாஹ் தவறு செய்துவிட்டார்? என்று நீ கேட்கலாம், அதற்கு இப்போது நான் பதிலை கீழ்கண்ட தலைப்புகளில் தருகிறேன்.

- இயேசுவின் தாய், உலக பெண்களில் சிறந்தவர் - அல்லாஹ்வின் சாட்சி
- இயேசுவின் சீடர்கள் நல்லடியார்கள் - அல்லாஹ்வின் சாட்சி
- யூதர்களின் சூழ்ச்சி மற்றும் அல்லாஹ்வின் சூழ்ச்சி
- அல்லாஹ்வின் சூழ்ச்சியின் விளைவு?

---

### 1) இயேசுவின் தாய், உலக பெண்களில் சிறந்தவர் - அல்லாஹ்வின் சாட்சி

இயேசுவின் தாயாகிய மரியாள் பற்றி குர்ஆன்கூறும் போது, அவர் "அல்லாஹ்வினால் தெரிந்தெடுக்கப்பட்டவர்", "அல்லாஹ் தூய்மையாக்கியுள்ளான்", மற்றும் "உலக பெண்கள் யாவரையும்விட மேன்மையாக தெரிந்தெடுத்துள்ளான்" என்று சாட்சி பகருகிறது. இதனை குர்ஆன் 3:42ல் காணலாம்:

(நபியே! மர்யமிடத்தில்) மலக்குகள்; மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்;. உம்மைத் தூய்மையாகவும் ஆக்கியிருக்கிறான்; இன்னும் உலகத்திலுள்ள பெண்கள் யாவரையும் விட (மேன்மையாக) உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்" (என்றும்). (குர்ஆன் 3:42)

குர்ஆன் 5:75ல், மரியாள் உண்மையுள்ளவர் என்றும் குர்ஆன் கூறுகிறது.

### 2) இயேசுவின் சீடர்கள் நல்லடியார்கள் - அல்லாஹ்வின் சாட்சி

இயேசுவின் சீடர்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டு இருந்தார்கள் என்றும், அவர்கள் முஸ்லிம்களாக இருந்தார்கள் என்றும் அவர்களுக்கு பகைவர்கள் மீது அல்லாஹ் உதவி அளித்தான் என்றும் குர்ஆன் சாட்சி பகருகிறது.

அவர்களில் குஃப்ரு இருப்பதை (அதாவது அவர்களில் ஒரு சாரார் தம்மை நிராகரிப்பதை) ஈஸா உணர்ந்த போது, "அல்லாஹ்வின் பாதையில் எனக்கு உதவி செய்பவர்கள் யார்?" என்று அவர் கேட்டார்; (அதற்கு

அவருடைய சிஷ்யர்களான) ஹவாரிய்யூன்; "நாங்கள் அல்லாஹ்வுக்காக (உங்கள்) உதவியாளர்களாக இருக்கிறோம், நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் மீது ஈமான் கொண்டுள்ளோம்;. திடமாக நாங்கள் (அவனுக்கு முற்றிலும் வழிப்பட்ட) முஸ்லீம்களாக இருக்கின்றோம், என்று நீங்கள் சாட்சி சொல்லுங்கள்" எனக் கூறினர். (குர்ஆன் 3:52)

ஈமான் கொண்டவர்களே! மர்யமின் குமாரர் ஈஸா (தம்) சீடர்களை நோக்கி, "அல்லாஹ்வுக்காக எனக்கு உதவி செய்வோர் யார்?" எனக் கேட்க, சீடர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக இருக்கின்றோம்" என்று கூறியதுபோல், நீங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக ஆகிவிடுங்கள் - எனினும், இஸ்ராயீல் மக்களில் ஒரு கூட்டம் ஈமான் கொண்டது, பிறிதொரு கூட்டமோ நிராகரித்தது, ஆகவே ஈமான் கொண்டவர்களுக்கு, அவர்களுடைய பகைவர்களுக்கு எதிராக உதவி அளித்தோம் - அதனால் அவர்கள் வெற்றியாளராய் ஆகிவிட்டார்கள். (குர்ஆன் 61:14)

### 3) யூதர்களின் சூழ்ச்சி மற்றும் அல்லாஹ்வின் சூழ்ச்சி

இயேசுவை கொலை செய்ய யூதர்கள் சதி செய்ததாகவும்,அதனை முறியடிக்க அல்லாஹ்வும் சதி செய்ததாக குர்ஆன் கூறுகிறது.

(ஈஸாவை நிராகரித்தோர் அவரைக் கொல்லத்) திட்டமிட்டுச் சதி செய்தார்கள். அல்லாஹ்வும் சதி செய்தான்;. தவிர அல்லாஹ் சதி செய்பவர்களில் மிகச் சிறந்தவன் ஆவான். (குர்ஆன் 3:54)

மேலும், இயேசுவை சிலுவையில் அறையப்பட்ட பிறகோ, அல்லது அதற்கு முன்பாகவோ அல்லாஹ் இயேசுவை எடுத்துக்கொண்டாராம். ஆனால், யாருக்கும் தெரியா வண்ணம், இயேசுவின் இடத்தில் இன்னொருவன் ஒப்பாக்கப்பட்டானாம். அல்லாஹ் செய்த இந்த சூழ்ச்சி யாருக்கும் தெரியவில்லை, எல்லாரும் "இயேசு தான் சிலுவையில் அறையப்பட்டு மரித்தார்" என்று எண்ணிக்கொண்டனர்.

இன்னும், "நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் தூதராகிய - மர்யமின் குமாரராகிய-ஈஸா மஸீஹை கொன்றுவிட்டோம்" என்று அவர்கள் கூறுவதாலும் (அவர்கள் சபிக்கப்பட்டனர்). அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை, அவரை அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை. ஆனால் அவர்களுக்கு (அவரைப் போன்ற) ஒருவன் ஒப்பாக்கப்பட்டான்;. மேலும் இ(வ் விஷயத்)தில் அபிப்பிராய பேதம் கொண்டவர்கள், அதில் சந்தேகத்திலேயே இருக்கின்றார்கள் - வெறும் யூகத்தைப் பின்பற்றுவதேயன்றி அவர்களுக்கு இதில் எத்தகைய அறிவும் கிடையாது. நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை. (குர்ஆன் 4:175)

### 4) அல்லாஹ்வின் சூழ்ச்சியின் விளைவு?

தம்பி இதுவரை உனக்கு வசனங்களை மேற்கோள் காட்டினேன். இப்போது அல்லாஹ் செய்த சூழ்ச்சி எவ்வளவு பெரிய தவறாக மாறியுள்ளது என்பதை உனக்கு விளக்குகிறேன்.

இயேசுவை சிலுவைக்கு அழைத்துக்கொண்டு செல்லும் போது, அல்லாஹ் ஆள்மாறாட்டம் செய்து, எல்லாருடைய கண்களில் மண்ணை வாரிப்போட்டு (அதாவது ஏமாற்றி) வேறு ஒரு நபரை சிலுவையில் அறையும் படி செய்துவிட்டார். இதனை பார்த்துக்கொண்டு இருந்த மக்கள் அனைவரும் இயேசு சிலுவையில் அறையுண்டு மரித்துவிட்டார் என்று நினைத்துக்கொண்டனர். ஆனால், 600 ஆண்டுகளுக்கு பின்பு அரேபிய பாலைவனத்தில் எழும்பிய முஹம்மது மூலமாக "இல்லை... இல்லை... மரித்தது இயேசு அல்ல, அவர் வேறு ஒரு நபர், அல்லாஹ் சதி செய்து, யூதர்களின் சதியை முறியடித்துவிட்டார்" என்று குர்ஆனில் எழுதிவிட்டார். கிட்டத்தட்ட எல்லா இஸ்லாமிய அறிஞர்களும் சிலுவை மரணம் பற்றிச் சொல்லும் சுருக்கம் இது தான்.

இப்படி சதி செய்த அல்லாஹ், ஐந்து வகையான மக்களை ஏமாற்றியுள்ளார்:

1) இயேசுவின் சீடர்கள்

2) இயேசுவின் தாய்

3) யூத மத தலைவர்கள்

4) ரோம அரசின் சேவகர்கள்

5) எருசலேமில் வாழ்ந்த பொதுமக்கள்.

யூத மத தலைவர்களையும், ரோம அரசின் சேவர்களையும் அல்லாஹ் ஏமாற்றினார், அதாவது தாங்கள் கொன்றது இயேசுவை என்று அவர்கள் நினைத்துக்கொள்ளும் அளவிற்கு ஏதோ மாயம் செய்து சதி செய்தார். எதிரிகளின் சதியை முறியடிப்பது சரியே.

**ஆனால், இயேசுவின் சீடர்களையும், இயேசுவும் தாயையும் ஏமாற்றியது எந்த விதத்தில் நியாயமானது?**

நாங்கள் உன் வேதத்தையும், தூதரையும் நம்புகிறோம், எங்களை சத்தியத்திற்கு சாட்சி சொல்பவர்களாக செய்வாயாக என்று சீடர்கள் அல்லாஹ்விடம் வேண்டினார்கள்:

"எங்கள் இறைவனே! நீ அருளிய (வேதத்)தை நாங்கள் நம்புகிறோம், (உன்னுடைய) இத்தூதரை நாங்கள் பின்பற்றுகிறோம்;. எனவே எங்களை (சத்தியத்திற்கு) சாட்சி சொல்வோருடன் சேர்த்து எழுதுவாயாக!" (என்று சிஷ்யர்களான ஹவாரிய்யூன் பிரார்த்தித்தனர்.) (குர்ஆன் 3:53)

ஆனால் அல்லாஹ் செய்தது என்ன? சீடர்களை அல்லாஹ் ஏமாற்றினார், இயேசு தான் சிலுவையில் மரித்தார் என்று சீடர்கள் நினைத்தார்கள். இயேசு சிலுவையில் அறையப்படும் போது பார்த்துக்கொண்டு இருந்த பொதுமக்களையும் அல்லாஹ் ஏமாற்றியுள்ளார்.

சரி, இப்படி அனைத்து மக்களையும் ஏமாற்றிய அல்லாஹ் வெற்றி பெற்றாரா என்று பார்த்தால், அதுவும் இல்லை, இன்று உலகின் பெரிய மார்க்கமாக கிறிஸ்தவம் திகழ்கிறது. அல்லாஹ் செய்த தவறினால் கிறிஸ்தவம் உருவானது என்றுச் சொல்லலாம் அல்லவா?

**யெகோவா தேவனின் வெற்றி, அல்லாஹ்வின் தோல்வி:**

குறைந்தபட்சம், இயேசுவின் தாய் மற்றும் சீடர்களுக்கு அல்லாஹ் தன் திட்டத்தை அறிவித்து இருந்திருந்தால், சீடர்கள் தங்கள் வேலையை பார்த்து சென்று இருப்பார்கள். சீடர்களிடம் மறைத்தபடியால், அவர்கள் இயேசு மரித்ததாக நினைக்க, மறுபடியும் இயேசு மூன்றாம் நாள் உயிரோடு எழுந்ததாகவும், சீடர்களிடம் பேசியதாகவும் பைபிள் கூறுகிறது, இதோ இன்று மிகப்பெரிய மார்க்கமாக கிறிஸ்தவம் திகழ்கிறது. கிறிஸ்தவத்திற்கு அடித்தளம் அமைத்து எது? அல்லாஹ்வின் அறியாமையாகும்.

எதிர் காலத்தில் என்ன நடக்கும் என்று அல்லாஹ்விற்கு தெரிந்து இருந்தால், சீடர்களுக்கு அன்றே உண்மையை கூறியிருப்பார், ஆனால், அல்லாஹ்விற்கு எதிர்காலம் தெரியவில்லை, ஆகையால் சும்மா இருந்தார், 600 ஆண்டுகள் சும்மா இருந்தார். இயேசு சிலுவையில் அறையப்பட்டு 50வது நாளிலிருந்து சீடர்கள் இயேசுவின் சுவிசேஷத்தை பரப்ப ஆரம்பித்துவிட்டார், அல்லாஹ்வின் சதி, மிகப்பெரிய கெடுதியாக இஸ்லாமுக்கு மாறிவிட்டது.

**தம்பி, இப்படிப்பட்ட அல்லாஹ்வை எப்படி நம்புவது?**

• நாங்கள் முஸ்லிம்கள் என்றும், நல்வழிகாட்டு என்றும் வேண்டிக்கொண்ட சீடர்களையே அல்லாஹ் ஏமாற்றினால், உன்னை இன்று அல்லாஹ் ஏமாற்றமாட்டார் என்று என்ன நிச்சயம்?

• உலக பெண்களில் சிறந்த பெண்மணி என்று இயேசுவின் தாயைப்பற்றி கூறிவிட்டு, அவரையும் ஏமாற்றிவிட்டார், தன் மகனை அல்லாஹ் தன்னிடம் எடுத்துக்கொண்டார் என்று ஏன் அவரிடம் கூறவில்லை? கூறியிருந்தால், அவர் சீடர்களை தடுத்து இருந்திருப்பார்களே?

• குர்ஆனின் படி முதலாம் நூற்றாண்டு முஸ்லிம்களை (இயேசுவின் சீடர்கள், மரியாள் இன்னும் நம்பிக்கை கொண்ட இதர மக்கள்) அல்லாஹ் வஞ்சித்தார். அப்படியானால், 21ம் நூற்றாண்டில் வாழும் உன்னை அல்லாஹ் ஏமாற்றமாட்டார் என்று என்ன நிச்சயம் தம்பி?

இதுவரை நான் மேலே கூறிய விவரங்கள், பிரச்சனைகள் அனைத்தும் குர்ஆன் சொல்வது உண்மை என்று நினைத்துக்கொண்டால் வரும் பிரச்சனையாகும். ஆனால் பைபிளின் படி பார்த்தால் யெகோவா தேவன் தன் திட்டத்தில் முழுவதுமாக வெற்றிப் பெற்றார், அல்லாஹ் தோற்றுப்போனார்.

கொஞ்சம் அதிகமாகவே எழுதிவிட்டேன், அடுத்த கடிதத்தில் உன்னை சந்திக்கிறேன், உன் கேள்விகள் எதுவாக இருந்தாலும் எனக்கு எழுத மறக்காதே

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

மூலம்

உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்

---

## நாள் 17 – உன்னதப்பாட்டிற்குள் உன்னதர் முஹம்மது உண்டா?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

சாந்தியும் சமாதானமும் உனக்கு உண்டாவதாக.

தம்பி, நீ தொடர்ந்து என்னோடு கடிதத்தொடர்பு வைத்துக்கொண்டு இருப்பதினால் நான் அதிகமாக சந்தோஷமாக இருக்கிறேன்.

உன் கடிதத்தில் நீ குறிப்பிட்டு இருந்தாய், அதாவது "பழைய ஏற்பாட்டில் முஹம்மதுவைப் பற்றிய முன்னறிவிப்புக்கள் உண்டு, உன்னதப்பாட்டு 5:14-16 வரையுள்ள வசனத்தில், "முஹம்மது" என்ற பெயர் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளது என்றும், இந்த வசனத்தில் வரும் பெயர் எபிரேய மொழியில் அப்படியே முஹம்மது என்பதாகும் என்றும் நீ எழுதியுள்ளாய்". மேலும் உன் இஸ்லாமிய நண்பர்கள் எபிரேய மொழியை கற்ற ஒரு இஸ்லாமிய இமாமிடம் உன்னை கொண்டுச் சென்றதாகவும், நீ அவரிடம் கேள்வி கேட்டு, அவர் எபிரேய மொழியில் உனக்கு அந்த உன்னத்தப்பாட்டு வசனத்தை காட்டியதாகவும் நீ கூறினாய்". ஆகையால், பைபிளில் முன்னறிவிக்கப்பட்ட தீர்க்கதரிசியை ஏன் நீங்கள் விசுவாசிக்கக்கூடாது என்று என்னிடம் கேட்டு இருந்தாய்.

உன் ஆய்வையும், ஆர்வத்தையும் நான் மெச்சிக்கொள்கிறேன். உன் கேள்விகளுக்கு பதில்களை எழுதுவது எனக்கு மிகவும் பிடித்தமான வேலையாக உள்ளது.

உனக்கு சலிப்பு உண்டாகக்கூடாது என்பதற்காக நான் என் கடிதங்களில் குறைந்த வசன மேற்கோள்களை கொடுத்துக்கொண்டு இருக்கிறேன். ஆனால், நீ கேட்கும் கேள்விகள் சில நேரங்களில் என்னை அதிகமான வசனங்களை மேற்கோள்களாக காட்டி விளக்க கட்டாயப்படுத்துகின்றன. அப்படிப்பட்ட

**ஒரு கேள்வியை நீ கேட்டுள்ளாய். நான் இப்போது உன் கேள்விக்கு பதிலை தருகிறேன்.**

1) பைபிள் திருத்தப்பட்டது என்று இஸ்லாமியர்கள் குற்றம் சாட்டுகிறார்கள் , ஆனால், ஏன் பைபிளிலிருந்து சில வசனங்களை எடுத்துக்கொண்டு, இதோ இங்கே எங்கள் நபி பற்றி கூறியுள்ளது என்று சொல்கிறார்கள்?

2) உங்களுக்கு தேவைப்பட்டால், பைபிளிலிருந்து வசனங்களை காட்டுவீர்கள், தேவையில்லையானால் பைபிள் மீது குற்றம் சுமத்துவீர்கள்? ஏன் இந்த இரட்டை வேஷம்?

3) முக்கியமாக உன்னதப்பாட்டு என்ற பழைய ஏற்பாட்டு நூல் மிகவும் ஆபசமாக உள்ளது என்று காது கிழிய மேடையில் பேசுகிறீர்கள், ஆனால், அதே உன்னத்தப்பாட்டில் உங்கள் நபியை தேடுகிறீர்கள்? இப்படி சொல்ல உங்களுக்கு கூச்சமாகவும் வெட்கமாகவும் தெரியவில்லையா? ஆபாசமாக இருக்கிறது என்று குற்றம் சுமத்தும் புத்தகத்தில் எங்கள் முஹம்மதுவை நாம் காட்டுகின்றோமே, இது சரியானதா என்று இஸ்லாமியர்கள் சுயமாக சிந்திப்பார்களா?

ஆக, உங்களுக்கு தேவையான பைபிள் வசனங்களை பிடித்துக்கொண்டு இவைகள் திருத்தப்படாத வசனங்கள் என்று சொல்லுவீர்கள், அதே பைபிளின் அடுத்தடுத்த வசனங்கள் திருத்தப்பட்டுள்ளது என்று சொல்லுவீர்கள், இது என்ன நியாயம்?

**இப்போது நேரடியாக உன் கேள்விக்கான பதிலை காணலாம்.**

**முதலாவதாக,** முஹம்மது பற்றிய எந்த ஒரு முன்னறிவிப்பும் பைபிளில் இல்லை, அது பழைய ஏற்பாடாக இருக்கட்டும், அல்லது புதிய ஏற்பாடாக இருக்கட்டும், இரண்டிலும் உங்கள் நபி பற்றி ஒரு சிறு குறிப்பும் இல்லை.

**இரண்டாவதாக,** உன்னத்தப்பாட்டிற்கு வரும் போது, அது கணவன் மனைவி அல்லது காதலன் காதலிக்கு இடையே நடைபெற்ற ஒரு உரையாடலாக உள்ளது. இப்போது நீ மேற்கோள் காட்டிய வசனங்களை படிப்போம்:

5:14 அவர் கரங்கள் படிகப்பச்சை பதித்த பொன் வளையல்களைப் போலிருக்கிறது; அவர் அங்கம் இந்திரநீல இரத்தினங்கள் இழைத்த பிரகாசமான யானைத் தந்தத்தைப்போலிருக்கிறது.

5:15 அவர் கால்கள் பசும்பொன் ஆதாரங்களின்மேல் நிற்கிற வெள்ளைக்கல் தூண்களைப்போலிருக்கிறது; அவர் ரூபம் லீபனோனைப்போலவும் கேதுருக்களைப்போலவும் சிறப்பாயிருக்கிறது.

5:16 அவர் வாய் மிகவும் மதுரமாயிருக்கிறது; அவர் முற்றிலும் **அழகுள்ளவர்**. இவரே என் நேசர்; எருசலேமின் குமாரத்திகளே! இவரே என் சிநேகிதர்.

மேற்கண்ட வசனங்களை முழுவதுமாக முதலாம் வசனத்திலிருந்து படித்துப்பார்த்தால், ஒரு பெண் தன் நாயகனைப் பற்றி வர்ணிக்கும் வர்ணனையை காணலாம். இந்த விவரங்களில் திடீரென்று 7ம் நூற்றாண்டில் வந்த முஹம்மது எங்கே வந்தார்? தம்பி, நீ முதலாவது ஒரு வசனத்திற்கு பொருள் கூறும் போது, அதைச் சுற்றியுள்ள வசனங்களை கவனிக்க வேண்டாமா? இப்படியா அறைகுறையாக வியாக்கீனம் செய்வது சரியா?

இப்போது 16ம் வசனத்தை எபிரேய மொழியில் பார்க்கலாம்:

எபிரேய மொழியில் இந்த வார்த்தையின் எண்: 4261

எபிரேய வார்த்தை: מַחְמָד (machmad)

அர்த்தம்: 1) desire, desirable thing, pleasant thing – ஆசையான, விருப்பமுள்ள, அழகான.

இந்த தொடுப்பை சொடுக்கி, எபிரேய அகராதியில் இந்த விளக்கத்தை தெரிந்துக்கொள்: **http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H4261&t=KJV**

***மக்மத்:*** என்ற வார்த்தை எங்கு வந்தாலும் அங்கு உங்கள் முஹம்மது இருக்கிறார் என்றுச் சொல்வது அறியாமையாக உள்ளது. நீ வெறும் உன்னதப்பாட்டை மற்றுமே மேற்கோள் காட்டினாய், இந்த வார்த்தை வரும் இதர வசனங்களையும் காண்போம். இந்த ஒவ்வொரு இடத்திலும் உங்கள் முஹம்மது பற்றியே முன்னறிவிப்பு செய்யப்பட்டுள்ளது என்றுச் சொல்லுவாயா? நிச்சயமாக சொல்லமாட்டாய்!

**1) *பழைய ஏற்பாட்டிலிருந்து* 1 *இராஜாக்கள்* 20:6*ம் வசனத்தை ஒரு முறை படிப்போமா?***

*ஆனாலும் நாளை இந்நேரத்தில் என் ஊழியக்காரரை உன்னிடத்தில் அனுப்புவேன்; அவர்கள் உன் வீட்டையும் உன் ஊழியக்காரரின் வீடுகளையும் சோதித்து, உன் கண்ணுக்குப்* ***பிரியமானவைகள்*** *எல்லாவற்றையும் தங்கள் கைகளில் எடுத்துக்கொண்டு போவார்கள் என்றார் என்று சொன்னார்கள். (* 1 *இராஜாக்கம்* 20:6)

*இந்த வசனத்தில் "****பிரியமானவைகள்****" என்ற தமிழ் வார்த்தையின் எபிரேய வார்த்தை, நீ சொல்லுகின்ற "மக்மத்" என்பதாகும். ஒரு இராஜா இன்னொரு இராஜாவிடம் சொல்லியனுப்பிய செய்தி தான் இந்த வசனமாகும். உன் வீட்டில் இருக்கும் நல்லவைகள் அனைத்தையும் என் சேவகர்கள் எடுத்துக்கொள்வார்கள் என்று சொல்லியனுப்புகிறார். தம்பி இந்த இடத்திலும் உங்கள் முஹம்மது பற்றி முன்னறிவிப்பு உண்டா? முழு அதிகாரத்தையும் படித்துப்பார் தம்பி.*

**2) *அதே பழைய ஏற்பாட்டில்,* 2 *நாளாகமம்* 36:19*ம் வசனத்தை படிப்போமா?***

*தம்பி இந்த வசனத்தில் "திவ்வியமான" என்ற தமிழ் வார்த்தையின் எபிரேய வார்த்தை தான் "மக்மத்" என்பது, அதாவது ஆலயத்தை தீயிட்டு கொளுத்தி, அதில் கணப்பட்ட அழகான பணிமுட்டுக்களையும் அழித்துவிட்டார்கள் என்று இந்த வசனம் சொல்கிறது.*

*அவர்கள் தேவனுடைய ஆலயத்தைத் தீக்கொளுத்தி, எருசலேமின் அலங்கத்தை இடித்து, அதின் மாளிகைகளையெல்லாம் அக்கினியால் சுட்டெரித்து, அதிலிருந்த* ***திவ்வியமான*** *பணிமுட்டுகளையெல்லாம் அழித்தார்கள். (*2 *நாளாகமம்* 36:19)

*தம்பி, இந்த இடத்தில் உங்கள் முஹம்மதுவை சேர்த்து எழுதினால் "****அதிலிருந்த முஹம்மதுவான பணிமுட்டுகளையெல்லாம் அழித்தார்கள்****" என்று வரும். இதன் பொருள் உங்கள் முஹம்மதுவை அழித்தார்கள் என்று வருகிறது. இது சரியான ஒன்றாகுமா? சிந்தித்துப்பார். உங்கள் இஸ்லாமியர்களின் வாதஞானம் எவ்வளவு கெடுதியை முஹம்மதுவிற்கு உண்டாக்குகிறது என்று பார்த்தயா? நீ பேசிய அந்த எபிரேயம் தெரிந்த இஸ்லாமிய இமாம், உன்னதப்பாட்டை மட்டுமே படிப்பாரா, ஆய்வு செய்வாரா? இந்த இதர புத்தகங்களை படிக்கமாட்டாரா?*

*உனக்கு இன்னும் அனேக வசனங்கள் காட்டி சலிப்புண்டாக்க நான் விரும்பவில்லை, இந்த தொடுப்பை சொடுக்கி (***http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H4261&t=KJV**) *இதர வசனங்களையும் சரி பார்த்துக்கொள்.*

*இந்த வார்த்தை இடம்பெறும் வசனங்கள்: உன்னதப்பட்டு* 5:16 (*நீ குறிப்பிட்ட வசனம்), ஏசாயா* 64:11, *புலம்பல்* 1:10,11, *எசேக்கியேல்* 24:16, 21, 25, *ஓசியா* 9:6, 16 , *யோவேல்* 3:5

***இஸ்லாமிய அறிஞர்களின் ஏமாற்றுவேலை:***

*"மக்மத்" என்றால், "நல்ல, பிரியமான, இனிமையான" போன்ற அர்த்தங்கள் கொண்ட வார்த்தையாகும். இது அனேக இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது, அவைகளை நீயே சரி பார்த்துக்கொள்ளலாம். ஆனால், இஸ்லாமிய அறிஞர்கள் நம்மிடம் வந்து முஹம்மது குறித்த முன்னறிவிப்புக்கள் பைபிளில் உள்ளது என்றுச் சொல்லும் போது, அவர்கள் உண்மையை மறைத்துக்கூறுவார்கள். உன்னதப்பாட்டில் முஹம்மதுவின் முன்னறிவிப்பு உள்ளது என்று உனக்கு சொன்னவர்கள், இதர வசனங்களில் கூட அந்த வார்த்தை உள்ளது என்று ஏன் உனக்கு தெரிவிக்கவில்லை? ஏனென்றால், அவர்கள் எதனை உனக்கு சொல்லவேண்டுமென்று நினைத்தார்களோ, அதனை மட்டுமே கூறுவார்கள், நாம் தான் ஏமாறாமல் இருந்து எல்லாவற்றையும் சோதித்து பார்த்து தெரிந்துக் கொள்ளவேண்டும். நாம் ஒரு முறை ஏமாறலாம், ஒன்பது முறை ஏமாறலாமா? நாம் சிந்திக்கும் திறம் படைத்த மனிதர்கள் அல்லவா? குறைந்த பட்ச ஆய்வு நாம் செய்தால், உண்மை எது பொய் எது என்பது விளங்கும்.*

*இதைப்பற்றி உனக்கு மேலதிக விவரங்கள் தேவைப்பட்டால் எனக்கு எழுத தயங்காதே.*

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

---

## நாள் 18 – ஏன் நீங்கள் பைபிளை நம்பிக்கொண்டே ஒரு முஸ்லிமாக இருக்கக்கூடாது?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உன் கடிதம் கண்டேன், மகிழ்ச்சி அடைந்தேன். இத்தனை நாட்களுக்கு பிறகு இன்று நீ எழுதிய கடிதத்தில் தான் நீ, நம் குடும்ப நபர்களை ஞாபகப்படுத்தியுள்ளாய். கர்த்தருடைய கிருபையால் அம்மா, அப்பா தங்கச்சி, அண்ணி எல்லாரும் சுகமாக இருக்கிறார்கள். உன்னைப் பற்றி அதிகமாக நாங்கள் அடிக்கடி பேசுவோம்.

**முக்கியமாக உன் கடிதத்தில் ஒரு விசித்திர கேள்வியை கேட்டுள்ளாய், அதாவது:**

"நீங்கள் பைபிளை படித்துக்கொண்டும் அதே நேரத்தில் குர்-ஆனையும் படித்துக்கொண்டும் ஏன் ஒரு முஸ்லிமாக வாழக்கூடாது? தோராவையும், சங்கீதங்களையும், இன்ஜிலையும் அல்லாஹ் தான் அனுப்பியதாக குர்-ஆன் சொல்கிறது. எல்லா தீர்க்கதரிசிகளையும் நம்பவேண்டும் என்று குர்-ஆன் முஸ்லிம்களுக்கு கட்டளையிடுகிறது, அதே போல முஸ்லிம்களும் நம்புகிறார்கள். இப்படி இருக்கும் போது, ஏன் நீங்கள் குர்-ஆன் மற்றும் பைபிளுக்கும் இடையே வித்தியாசத்தை பெரிது படுத்தி குர்-ஆன் சொல்வதை ஏற்க மறுக்கிறீர்கள்?" என்று கேள்வி கேட்டுள்ளாய்.

தம்பி உன்னுடைய கேள்வி மிகவும் ஆழமானதாக உள்ளது, ஒரு கிறிஸ்தவன் பைபிளை நம்பிக்கொண்டும், அதே நேரத்தில் குர்-ஆனையும் நம்பமுடியாது. ஏன் ஒரு கிறிஸ்தவன் பைபிளையும் நம்பிக்கொண்டு, அதே நேரத்தில் குர்-ஆனையும் பின் பற்ற முடியாது என்பதற்கு கீழ்கண்ட மூன்று காரணங்களை இப்போதைக்கு நான் உன் முன் வைக்கிறேன். இந்த மூன்றும் தடைக்கற்களாக காணப்படுகிறது, நீ ஏற்றுக்கொண்டாலும் சரி, ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் சரி, இது தான் கிறிஸ்தவனின் கண்ணோட்டத்தில் உண்மை.

### 1) 'அல்லாஹ்' என்ற ஒரு தடைக்கல்:

பழைய ஏற்பாட்டையும், புதிய ஏற்பாட்டையும் படிக்கும் ஒரு கிறிஸ்தவனுக்கு இறைவன் என்பவன் எப்படி இருக்கவேண்டும்? அவனது இலக்கணங்கள் என்ன என்பது தெளிவாக புரிந்துவிடும். ஒரு கிறிஸ்தவன் பழைய ஏற்பாட்டை படிக்கும் போது, தேவன் ஒரு பரிசுத்த நீதிபதியாக அவனுக்கு காணப்படுகிறார், குற்றம் செய்பவர்களை தேவன் தண்டிக்கும் போது அவரது பரிசுத்தமும் நீதியும் வெளிப்படுகிறது. உதாரணத்திற்கு சோதோம் கொமோரா பட்டணத்தின் அழிவு பற்றி படிக்கும் போது நீதியுள்ள தேவனாக அவர் செயல்படுகிறார். அதே தேவன் நினிவே பட்டணத்தை அழிக்க யோனாவை அனுப்பிய நிகழ்ச்சியின் கடைசியில் பார்க்கும்போது, ஒரு அன்பான கரிசனையுள்ள தேவனாக காணப்படுகிறார். தன்னுடைய ஊழியக்காரனாகிய யோனாவிடம் நினிவே மக்களைப் பற்றி தேவன் பேசுகின்ற வார்த்தைகள் மக்களின் மனதில் ஒரு நல்ல தாக்கத்தை உண்டாக்குகிறது. இப்படி பழைய ஏற்பாட்டில் தேவன் செயல்பட்ட விதம் மிகவும் ஆச்சரியமாகவும், அதே நேரத்தில் ஒரு இறைவனுக்கு இருக்கவேண்டிய தகுதியாகவும் காணப்படுகிறது.

மேலும், இஸ்ரவேல் ஜனங்களை தண்டிப்பதிலும், அதே நேரத்தில் அவர்களை ஆறுதல் படுத்துவதிலும், தேவன் எப்போதும் முன்வரிசையில் நின்றுக்கொண்டு இருக்கிறார். ஒரு கிறிஸ்தவன் பழைய ஏற்பாட்டை படிக்க படிக்க ஆவியாக இருக்கும் தேவனை தன் ஆன்மீக கண்களால் காண்கின்றான், பேசுகின்றான்,

அவரோடு உறவாடுகின்றான், கிட்டத்தட்ட தேவன் அவனது இருதயத்தில் மறக்க முடியாத ஒரு நபராக மாறிவிடுகின்றார்.

நான் உன்னை ஆசீர்வதிப்பேன், ஏந்துவேன் சுமப்பேன், துன்மார்க்கனின் மரணம் எனக்கு பிரியமானதாக இருக்காது, அவன் மனந்திரும்பவே நான் விரும்புகிறேன் போன்ற அவரது வசனங்கள் மூலமாக நம் யெகோவா தேவன் மனிதனை தன் அன்பின் கயிறுகளால் காட்டி தன் பக்கம் இழுத்துக்கொள்கிறார். இவரை விட்டு ஒருவன் வெளியே வரவேண்டுமென்றால் அது கடினமான ஒன்றாக இருக்கிறது.

இப்படிப்பட்ட தேவனை ருசி பார்த்துவிட்டு, "அல்லாஹ்" என்ற இஸ்லாமிய இறைவனைப் பற்றி அறியும் போது, அவரது குணங்களையும் செயல்களையும் நாம் குர்-ஆனில் ஹதீஸ்களில் படிக்கும் போது, நம் தேவன் நம் மனதில் உருவாக்கும் தாக்கம் போல அது இல்லாமல் இருக்கிறது என்பதை அறியமுடிகிறது. ஏதோ அல்லாஹ் பல கோடி மைல்களுக்கு அப்பால் இருந்துக்கொண்டு நம்மிடம் பேசுவதாகவும், கட்டளைகளை கொடுப்பதாகவும் உணருகிறோம். மேலும் ஒரு அதிகாரியின் கீழ் வேலை செய்யும் சேவகனைப்போல கைகளை கட்டிக்கொண்டு, அதிகாரி எப்போது பேசுவார், கட்டளைகளை கொடுப்பார், அதனை எப்படி நாம் செயல்படுத்தலாம் என்பது போல ஒரு உணர்வோடு இருப்பதாக மனிதன் உணருகிறான்.

எனவே, ஒரு கிறிஸ்தவன் இஸ்லாமை ஏற்றுக்கொள்ள முதல் தடைக்கல்லாக இருப்பது, இஸ்லாமின் மூல ஆதாரமாம் அல்லாஹ் தான். ஒரு நல்ல கிறிஸ்தவன், தேவனை தன் முழு இருதயத்தோடும், பலத்தோடும் அன்புகூருகிற கிறிஸ்தவன் எக்காலத்திலும், அல்லாஹ்வினால் தாக்கப்படமாட்டான். வேறுவகையில் சொல்லவேண்டுமென்றால், குர்-ஆனிலும் ஹதீஸ்களிலும் காணப்படும் அல்லாஹ் ஒரு கிறிஸ்தவனை ஈர்க்க போதுமானவராக இல்லை.

## 2) 'குர்-ஆன்' என்ற ஒரு தடைக்கல்:

தம்பி இரண்டாவதாக, ஒரு கிறிஸ்தவன் ஏன் பைபிளையும் நம்பிக்கொண்டு, அதே நேரத்தில் குர்-ஆனையும் விசுவாசிக்கமாட்டான் என்று கேட்டால், அவன் 'குர்-ஆனை' பைபிளின் தரத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கிறான்.

பைபிளின் வார்த்தைகளை வாசித்து, சுவாசித்து, ருசி பார்த்து, அதன் மூலமாக தேவனையும், அவரது அன்பையும் கிறிஸ்தவன் அறிந்துக்கொள்கிறான். அதே போல குர்-ஆனும் அவனுக்கு இறைவனின் அன்பை போதிக்கின்றதா? என்று அவன் சோதித்துப் பார்க்கும் போது, அது தோல்வி அடைவதை காண்கின்றான். ஏதோ கண்களை மூடி, காட்டில் விட்ட கதைபோல மனிதனுக்கு குர்-ஆன் குழப்பமாக காணப்படுகிறது. குர்-ஆன் ஒரு சர்வாதிகாரி போல செயல்படுகிறதை காண்கிறான், மக்களை பயப்படவைத்து தன் வேலைகளை செய்துக்கொள்ளும் ஒரு சர்வாதிகாரியின் சட்டபுத்தகமாக குர்-ஆன் காணப்படுகிறது. பைபிளின் மென்மை, குர்-ஆனில் காணமுடியாது. கர்த்தர் அடித்தாலும், அவரே அணைக்கிறார், கர்த்தர் காயப்படுத்தினாலும் அவரே காயங்கட்டுகிறார். மேலும் ஒரு ஆச்சரியம் என்னவென்றால், எதற்காக கர்த்தர் அடிக்கிறார், காயப்படுத்துகிறார் என்பதையும் பைபிள் விவரிக்கும் போது, மனிதனின் சோர்ந்து போன வாழ்வு தழைக்கிறது, தான் செய்த குற்றத்தை உணர்ந்து மனிதன் திருந்திவிடுகிறான், இன்னும் தேவன் மீது அவனுக்கு அன்பு அதிகமாகிறது. "உன்னைப் போல உன் அயலானையும் நேசி" என்ற ஐந்து வார்த்தைகளில் மனிதனின் ஒட்டு மொத்த சுயத்தை பைபிள் அழித்துவிடுகிறது.

தம்பி, குர்-ஆன் மனிதனை நல்வழிப்படுத்த முடியாது. இறைவனோடு மனிதனை ஒன்று சேர்ப்பதை விட, குர்-ஆன் இவ்விருவருக்கும் இடையே இருக்கும் தூரத்தை அதிகப்படுத்துகிறது. ஒன்று சொல்லட்டுமா, மனிதன் எந்த அளவுக்கு அதிகமாக தன் இறைவனின் அன்பை விட்டு தூரமாக செல்கிறானோ, அவன் அவ்வளவு அதிகமாக இதர மனிதர்களை வெறுக்கவும், அடிக்கவும் ஆரம்பிப்பான். இறைவன் அவனது உள்ளத்தில் தன் அன்பை பொழியாமல் போனதால், அந்த மனிதன் தன் சக மனிதன் மீது அன்பை பொழிய மாட்டான். சிந்தித்துப்பார், ஏன் இஸ்லாமியர்களின் மத்தியில் மட்டும் அதிகமாக தீவிரவாதம், வன்முறை காணப்படுகிறது என்று எண்ணிப்பார்? இதை நம்புவதும் நம்பாததும் உன் விருப்பம், ஆனால், உலகத்தில் நடக்கும் செயல்களை சோதித்துப் பார்த்தால் உனக்கே உண்மை புரியும்.

ஆக, பைபிளை பின் பற்றும் ஒரு மனிதன் நிச்சயமாக குர்-ஆனின் மகுடி இசைக்கு முன்பாக மயங்கமாட்டான். அவன் மீது எப்படிப்பட்ட சுனாமி வந்தாலும் அவன் அசையாமல் நிலை நிற்பான்.

## 3) 'முஹம்மது' என்ற தடைக்கல்:

ஒரு கிறிஸ்தவன் இஸ்லாமை தழுவாமல் இருக்க கடைசி காரணமாக, அதன் ஸ்தாபகர் காணப்படுகிறார். பழைய ஏற்பாட்டையும், புதிய ஏற்பாட்டையும் படிக்கும் ஒரு கிறிஸ்தவனுக்கு முன்பாக அனேக மனிதர்கள், பெண்கள் தலைவர்கள், தலைவிகள், நல்ல கணவன்மார்கள், மனைவிமார்கள், நீதியை முழு மூச்சாக பின்பற்றினவர்கள், நல்ல மகன்கள், மகள்கள், தீய மகன்கள் மகள்கள், ஒரு சில காசுக்காக பெரிய குற்றங்களை புரிந்தவர்கள், கோழைகள், வீரர்கள் என்று அனேக மனிதர்களின் சரிதை வைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மனிதனில் கணப்படும் நல்ல மற்றும் தீய செயல்கள் என்னென்ன? என்று கிறிஸ்தவ திருச்சபையின் போதகர்கள் அழகாக எடுத்துக் கூறுகிறார்கள். ஆதாம் முதற்கொண்டு, 30 வெள்ளிக்காசுக்கு இயேசுவை காட்டிக்கொடுத்த யூதாஸ் வரைக்கும் ஒவ்வொரு நபரின் சரிதையும் கிறிஸ்தவனுக்கு தெரியவருகிறது.

இவைகளையெல்லாம் அறிந்த ஒரு கிறிஸ்தவன், முஹம்மதுவைப் பற்றி இஸ்லாமியர்கள் கூறும் போது மிகவும் ஆச்சரியப்படுகின்றான். இவ்வளவு நல்ல மனிதனாக இவர் இருக்கிறாரே, இப்படிப்பட்டவர்களை நாம் பைபிளிலும் அனேகரை காணவில்லையே என்று நினைத்துக்கொள்வான். ஆனால், இஸ்லாமியர்கள் மறைத்த முஹம்மதுவின் இதர குணங்களை அவன் அறியும் போது, இவ்வளவு தானா? இவர் ஒன்றும் அவ்வளவு வித்தியாசமானவராக காணப்படவில்லையே என்று ஒரு நொடியில் முஹம்மதுவை புறக்கணித்துவிடுகிறான்.

பைபிளில் காணப்படும் நபர்களைப்போல இவரும் நன்மைகள் தீமைகள் புரியும் ஒரு சாதாரண மனிதர் தான் என்று தீர்ப்பு வழங்கி இவரை ஒரு நபியாகவும், ஏற்க மறுத்துவிடுகிறான். மேலும் முக்கியமான விஷயம் என்னவென்றால், முஹம்மது செய்த குற்றங்களை/ தவறுகளை இஸ்லாமியர்கள் நியாயப்படுத்தி "அவைகள் தவறுகளே இல்லை" என்று அடித்துச் சொல்லும் போது சராசரி மனிதனுக்கு கோபம் வருகிறது. கண்களுக்கு எதிராக தெளிவாக தெரியும் ஒரு விஷயத்தை இப்படி அப்பட்டமாக முஸ்லிம்கள் பொய் சொல்கிறார்களே என்று எண்ணி, இஸ்லாம் பக்கமும், முஹம்மது பக்கமும் தலை வைத்து கூட படுக்கமாட்டான்.

கடைசியாக இயேசுவோடு முஹம்மதுவை நம்மை அறியாமலே நாம் ஒப்பிட்டு பார்த்துவிடுகிறோம். இந்த பரிட்சையில் முஹம்மது தோல்வி அடைவதினால், முழு இஸ்லாமையும் கிறிஸ்தவர்களாகிய நாங்கள் புறக்கணித்துவிடுகிறோம்.

தம்பி, இதுவரையில் கூறிய "அல்லாஹ்", " குர்-ஆன்" மற்றும் "முஹம்மது" என்ற மூன்று காரணங்கள் தன் ஒரு கிறிஸ்தவன் இஸ்லாமை தழுவாமல் இருக்க தடைக்கற்களாக உள்ளது. ஒரு வேடிக்கை என்னவென்றால், இந்த மூன்று தான் இஸ்லாமின் அஸ்திபாரமாக இருக்கிறது. நிச்சயமாக கிறிஸ்தவத்தை முழுவதுமாக அறிந்த ஒரு மனிதன், இஸ்லாமை முழுவதும் அறிந்துக்கொண்டால், அவன் இஸ்லாமின் பக்கம் தலை வைத்து கூட படுக்கமாட்டான்.

எனவே, உன்னுடைய அழைப்பிற்கு நான் மறுப்பு தெரிவித்ததற்காக, வருந்துகிறேன், ஆனாலும், மனிதனை திருப்தி படுத்துவதைக் காட்டிலும், தேவனை திருப்திபடுத்துவதே சிறந்ததல்லவா?

இதைப் பற்றி மேலும் அறிய விரும்பினால், எனக்கு எழுத தயங்காதே.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

## நாள் 19 - இயேசு தம் தெய்வீகத்தை தாமே சுவிசேஷங்களில் மறுக்கிறார், பதில் என்ன?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

*அன்புள்ள தம்பி,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*நீ அனுப்பிய மெயிலை படித்தேன், நீ கேட்ட கேள்வியையும் படித்தேன். நீ தற்போது அதிகமாக இஸ்லாமிய புத்தகங்களை படிப்பதாகவும், அனேகரிடம் இதைப் பற்றி பேசி விவரங்களை சேகரிப்பதாகவும் குறிப்பிட்டு இருந்தாய். நீ சரியான ஒன்றைத் தான் இப்போது செய்துக்கொண்டு இருக்கிறாய்.*

*உன் கடிதத்தில் நீ என்னிடம் "இயேசு தனக்கு தெய்வீகத்தன்மை இல்லையென்றும், தன் தெய்வீகத்தன்மையை தாமே மறுக்கும்படியாகவும் நான்கு நற்செய்தி நூல்களில் கூறியிருக்கும் போது, ஏன் கிறிஸ்தவர்கள் வலியச் சென்று, இயேசுவிற்கு தெய்வீகத்தன்மையை ஒட்டவைக்கிறீர்கள்? சுவிசேஷ நூல்களை சரியாக கிறிஸ்தவர்கள் படிக்கமாட்டார்களா?" என்ற கேள்வியை எழுப்பியிருந்தாய்.*

*உன்னுடைய இந்த கேள்விகான பதிலை இப்போது நாம் பார்ப்போம்.*

***இஸ்லாமியர்கள் செய்யும் மிகப்பெரிய தவறு:***

*இஸ்லாமியர்கள் செய்யும் மிகப்பெரிய தவறு என்னவென்றால், இயேசுவின் தெய்வீகத்தன்மையை மறுப்பதற்கு அவர்கள் புதிய ஏற்பாட்டை முக்கியமாக முதல் நான்கு சுவிசேஷங்களை ஆதாரமாக காட்டுவதுதான். குர்ஆனை ஆதாரமாக காட்டி, இயேசு தெய்வமில்லை என்றுச் சொன்னாலும், அவர்களால் ஓரளவிற்கு சமாளித்துக் கொள்ளமுடியும், ஆனால், நற்செய்தி நூல்களை ஆதாரமாக காட்டுவது அடிமட்ட அறியாமையாகும்.*

*எந்த ஒரு மனிதனும், புதிய ஏற்பாட்டின் முதல் நான்கு சுவிசேஷ நூல்களை படித்துவிட்டு, இந்த நூல்களில் இயேசு தம்முடைய தெய்வீகத்தைப் பற்றி எதுவும் சொல்லவில்லை, அதற்கு பதிலாக 'அவர் ஒரு மனிதன்' என்பதை மட்டுமே வெளிக்காட்டுகிறார் என்றுச் சொல்வாரானால், ஒன்று இந்த மனிதன் பொய் சொல்லவேண்டும், அல்லது இவருக்கு சுயநினைவு சரியில்லை என்று அர்த்தம். ஏனென்றால், இறைவன் இல்லை என்றுச் சொல்லக்கூடிய நாத்தீகர்கள் கூட, இந்த நான்கு சுவிசேஷங்களை படித்துவிட்டு, இயேசு தம்முடைய தெய்வீகத்தைப் பற்றி குறிப்பிட்டுள்ளார் என்று தான் கூறுவார்கள்.*

*அடிப்படையில் நான்கு சுவிசேஷங்கள் இயேசுவின் தெய்வீகத்தன்மையை பறைசாற்றுகிறதா இல்லையா என்று கேட்டால், "ஆம், பறைசாற்றுகிறது" என்பது தான் பதிலாக அமையும்.*

*எந்த ஒரு இஸ்லாமியராவது நான்கு சுவிசேஷங்களை படித்துவிட்டு, இதில் இப்படி இயேசு தம்முடைய இறைத்தன்மையைப் பற்றிச் சொல்லவில்லையே என்று கூறுவாரானால், அவர் எவ்வளவு பெரிய அறிஞராக இருந்தாலும் சரி, அவர் பொய் சொல்கிறார் என்று அர்த்தம் (இதில் முதல் இடத்தை நான் பி, ஜைனுல் ஆபிதீன் அவர்களுக்குத் தரவிரும்புவேன்).*

*இப்போழுது நான், இயேசு தம்முடைய தெய்வீகத்தைப் பற்றி கூறிய விவரங்களில் சில காரியங்களைப் பற்றி உனக்கு விவரித்து கேள்வி எழுப்பப்போகிறேன். இதனை உன் இஸ்லாமிய அறிஞர்களிடம் தெரிவித்து, இவைகள் அந்த நான்கு சுவிசேஷங்களில் தான் உள்ளது, இவைகளை நீங்கள் படிக்கவில்லையா என்று கேட்டுச் சொல்வாயா?*

### 1. இயேசு தேவாலயத்திலும் பெரியவர்:

இயேசு ஒரு முறை "தேவாலயத்திலும் பெரியவர் இங்கே இருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன" என்று கூறியுள்ளார் (மத்தேயு 12:6). அதாவது ஓய்வு நாளில் சீடர்கள் கதிர்களை கொய்து சாப்பிட்டார்கள், ஓய்வு நாளில் ஏன் உம்முடைய சீடர்கள் சட்டத்தை மீறுகிறார்கள் என்று யூத மார்க்க தலைவர்கள் கேட்கும் போது, பழைய ஏற்பாட்டின் ஒரு நிகழ்ச்சியை குறிப்பிட்டுவிட்டு, தம்மைப் பற்றி இயேசு கூறும் போது இவ்விதமாக கூறுகிறார்.

எருசலேம் தேவாலயம், யூத சரித்திரத்தில் மிகவும் முக்கியமான அங்கமாக உள்ளது. தாவீது கட்ட விரும்பினார், ஆனால் தேவன் சாலொமோனின் மூலம் கட்டவைத்தார், பாபிலோன் அரசன் அதை பாழாக்கினான், மறுபடியும் எஸ்றா, நெகேமியா காலத்தில் பழுது பார்க்கப்பட்டது.

கோடிக்கணக்கான பணத்தை செலவு செய்து கட்டப்படும் தேவாலயம் பெரியதா அல்லது அதில் வாசம் செய்யும் தேவன் பெரியவரா? தேவாலயத்தை விட தேவன் தான் பெரியவர். இராஜா வாழும் மாளிகை பெரியதா அல்லது அதில் வாசம் செய்யும் இராஜா பெரியவரா? இராஜா தான் பெரியவர்.

தேவாலயத்தை விட தேவன் தான் பெரியவர். விஷயம் இப்படி இருக்க இயேசு சொன்ன வார்த்தைகளின் அர்த்தமென்ன? "தேவாலயத்திலும் பெரியவர் இங்கு இருக்கிறார்" என்றுச் சொன்னால், இயேசு தன்னை அந்த தேவாலயத்தில் வாசம் செய்யும் தேவனுக்கு சமமாக அல்லவா பேசியுள்ளார். தன்னை தேவன் என்ற நிலையில் அல்லவா அவரது கூற்று காணப்படுகிறது?

தம்பி இயேசு சொன்ன இந்த வார்த்தைகளை சிறிது நீ ஆய்வு செய்து பார்ப்பாயா? எருசலேம் தேவாலயத்துக்காகவும், தேவனுக்காகவும் வைராக்கியமாக இருக்கும் யூத தலைவர்களிடம் இவ்விதமாக இயேசு பேசியுள்ளார். இஸ்லாம் சொல்வது போல 'இயேசு வெறும் ஒரு தீர்க்கதரிசியாக மட்டும்' இருந்திருந்தால் இப்படி பேசியிருப்பாரா? நீ சிறிது சிந்தித்துப் பார் தம்பி.

## 2. இயேசு ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருக்கிறார்:

இயேசு தம்மைப் பற்றி என்ன தான் நினைக்கிறார்? இஸ்லாம் சொல்வது போல இயேசு ஒரு தீர்க்கதரிசியாக மட்டும் இருந்திருந்தால், இப்படிப்பட்ட வார்த்தைகளை சொல்லியிருப்பாரா? ஒருபோதும் சொல்லமாட்டார். ஆனால், இயேசு தீர்க்கதரிசியை விட மேலானவராக இருக்கிறார்.

நாம் மேலே கண்ட அதே நிகழ்ச்சியில் (மத்தேயு 12ம் அதிகாரம்), முதலாவது தாம் தேவாலயத்திலும் பெரியவர் என்று சொன்னார், அதற்கு பிறகு, தாம் ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருப்பதாக, வசனம் 8ல் கூறுகிறார்.

எல்லா நாட்களுக்கும் ஆண்டவர் யெகோவா தேவனல்லவா? ஓய்வு நாளுக்கும் ஆண்டவர் யெகோவா தேவன் அல்லவா? இப்படி இருக்க இயேசு எப்படி 'நான் தான் யெகோவா' என்பது போல பேசுகிறார்?

தம்பி, 'இயேசு பேசிய வார்த்தைகள்' வெறும் சாதாரண மனிதன் பேசும் வார்த்தைகள் அல்ல, தீர்க்கதரிசிகள் பேசும் வார்த்தைகள் அல்ல, இவைகள் அவர்களை விட மேலான ஒருவர் பேசும் வார்த்தைகளாகும்.

"மனுஷ குமாரன் ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருக்கிறார்" என்றுச் சொல்வதிலிருந்து, முதலாவதாக அவர் ஓய்வு நாள் அல்லாத நாட்களுக்கும் ஆண்டவராக இருக்கிறார் என்றுச் சொல்கிறார், இரண்டாவதாக ஓய்வு நாளுக்கும் அவர் ஆண்டவராக இருப்பதாக சொல்கிறார். எந்த தீர்க்கதரிசியாவது இப்படி பேசுவாரா? சிந்தித்துப்பார்.

## 3. இயேசு யோனாவிலும் பெரியவர்:

இந்த மத்தேயு 12ம் அதிகாரத்தில் இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மைக்கான காரியங்களை அடுக்கடுக்காக சொல்லிக்கொண்டு இருக்கிறார்.

இயேசு 41ம் வசனத்தில் என்ன கூறுகிறார் என்று ஒரு முறை கவனி:

12:41 யோனாவின் பிரசங்கத்தைக் கேட்டு நினிவே பட்டணத்தார் மனந்திரும்பினார்கள். இதோ, யோனாவிலும் பெரியவர் இங்கே இருக்கிறார். ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே நினிவே பட்டணத்தார் இந்தச் சந்ததியாரோடெழுந்து நின்று இவர்கள்மேல் குற்றஞ்சுமத்துவார்கள்.

பொதுவாக தீர்க்கதரிசிகளில் பெரியவர் சின்னவர் என்று யாரும் இல்லை. அவரவருக்கு தேவன் ஒப்புவித்த வேலையை அவர்கள் செய்துமுடித்தார்கள். ஆனால், இந்த இடத்தில் இயேசு பழைய ஏற்பாட்டு தீர்க்கதரிசியோடு ஒப்பிட்டு, அவரை விட தான் பெரியவர் என்றுச் சொல்கிறார்.

மேலும் நியாயத் தீர்ப்பு நாளில் என்ன நடக்கும் என்றும் சொல்கிறார். இப்படி ஒரு தீர்க்கதரிசி பேசுவது சாதாரணமானது அல்ல. ஒரு தீர்க்கதரிசி இப்படி பேசுவது அவருக்கு அடுக்காது. ஆனால், இயேசு இவ்விதமாக கூறியுள்ளார்! எந்த வகையில் இயேசு யோனாவை விட பெரியவர்?

a) பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்ட மேசியாவாக இயேசு இருக்கிறார், யோனா வெறும் தீர்த்தரிசியாக உள்ளார். மேசியாவின் தகுதி, ஊழியம், இதர தீர்க்கதரிசிகளை விட மேன்மையானதாக உள்ளது.

b) யோனா நினிவே மக்களுக்கு 40 நாட்கள் பிரசங்கித்தார், ஆனால், இயேசு யூதர்களுக்கு 3 ஆண்டுகளுக்கும் அதிகமாக பிரசங்கித்தார்.

c) யோனா தன் செய்தியை சொல்வதற்காக அற்புதங்கள் செய்யவில்லை, வெறும் தேவசெய்தியை பிரசங்கித்தார். ஆனால், இயேசு சென்ற இடமெல்லாம் அற்புதங்கள் செய்தார், தன் தெய்வீகத்தன்மையை பலவகைகளில் விளக்கிக்காண்பித்தார்.

d) மேலும், இயேசுவின் முந்தைய வார்த்தைகளின்படி, அவர் தேவாலயத்திலும் பெரியவராகவும் இருக்கிறார், ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருக்கிறார், ஆனால், யோனா வெறும் தீர்க்கதரிசியாக இருக்கிறார்.

e) கடைசியாக, இயேசுவின் எச்சரிக்கை என்னவென்றால், யோனாவின் செய்தியை கேட்ட மக்கள் மனந்திரும்பினார்கள், எந்த ஒரு அற்புதத்தையும் காணாமல் விசுவாசித்தார்கள், இரட்சிக்கப்பட்டார்கள், ஆனால், மேசியா யூதர்களின் மத்தியில் இருந்த போதிலும்,அனேக அற்புதங்களை கண்டபோதிலும், அவர்கள் விசுவாசியாமல் போனதால், நியாயத்தீர்ப்பு நாளிலே நினிவே மக்கள் இவர்களை குற்றப்படுத்துவார்கள் என்று இயேசு கூறினார்.

தம்பி, நீ பைபிள் முழுவதுமாக படித்துப்பார்த்தலும் இயேசு பேசியது போல் பேசிய தீர்க்கதரிசியை காணமுடியாது.

## 4. இயேசு சாலொமோனிலும் பெரியவர்:

தம்பி, நான்கு சுவிசேஷங்களை படித்துவிட்டு, இதில் இயேசு தன் தெய்வீகத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே என்றுச் சொல்லும் நபர்களை பார்த்தால் எனக்கு சிரிப்பு தான் வருகிறது.

யூதர்கள் இயேசுவின் அற்புதங்களை கண்டு பொறாமை கொண்டு அவரை சிலுவையில் அறையவில்லை, அவர் பேசிய ஒவ்வொரு வார்த்தையும், உலகில் பிறந்த மனிதன் பேசக்கூடிய வார்த்தைகளாக காணப்படவில்லை, ஏதோ வேறு கிரகத்திலிருந்து வந்த மனிதனைப்போல அல்லது வானத்திலிருந்து வந்த இறைவன் போல பேசினார், யூதர்கள் அனேக முறை அவரை கொலை செய்ய முயற்சி எடுத்தார்கள். அவரது வார்த்தைகளில் பொதிந்து இருந்த சத்தியத்தை, தெய்வீகத்தை அவர்கள் உணர்ந்துக்கொண்டார்கள், ஒரு மனிதன் இப்படி தேவன் பேசுவது போல பேசக்கூடாது என்று இயேசு மீது குற்றம் சாட்டினார்கள்.

இதே மத்தேயு 12ம் அதிகாரம் 42ம் வசனத்தில் இயேசு சொன்ன இன்னொரு விஷயத்தை கவனிப்போம்:

12:42 தென்தேசத்து ராஜஸ்திரீ பூமியின் எல்லைகளிருந்து சாலொமோனுடைய ஞானத்தைக் கேட்க வந்தாள். இதோ, சாலொமோனிலும் பெரியவர் இங்கே இருக்கிறார். ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே அந்த ராஜஸ்திரீ இந்தச் சந்ததியாரோடெழுந்து நின்று இவர்கள்மேல் குற்றஞ்சுமத்துவாள்.

இயேசு யாரையும் விடுவதாக தெரியவில்லை, தேவாலயம் முதற்கொண்டு, ஓய்வு நாள் வரையும், ஆபிரகாம் முதற்கொண்டு சாலொமோன் வரையிலும் அவர் முக்கியமான நபர்கள் பற்றி பேசியுள்ளார். இப்போது சாலொமோனைப் பற்றி பேசுகிறார், தாம் அவரை விட பெரியவர் என்று கூறுகிறார். சாலொமோனை விட பெரியவனாகிய நான் சொல்லும் விவரங்களை நீங்கள் நம்பாமல் இருப்பதினால், சாலொமோனின் ஞானத்தை கேட்டு அறிந்த இராஜஸ்திரி உங்கள்மேல் குற்றம் சுமத்துவாள் என்று இயேசு கூறுகிறார். இதன் பொருள் என்னவென்றால், நான் சாலொமோனை விட பெரியவன் என்பதால் என் வார்த்தைகளுக்கு நிச்சயம் நீங்கள் கீழ்படியவேண்டும் என்று இயேசு கூறுகிறார்.

தம்பி இவைகள் எல்லாம் ஒரு சாதாரண மனிதனின் வார்த்தைகளா? ஒரு சாதாரண நபியின் வார்த்தைகளா? நிச்சயமாக இல்லை.

நீ சொர்ந்து போவாய் என்பதால் இதோடு இந்த கடிதத்தை முடித்துக்கொள்கிறேன், அடுத்த கடிதத்தின் இன்னும் சில விவரங்களை உனக்கு எழுதுவேன்.

சுவிசேஷங்கள் இயேசுவின் தெய்வீகத்தன்மையை மறுக்கிறது என்று இஸ்லாமியர்கள் கூறுவது சுத்தப் பொய்யாகும். நீ உன் நண்பர்களிடம் கேட்டுப்பார், இயேசு இவ்விதமான உரிமைப்பாராட்டலை கொடுத்துள்ளாரே, இவைகள் ஒரு தீர்க்கதரிசியின் வாதங்கள் அல்லவே, ஒரு தீர்க்கதரிசியை விட அதிகமாக இயேசு தம்முடைய தெய்வீகத்தை குறித்து உரிமைப்பாராட்டியுள்ளாரே, இதற்கு உங்கள் பதில் என்னவென்று கேட்டுப்பார்.

1. இயேசு தேவாலயத்திலும் பெரியவர்:

2. இயேசு ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருக்கிறார்:

3. இயேசு யோனாவிலும் பெரியவர்:

4. இயேசு சாலொமோனிலும் பெரியவர்:

இன்னொரு விஷயத்தை கூறி முடிக்கிறேன், இயேசு இறைவனாகவும் உள்ளார், அதே நேரத்தில் மனிதனாக வந்தபடியால், மனிதனாகவும் உள்ளார். அவர் பேசியது எல்லாம், மனிதன் பேசுவது போலத்தான் உள்ளது என்றுச் சொல்பவர்கள் தெரிந்துக்கொண்டே பொய் சொல்கிறார்கள் என்று அர்த்தம். சுவிசேஷ நூல்களில் "இயேசு பசியாக இருந்தார், சோர்வாக இருந்தார்" என்று கூறியிருப்பதினால் அவர் மனிதன் தான் என்று வாதிக்கும் இஸ்லாமியர்கள், நான் மேலே கூறிய விவரங்களையும் இயேசு கூறியுள்ளாரே, ஒரு மனிதன் இவைகளை கூறுவது எப்படி சாத்தியமாகும் என்பதை விளக்கவேண்டும். வெறும் ஒரு சில வசனங்களை மட்டுமே மேற்கோள் காட்டி இதர வசனங்களை மறுப்பது எப்படி சரியான ஆய்வாகும்.

இயேசுவின் தெய்வீகத்தன்மையை விளக்கும் இதர விவரங்களை உனக்கு நான் அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன்.

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

இப்படிக்கு, உன் சகோதரன்,

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

## *நாள் 20 - உலகம் உண்டாவதற்கு முன்பே மகிமைப்படுத்தப்பட்டு இருந்தவர் இவர் யார்?*

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*உன்னுடைய முந்தைய கடிதத்தில் இயேசுவின் தெய்வீகத்தன்மையைக் குறித்து நீ எழுப்பிய கேள்விக்கு நான் சில விவரங்களை பதிலாக எழுதியிருந்தேன். அதாவது சுவிசேஷங்களில் இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மையை மறுக்கிறார் என்று இஸ்லாமியர்கள் கேள்வி எழுப்புகிறார்கள். இது தவறு என்று நான் விளக்கியிருந்தேன்.*

1) *இயேசு தேவாலயத்தைவிட பெரியவர்,*

2) *யோனாவை விட பெரியவர்,*

3) *சாலொமோனை விட பெரியவர் மேலும்*

4) *தாம் ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருக்கிறார் என்று இயேசு கூறிய வசனங்களை மேற்கோள் காட்டினேன்.*

*நீண்ட கடிதத்தை நீ படித்தால், உனக்கு சோர்வு உண்டாகும் என்பதால் இயேசுவின் நான்கு உரிமை பாராட்டல்களை விளக்கி முடித்தேன்.*

*அதன் தொடர்ச்சியாக, இந்த கடிதத்தில், அதே சுவிசேஷங்களில் இன்னும் எந்தெந்த வகையில் இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மையை வெளிப்படுத்தியுள்ளார் என்பதை காண்போம்.*

### 5) யோவான் ஸ்நானகனுக்கு முன்பு இருந்தவர் இயேசு:

*தம்பி, இயேசு எல்லாரையும் விட பெரியவர் மட்டுமல்ல, அவர் எல்லாருக்கும் முன்பு இருக்கிறார் என்பதை நற்செய்தி நூல்கள் தெளிவாக சொல்கின்றன. உதாரணத்திற்கு, இயேசுவைப் பற்றி யோவான் ஸ்நானகன் என்ன சொல்கிறார் என்று கவனி:*

*யோவான் 1:29 மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன்னிடத்தில் வரக்கண்டு: இதோ, உலகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி.*

*யோவான் 1:30 எனக்குப்பின் ஒருவர் வருகிறார், அவர் எனக்கு முன்னிருந்தபடியால் என்னிலும் மேன்மையுள்ளவரென்று நான் சொன்னேனே, அவர் இவர்தான்.*

*யோவான் ஸ்நானகனுக்கு மூன்று மாதங்களுக்கு பிறகு இயேசு பிறந்தார், அப்படி இருக்கும் போது, யோவான் எப்படி "இவர் எனக்கு முன்னிருந்தவர் என்றுச் சொல்கிறார்?".*

*மேலும் "உலகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி" என்று இயேசுவைப் பற்றி யோவான் சாட்சி கொடுக்கிறார். இன்னொரு வசனத்தில் "இயேசுவின் காலணிகளின் வாரை அவிழ்க்கிறதற்கு தனக்கு தகுதியில்லை என்று" யோவான் கூறுகிறார்.*

*ஒரு தீர்க்கதரிசி இன்னொரு தீர்க்கதரிசியைப் பற்றி இப்படி சொல்லவேண்டிய அவசியமில்லை. மேலும் யோவானுக்கு முன்பாக இயேசு இருக்கிறார் என்று சொல்வதிலிருந்து, இயேசு தேவன் என்பதை யோவான் அங்கீகரிக்கிறார் என்று அர்த்தமாகிறது. இவ்விதமான வசனங்கள் இஸ்லாமியர்களின் கண்களைவிட்டு ஏன் மறைந்துவிடுகின்றன? நற்செய்தி நூல்களின் இப்படிப்பட்ட வசனங்கள் எல்லாம், வெளிப்படையாக*

புரியக்கூடியது. ஏனோ சிலருக்கு புரியவில்லை? தம்பி உனக்கு புரிகிறதா? ஒருவேளை யோவான் "எனக்கு முன்னிருந்தவர்" என்று சொன்ன வசனத்திற்கு வேறு வகையான அர்த்தம் இருக்கிறது என்றுச் சொல்லுகிற இஸ்லாமிய அறிஞர்கள் யாராவது இருந்தால், அதற்கான விளக்கத்தை தரட்டும், நான் அவர்களுக்கு மறுப்பு எழுத தயாராக இருக்கிறேன்.

## 6) ஆபிரகாமுக்கு முன்பே இருந்தவர்:

முஸ்லிம்கள் சுவிசேஷ நூல்களை நன்றாக படித்து கரைத்து குடித்துவிட்டது போல பேசுகிறார்கள், நற்செய்தி நூல்களில் இயேசு தன்னை மனிதன் என்றே கூறினார் என்று அடித்துச் சொல்வார்கள். ஆனால், மேலோட்டமாக நற்செய்தியை படித்தாலும், இஸ்லாமியர்கள் கூறுவது பொய் என்பதை அறிந்துக்கொள்ளலாம். உதாரணத்திற்கு, இயேசு தம்மைப் பற்றி கூறும் போது, "ஆபிரகாம் உண்டாவதற்கு முன்பே நான் இருக்கிறேன்" என்று யூத தலைவர்களிடம் கூறுகிறார்.

யோவான் 8: 58 அதற்கு இயேசு: ஆபிரகாம் உண்டாகிறதற்கு முன்னமே நான் இருக்கிறேன் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

ஒரு மனிதனின் வாயிலிருந்தும், ஒரு தீர்க்கதரிசியின் வாயிலிருந்தும் இப்படிப்பட்ட வார்த்தைகளை யூதர்கள் எதிர்ப்பார்க்கவில்லை, தம்மை தேவனுக்கு சமமாக இயேசு பேசினார் என்பதால் யூதர்கள் கற்கலை எடுத்துக் கொண்டு அவர் மீது கல்லெறிய வேண்டும் என்று முயன்றார்கள்.

ஆபிரகாம் வாழ்ந்த காலம் தோராயமாக கி.மு. 2000 ஆகும், ஆனால், இயேசு இந்த வார்த்தைகளை பேசியது முதல் நூற்றாண்டிலாகும் (கி.பி. 30 – 33 காலக்கட்டமாகும்)

யூதர்களின் ஆரம்பம், அஸ்திபாரம், ஆணிவேர் எல்லாம் ஆபிரகாம் ஆவார், ஆனால், இயேசு அந்த ஆபிரகாமுக்கு முன்பாகவே நான் இருக்கிறேன் என்றுச் சொல்கிறார், இந்த வார்த்தைகள் எதைக் காட்டுகிறது? இயேசு ஒரு மனிதன் என்றொ, தீர்க்கதரிசி என்றோ காட்டுகின்றதா? நிச்சயமாக இல்லை. இறைவன் மட்டுமே இப்படி சொல்லமுடியும், அதாவது நான் பல ஆயிரம் ஆண்டுகளாக இருக்கிறேன் என்றுச் சொல்வது இறைவனுக்கு மட்டுமே தகும். இதனை புரிந்துக்கொண்டு தான் யூதர்கள் இயேசுவை கல்லெறிந்து கொல்லவேண்டும் என்று கற்களை எடுத்துக்கொண்டார்கள்.

தம்பி, இயேசு சுவிசேஷங்களில் தன்னுடைய தெய்வீகத்தன்மையை பல வகைகளில் வெளிப்படுத்தியுள்ளார், ஆனால், இவைகள் இஸ்லாமியர்களின் கண்களுக்கு ஏனோ தெரியவில்லை?

## 7) உலகம் உண்டாவதற்கு முன்பே மகிமைப்படுத்தப்பட்டு இருந்தவர்:

நற்செய்தி நூல்களில் இயேசுவின் தெய்வீகத்தன்மை மறுக்கப்படுகிறது என்று சொல்கிறவர்கள், முதலாவது கீழ்கண்ட இரண்டு வசனங்களை படித்து அவைகளின் அர்த்தம் என்னவென்று விளக்கவேண்டும்.

இந்த வார்த்தைகள் சொல்லும் நபரை நாம் 'மனிதன்' என அழைக்கமுடியுமா? 'தீர்க்கதரிசி' என்று அழைக்கமுடியுமா?

யோவான் 17:5 பிதாவே, உலகம் உண்டாகிறதற்கு முன்னே உம்மிடத்தில் எனக்கு உண்டாயிருந்த மகிமையினாலே இப்பொழுது நீர் என்னை உம்மிடத்திலே மகிமைப்படுத்தும்.

யோவான் 17:24 பிதாவே, உலகத்தோற்றத்துக்கு முன் நீர் என்னில் அன்பாயிருந்தபடியினால், நீர் எனக்குத் தந்த என்னுடைய மகிமையை நீர் எனக்குத் தந்தவர்கள் காணும்படியாக, நான் எங்கே இருக்கிறேனோ அங்கே அவர்களும் என்னுடனேகூட இருக்க விரும்புகிறேன்.

தேவன் தன்னை மகிமைப்படுத்தவேண்டும் என்று எதிர்ப்பார்க்கும் இந்த நபர் யார்? உலக தோற்றத்திற்கு முன்பே தாம் தேவனோடு இருந்தவராக தம்மை காட்டிக்கொள்ளும் இவர் யார்?

"ஓ அல்லாஹ், உலகம் உண்டாகிறதற்கு முன்னே உம்மிடத்தில் எனக்கு உண்டாயிருந்த மகிமையினாலே இப்பொழுது நீர் என்னை உம்மிடத்திலே மகிமைப்படுத்தும்" என்று ஒருவர் உரிமையோடு அல்லாஹ்விடம் கேட்டால், அந்த நபரை இஸ்லாமியர்கள் எந்த அளவு கோலில் அளப்பார்கள்? இப்படி கேட்பவரை மனிதன் என்பார்களா? அல்லது தீர்க்கதரிசி என்பார்களா? அல்லது இந்த இரண்டும் இல்லாத இன்னொருவர் என்பார்களா? காதுள்ளவன் கேட்கக்கடவன்.

இயேசுவின் தெய்வீகத்தன்மையை மறுக்கவேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காக முஸ்லிம்கள் சொல்லும் பொய்யானது, சூரியனைக் கண்ட பனிபோல சிறிது சிறிதாக மறைவதை தம்பி நீ காணமுடியும்.

## 8. தன் உயிரை கொடுக்கவும், மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் அதிகாரம் படைத்தவர்:

சில தீர்க்கதரிசிகள் மரித்தவர்களை உயிரோடு எழுப்பியுள்ளார்கள், ஆனால், தங்களை தாங்களே மரித்தோரிலிருந்து எழுப்பிக்கொள்ள அவர்களால் முடியுமா? ஆனால், இவரால் முடியும், தம்மை தாமே மரித்தோரிலிருந்து எழுப்பிக்கொள்ள இவரால் முடியும்.

யோவான் 2:19 இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: இந்த ஆலயத்தை இடித்துப்போடுங்கள், மூன்று நாளைக்குள்ளே இதை எழுப்புவேன் என்றார்.

யோவான் 2:20 அப்பொழுது யூதர்கள்: இந்த ஆலயத்தைக் கட்ட நாற்பத்தாறு வருஷம்சென்றதே, நீர் இதை மூன்று நாளைக்குள்ளே எழுப்புவீரோ என்றார்கள்.

யோவான் 2:21 அவரோ தம்முடைய சரீரமாகிய ஆலயத்தைக்குறித்துப் பேசினார்.

யோவான் 10:17 நான் என் ஜீவனை மறுபடியும் அடைந்துகொள்ளும்படிக்கு அதைக் கொடுக்கிறபடியினால் பிதா என்னில் அன்பாயிருக்கிறார்.

யோவான் 10:18 ஒருவனும் அதை என்னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளமாட்டான்; நானே அதைக் கொடுக்கிறேன், அதைக் கொடுக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் எனக்கு அதிகாரமுண்டு. இந்தக் கட்டளையை என் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன் என்றார்.

மேற்கண்ட 18ம் வசனத்தைப் பாருங்கள், தன் உயிரை தானே எப்படி மறுபடியும் எடுத்துக்கொள்ளமுடியும்? அதாவது மரித்த நிலையிலிருந்து தம்மைத் தாமே உயிர்ப்பித்துக்கொள்ளமுடியும்? மனிதனால் முடியாதது தான். ஆனால், இயேசுவால் முடியும். தம்பி சிந்தித்துப் பார். நீண்ட விளக்கங்கள் நமக்கு தேவையில்லை, ஏனென்றால், நாம் வசனங்களை நமக்கு புரியும் மொழியில் தான் படிக்கிறோம்.

## 9) பாவங்களை மன்னிக்க அதிகாரம் உள்ளவர்:

தம்பி, நற்செய்தி நூல்களை படித்துவிட்டு, அதில் இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மையை உரிமை பாராட்டவில்லை என்று எந்த மனுஷனாவது சொன்னால், அவனுக்கு படிக்கத்தெரியவில்லை என்று பொருள். இதோ இங்கு இன்னொரு உதாரணத்தை உனக்கு காட்ட விரும்புகிறேன், இதுவே இந்த கடிதத்திற்கு கடைசி உதாரணமும் கூட.

லூக்கா 5:20 அவர்களுடைய விசுவாசத்தை அவர் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மனுஷனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார்.

லூக்கா 7:48 அவளை நோக்கி: உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்றார்.

யாருடைய பாவங்களை யார் மன்னிப்பது? ஒருவனுக்கு விரோதமாக இன்னொருவன் பாவம் செய்தால், அல்லது குற்றம் புரிந்தால், அந்த குற்றத்தை மன்னிக்கும் உரிமை யாருக்கு இருக்கிறது? தம்பி, உனக்கு விரோதமாக நான் குற்றம் செய்தால், நான் செய்த குற்றத்தை இரண்டு பேர் மன்னித்துவிடலாம்.

• முதலாவது என்னை மன்னிக்க உனக்கு உரிமை,

• இரண்டாவது உன்னையும், என்னையும் படைத்த தேவனுக்கு உரிமை உண்டு.

மேற்கண்ட வசனங்களில் இயேசு மக்களின் பாவங்களை மன்னிக்கிறார், இப்படி செய்து தம்முடைய தெய்வீகத்தன்மையை உரிமைபாராட்டிக் கொள்கிறார். இதனை கண்ட யூதர்கள் மூர்க்கம் கொண்டார்கள், தேவன் மட்டுமே செய்யவேண்டிய காரியத்தை இயேசு எப்படி உரிமை பாராட்டலாம் என்று யூதர்கள் கோபம் கொண்டனர்.

மாற்கு 2:5 இயேசு அவர்கள் விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார்.

2:6 அங்கே உட்கார்ந்திருந்த வேதபாரகரில் சிலர்:

2:7 இவன் இப்படித் தேவதூஷணம் சொல்லுகிறதென்ன? தேவன் ஒருவரேயன்றிப் பாவங்களை மன்னிக்கத்தக்கவர் யார் என்று தங்கள் இருதயங்களில் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

2:8 அவர்கள் தங்களுக்குள்ளே இப்படிச் சிந்திக்கிறார்களென்று இயேசு உடனே தம்முடைய ஆவியில் அறிந்து, அவர்களை நோக்கி: நீங்கள் உங்கள் இருதயங்களில் இப்படிச் சிந்திக்கிறதென்ன?

2:9 உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டதென்று சொல்வதோ, எழுந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று சொல்வதோ, எது எளிது?

2:10 பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறியவேண்டும் என்று சொல்லி, திமிர்வாதக்காரனை நோக்கி:

2:11 நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

எனவே, பூமியில் பாவங்களை மன்னிக்கின்ற அதிகாரம் ஒரு தீர்க்கதரிசிக்கு உண்டா? நிச்சயமாக இல்லை, இறைவனுக்கு மட்டுமே உண்டு. இதனையே இயேசு உரிமைபாராட்டினார்.

தம்பி, இதுவரை கடந்த இரண்டு கடிதங்களில் வெறும் 9 காரியங்களை மட்டும் உன்னோடு பகிர்ந்துக்கொண்டேன். நற்செய்தி நூல்களில் இயேசு தம்முடைய தெய்வீகத்தை ஆணித்தரமாக நிலைநாட்டியுள்ளார். இன்னும் அனேக காரியங்களை நான் பகிர்ந்துக் கொள்ளமுடியும், ஆனால் தேவையில்லை, ஏனென்றால், தூங்குவது போல நடிப்பவர்களை எழுப்பமுடியாது.

கடந்த இரண்டு கடிதங்களில் நான் முன்வைத்த விவரங்கள் குறித்து ஒரு சிறிய முடிவுரையை அடுத்த கடிதத்தில் உனக்கு எழுத விரும்புகிறேன்.

நற்செய்தி நூல்களில் இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மையை மறுக்கிறார் என்றுச் சொல்கிறவர்கள் மிகப்பெரிய பொய்யினை சொல்கிறார்கள் என்று பொருள். இல்லை என்றுச் சொல்பவர்களுக்கு நான் சவால் விடுகிறேன், அவர்கள் இதனை நற்செய்தி நூல்களிலிருந்து நிருபிக்கட்டும்.

அடுத்த கடிதத்தில் உன்னை சந்திக்கிறேன்.

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

# நாள் 21 - இயேசு பொய்யரா (அ) பைத்தியக்காரரா (அ) இறைவனா?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

கடந்த இரண்டு கடிதங்களில் நீ கேட்ட கேள்விக்கு பதிலை நான் எழுதினேன். இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மையை சுவிசேஷங்களில் உரிமை பாராட்டினார் என்பதை ஒன்பது உதாரணங்களைக் கொண்டு விளக்கினேன், அவைகள் என்னவென்பதை ஒரு முறை உனக்கு ஞாபகப்படுத்துகிறேன்:

1. இயேசு தேவாலயத்திலும் பெரியவர்.
2. இயேசு ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருக்கிறார்.
3. இயேசு யோனாவிலும் பெரியவர்.
4. இயேசு சாலொமோனிலும் பெரியவர்.
5. இயேசு யோவான் ஸ்நானகனுக்கு முன்பு இருந்தவர்.
6. இயேசு ஆபிரகாமுக்கு முன்பே இருந்தவர்.
7. இயேசு உலகம் உண்டாவதற்கு முன்பே மகிமைப்படுத்தப்பட்டு இருந்தவர்.
8. இயேசு: தன் உயிரை கொடுக்கவும், மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் அதிகாரம் படைத்தவர்.
9. இயேசு: பாவங்களை மன்னிக்க அதிகாரம் உள்ளவர்.

தம்பி உனக்கு "**ஒரு தச்சனிலும் மேலானவர்**" என்ற புத்தகத்திலிருந்து இரண்டு மேற்கோள்களை காட்ட விரும்புகிறேன்:

கிறிஸ்து, தேவனாக உரிமைப்பாராட்டினாரா அல்லது இல்லையா என்பதை நிரூபிப்பதற்காக, வேதவசனங்களை நுட்பமாக ஆராய்ந்த ஒரு தொழில் அதிபர், "எந்த ஒரு நபர் புதிய ஏற்பாட்டை வாசித்தும் இயேசு தெய்வத்தன்மையை உரிமைபாராட்டினார் என்ற முடிவுக்கு வராவிட்டால் அவன் பிரகாசமான ஒரு நாளில் திறந்த வெளியில் நின்று கொண்டு, சூரியனைக் பார்க்கமுடியவில்லை என்று சொல்லுகிற அளவுக்குக் குருடனைப்போல இருப்பான்" என்று கூறினார் (புத்தகம்: ஒரு தச்சனிலும் மேலானவர், பக்கம் 14, ஆசிரியர் ஜோஷ் மேக்டோவெல்)

Joh 5:18 அவர் ஓய்வுநாள் கட்டளையை மீறினதுமல்லாமல், தேவனைத் தம்முடைய சொந்தப் பிதா என்றுஞ்சொல்லித் தம்மைத் தேவனுக்குச் சமமாக்கினபடியினாலே, யூதர்கள் அவரைக் கொலைசெய்யும்படி அதிகமாய் வகைதேடினார்கள். (யோவான் 5:18)

ஏன் இப்படிப்பட்ட ஒரு வன்மையான தாக்குதல்?

இதற்குக் காரணம், இயேசு "நம் பிதா" என்று அல்ல "என் பிதா" என்றும் இதுவரைக்கும் கிரியை செய்து கொண்டு வருகிறார் என்றும் சேர்த்துக் கொண்டார். இயேசு பயன்படுத்திய இந்த இரண்டு சொற்றொடர்களில், அவர் தம்மை தேவனுடைய கிரியைகளில் இணையானவரும் தேவனுக்குச் சமமானவருமாக்கினார். யூதர்கள் தேவனை "என் பிதா" என்று குறிப்பிடமாட்டார்கள் அல்லது அவர்கள் அவ்வாறு கூறினாலும் "பரலோகத்தில்" என்று சேர்த்துக்கொண்டு அந்த கூற்றைத் தகுதிப்படுத்திக்கொள்வார்கள். ஆனால், இயேசு இவ்வாறு செய்யவில்லை. அவர் தேவனை "என் பிதா" என்று அழைக்கும் போது யூதர்கள் தவறாக அர்த்தம் கொள்ளாமல் இருக்கத்தக்கதான ஒரு உரிமை பாராட்டுதலை ஏற்படுத்தினார். தேவன் கிரியை செய்து கொண்டிருக்கும் போது குமாரனாகிய அவரும் கூட கிரியை செய்து கொண்டிருப்பதாகவும் இயேசுவை தேவனுடைய குமாரன் என்றும் யூதர்கள் புரிந்துக்கொண்டார்கள். இந்த வார்த்தைகளின் விளைவாக யூதர்களின் பகையுணர்வு வளர்ந்தது. அவரைத் துன்பப்படுத்துவதையே முக்கியமாக அவர்கள் தேடினபோதிலும், அவரைக் கொலை செய்ய வேண்டும் என்பதில் தீவிரமுள்ளவர்களாய் இருந்தார்கள். (புத்தகம்: ஒரு தச்சனிலும் மேலானவர், பக்கம் 15, ஆசிரியர் ஜோஷ் மேக்டோவெல்)

புதிய ஏற்பாட்டின் முதல் நான்கு நற்செய்தி நூல்களை படித்துவிட்டு, இயேசு அவைகளில் தம் தெய்வீகத்தை மறுக்கிறார் என்றுச் சொல்கிறவன் குருடனாக இருக்கவேண்டும். இதைவிட வேறு ஒரு சொல் அவனுக்கு சூட்டமுடியாது தம்பி.

இயேசுவின் உரிமைப்பாராட்டல் பற்றி சுருக்கமாக நான் கூறிவிட்டேன், இப்போது நீ கீழ்கண்ட ஏதாவது ஒன்றை தெரிந்தெடுக்கவேண்டும்.

**1) ஒரு பொய்யார்:**

நற்செய்தி நூல்களை நாம் படிக்கும் போது, இயேசு சொன்ன அனேக காரியங்கள் நமக்கு ஆச்சரியத்தை உண்டாக்கும், உனக்கு நான் 9 காரியங்களை மட்டுமே கடந்த இரண்டு கடிதங்களில் சுருக்கமாக சொல்லியுள்ளேன். நன்றாக சிந்தித்துப்பார், உண்மையாகவே இயேசு இறைவனாக இல்லாமல் இருந்து, நான் மேலே சொன்ன 9 காரியங்களை அல்லது உரிமை பாராட்டலை அவர் சொல்லியிருந்தால், நிச்சயமாக அவரை நீ பொய்யர் என்று அழைக்கலாம்.

ஆனால், இதிலும் ஒரு சிக்கல் உண்டு. அவர் சொல்வது பொய் என்று இருந்திருக்குமானால், அவரோடு இருந்த சீடர்கள் அதனை கண்டுபிடித்து இருந்திருப்பார்கள், உடனே அவரை விட்டு சென்று இருப்பார்கள். அவருக்காக அவர்கள் கஷ்டங்களை அனுபவித்து இருந்திருக்கமாட்டார்கள். தங்கள் உயிரை ஒரு பொய்யருக்காக பலியாக கொடுத்து இருந்திருக்கமாட்டார்கள். ஆனால், உண்மை சரித்திரம் சொல்வது என்னவென்றால், இயேசுவின் சீடர்கள் அவருக்காக ஊழியம் செய்து, தங்கள் உயிரையே ஒப்புக்கொடுத்தார்கள். மேலும் அவர் சொல்வது பொய்யாக இருந்திருக்குமானால், அற்புதங்கள் எப்படி நடந்தது, மக்கள் எப்படி அவரை தேவகுமாரன் என்று ஏற்றுக்கொண்டார்கள்?

எனவே, இயேசு ஒரு பொய்யர் அல்ல என்பது தெளிவாகும்.

**2) இரண்டாவதாக, அவர் ஒரு பைத்தியக்காரர் என்றும் நீ சந்தேகிக்கலாம்.**

அதாவது நான் ஆதியிலிருந்து இருக்கிறேன், ஆபிரகாமுக்கு முன்பே நான் இருக்கிறேன், என்றெல்லாம் இயேசு கூறினார். நாம் மேலே கண்டது போல, அவர் பொய் சொல்லவில்லை. அப்படியானால் தன்னை அறியாமலேயே ஒரு பித்து பிடித்தவர் போல கூறினாரா? இந்த முடிவும் சரியானதல்ல, ஏனென்றால் அவரது ஞானத்திற்கு முன்பு பெரிய யூத தலைவர்களும் தோற்றுபோயினர், கலங்கிபோயினர். அவரது வார்த்தைகளை கேட்க அனேக ஊர்களிலிருந்து மக்கள் திரண்டு வந்தனர், நிச்சயமாக அவர் ஒரு பைத்தியக்காரரும் அல்ல. இந்த தெரிவும் இதன் மூலம் அடிபட்டு போகிறது.

**3) மூன்றாவதாக, ஒரே ஒரு தெரிவு தான் உனக்கு மிஞ்சுகிறது, அதாவது அவர் தான் தெய்வம், அவர் தான் ஆண்டவர்.**

அவர் ஒரு பொய்யரும் இல்லை, பித்தரும் இல்லை, அப்படியானால், இவ்விதமாக பேசுகிறவர் யாராகத்தான் இருக்கமுடியும்? இறைவனாகத் தான் இருக்கமுடியும், முதல் நான்கு சுவிசேஷ நூல்களை படிப்பவர்களுக்கு இயேசு வேறு வாய்ப்பை அல்லது தெரிவை வைத்துவிட்டு போகவில்லை.

தம்பி, "அவர் ஒரு சன்மார்க்கர், நீதிமான், அல்லது தீர்க்கதரிசி" என்று நீ சொல்லலாம், ஆனால், இது சாத்தியமில்லை தம்பி. சுவிசேஷ நூல்களில் படித்துப்பார்க்கும் போது, இயேசு பேசியது போல "ஒரு நீதிமான், தீர்க்கதரிசி அல்லது சன்மார்க்கன்" பேசமாட்டான், அவனால் முடியாததும் கூட.

தச்சனிலும் மேலானவர் என்ற புத்தகத்திலிருந்து இன்னொரு மேற்கோளை காட்டி இந்த கடிதத்தை முடிக்க விரும்புகிறேன்:

"நான் யூத ஜனங்களுடன் இதை விவாதித்த போது அவர்கள் எவ்வாறு பதிலளித்தனர் என்பது ஆர்வமூட்டுவதாக இருக்கிறது. இயேசு ஒரு சன்மார்க்க, நேர்மையான தேவபக்தியுள்ள தலைவர், ஒரு நல்ல மனிதன், ஒரு விதமான தீர்க்கதரிசி என்று வழக்கமாக அவர்கள் என்னிடம் சொல்லுவார்கள். இயேசு தம்மைப் பற்றி உரிமை பாராட்டியவைகளையும் மற்றும் இந்த அத்தியாயத்திலுள்ள, மூன்றில் ஒன்றைத் (பொய்யர், பித்தன் அல்லது ஆண்டவர்) தெரிந்தெடுப்பதைப் பற்றிய கருத்துப் பொருளைப் பற்றியும் அவர்களோடு நான் பகிர்ந்து கொண்டேன். இயேசு ஒரு பொய்யர், என்று அவர்கள் நம்புகிறார்களா என்று நான் கேட்டதற்கு 'இல்லை' என்று உடனடியாக திட்டவட்டமாக பதில் வந்தது. 'அவர் ஒரு பித்தன் என்று நம்புகிறீர்களா?' என்று வினவிய போது, 'திட்டவட்டமாக இல்லை' என்று மறுமொழியளித்தனர். 'அவர்

ஒரு தேவனாக இருக்கிறார் என்று விசுவாசிக்கிறீர்களா' என்ற கேள்விக்கு நான் பேசி முடிப்பதற்குள் உடனடியாக 'முற்றிலும் இல்லை' என்று எதிரொலித்தனர். ஆயினும் எந்த ஒரு மனிதனுக்கும் இம்மூன்று தெரிந்தெடுப்புகளே உள்ளன. (பக்கம்34)"

ஆக, உனக்கு மிஞ்சம் ஒரே வாய்ப்பு, அல்லது தெரிவு, இயேசு தான் ஆண்டவர் என்று அவர் பாதத்தை முத்தஞ்ச் செய்வது தான்.

மேலும் உனக்கு சந்தேகம் இருந்தால், எனக்கு எழுத மறவாதே. இஸ்லாமில் உன் நம்பிக்கை திடமாக இருந்தால், ஒரு முறை சுவிசேஷ நூல்களை படித்துப் பார். உனக்கு புரியும்.

இப்படிக்கு, உன் சகோதரன்,

தமிழ் கிறிஸ்தவன்.

மூலம்

உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்

---

## நாள் 22 - மோசேயின் கட்டளைகளை மோசமாக மீறியவர் முஹம்மது

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

நீ நாள் தோறும் மனமாற்றமடைந்து வருவதை நீ எனக்கு அனுப்பிவருகிற மெயில்களிலிருந்து கண்டுவருகிறேன். உன் உள்ளத்திலிருந்து வரும் உண்மையான வார்த்தைகளை காணும்போது நான் மிகவும் சந்தோஷம் அடைகிறேன். நீ தற்பொழுது இருக்கும் நாட்டில் நியாயப்பிரமாண சட்டங்கள் ஷரியா எனும் பேரில் கடைப்பிடிக்க படுவதாக கூறியிருந்தாய். ஆம் நானும் அந்த செய்தியை கேள்விபட்டிருக்கிறேன். நீ பழைய ஏற்பாட்டின் நியாயப்பிரமாணம் பற்றி கேட்டபடியினால், பத்து கட்டளைகளில் ஒரு கட்டளையைப் பற்றி உன்னோடு நான் பகிர்ந்துக்கொள்ளப் போகிறேன்.

பிறனுடைய மனைவியை இச்சியாதிருப்பாயாக; பிறனுடைய வீட்டையும், அவனுடைய நிலத்தையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும், அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், பின்னும் பிறனுக்குள்ளயாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக என்றார். (உபாகமம் 5:21)

பிறனுடைய மனைவியை இச்சியாதிருப்பாயாக, தம்பி இந்த கட்டளையோடு முஹம்மதுவின் வாழ்க்கையை ஒப்பிட்டுபார். தனது வளர்ப்பு மகன் ஜையத்தின் மனைவியை இச்சித்த சம்பவத்தை நீ அறிந்திருக்கிறாய். இச்சித்தது மாத்திரமா மனைவியாக கொண்டதும் உனக்குத் தெரியும். இதனை உனது இஸ்லாமிய நண்பர்கள் "விவாகரத்து பெற்ற பெண்ணுக்கு வாழ்வு கொடுத்த நபிகளார்" என்று மிகவும் பெருமையாக பேசுவார்கள். இது நியாயப்பிரமானத்தை மீறிய செயலாகும் என்று சொன்னால், அவர்கள் திருப்பி கேற்பார்கள் "உங்கள் பைபிளில் சில சம்பவங்கள் இதே போல இருக்கின்றதே காணவில்லையா" என்று. உனது நண்பர்களுக்கு ஒரு விசயம் புரிவதேயில்லை.

பைபிளில் நோவா, யாக்கோபு, தாவீது போன்றோர் செய்த பாவங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் இறைவன் அவற்றை நியாயப்படுத்தவில்லை. நியாயப்பிரமானம் கொடுக்கப்பட முன் செய்தவர்களின் தவறுகள் குறிப்பிடப்பட்டுள்ளதோடு, நியாயப்பிரமாணம் கொடுக்கப்பட்ட பின் செய்தவர்களின் தவறுகளுக்காக பெற்ற தண்டனைகளும் பைபிளில் காணலாம்.

ஆனால் முஹம்மது செய்த பாவங்களை நியாயப்படுத்தி வஹி இறங்குவது தான் வேடிக்கையாகவுள்ளது.

*. . . .நபிக்காக தன்னைத் தானே அர்ப்பணம் செய்த நம்பிக்கை கொண்ட பெண்ணையும் நபி அவரை மணந்து கொள்ள விரும்பினால் (அனுமதித்துள்ளோம்). உமக்கு சங்கடம் ஏற்படக்கூடாது என்பதற்காக நம்பிக்கை கொண்டோருக்கு இல்லாமல் உமக்கு மட்டும் சிறப்பான சட்டமாகும் . . . . (குர்ஆன் 33:50)*

*இந்த வசனத்தை நீ அரபியில் பல முறை ஓதியிருப்பாய். ஒரு முறையாகிலும் சிந்தித்திருப்பாயா? குர்ஆனில் ஒரு சொல்லுக்கு 10 நன்மையெனும் அடிப்படையில் பொருள் புரியாமல் மந்திரம் ஓதுவது போன்று ஓதுவதையே பாமர மக்களுக்கு இஸ்லாமிய அறிஞர்களால் போதிக்கப்பட்டு வருவதை நான் காண்கிறேன். உனக்கும் அப்படித் தான் போதித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். மேலும் குர்ஆனில் அடிக்கடி சிந்திக்குமாறு சொல்கிறது. அதனாலோ என்னவோ இஸ்லாமியர் சிந்திப்பதேயில்லை. இஸ்லாமியர்கள் குர்-ஆன் வசனங்களை சிந்திக்கவேண்டுமென்றால், முதலாவது அவர்களுக்கு வசனம் புரியவேண்டுமே, அவர்கள் அரபியில் படித்தால் எப்படி புரியும்?*

*இந்த வசனத்தை சிந்தித்துபார். இது முஹம்மதுவுக்கு மட்டும் கொடுக்கப்பட்ட ஒரு சிறப்புச் சலுகை! அதாவது எந்த ஒரு முஸ்லிம் பெண்ணையும் முஹமது விரும்பினால் அவளை திருமணம் செய்ய முஹம்மதுவுக்கு அல்லாஹ் சிறப்புச் சலுகை கொடுக்கிறான்.*

*நியாயப்பிரமானம் போதிக்கிறது பிறனுடைய மனைவியை இச்சியாதிருப்பாயாக என்று. ஆனால் குர்ஆன் முஹம்மதுவுக்கு தனது மகனுடைய மனைவியையும் இச்சித்ததால் சொந்தமாக்கிகொள்ள வரம் கொடுக்கிறது. எது இறைவேதமாக இருக்க தகுதியுள்ளது என்று சிந்தித்தால் உண்மை புரியும்.*

*(நபியே!) எவருக்கு அல்லாஹ்வும் அருள் புரிந்து, நீரும் அவர் மீது அருள் புரிந்தீரோ, அவரிடத்தில் நீர்; "அல்லாஹ்வுக்குப் பயந்து நீர் உம் மனைவியை (விவாக விலக்குச் செய்து விடாமல்) உம்மிடமே நிறுத்தி வைத்துக் கொள்ளும்" என்று சொன்ன போது அல்லாஹ் வெளியாக்க இருந்ததை, மனிதர்களுக்குப் பயந்து நீர் உம்முடைய மனத்தில் மறைத்து வைத்திருந்தீர்; ஆனால் அல்லாஹ் அவன் தான், நீர் பயப்படுவதற்குத் தகுதியுடையவன்; ஆகவே ஜைது அவளை விவாக விலக்கு செய்துவிட்ட பின்னர் நாம் அவளை உமக்கு மணம் செய்வித்தோம்; ஏனென்றால் முஃமின்களால் (சுவீகரித்து) வளர்க்கப்பட்டவர்கள், தம் மனைவிமார்களை விவாகரத்துச் செய்து விட்டால், அ(வர்களை வளர்த்த)வர்கள் அப்பெண்களை மணந்து கொள்வதில் யாதொரு தடையுமிருக்கக் கூடாது என்பதற்காக (இது) நடைபெற்றே தீர வேண்டிய அல்லாஹ்வின் கட்டளையாகும். ( குர்-ஆன் 33:37)*

*தம்பி, எமது ஊரில் அநேக இஸ்லாமியர் பிள்ளைகளை தத்தெடுக்கிருக்கின்றனர். அவர்களில் யாராவது இது எனது பிள்ளையில்லையென்று சொல்வதை நீ செவிமடுத்திருக்கிறாயா? கடும் கோபத்தில் சொந்த பிள்ளைகளை கூட "நீ என் பிள்ளையில்லையென்று" சொல்வார்கள். ஆனால் பொதுவாக முழு உலகிலும் வளர்ப்பு மகனையும் மகன் என்று தான் சொல்வார்கள். அந்த காட்டுமிறாண்டி அரபியரும் அப்படிதான் அழைத்தார்கள். ஆனால் முஹம்மது ஜைது மனைவியின் அழகை கண்ட நேரத்திலிருந்துதான் வளர்ப்பு மகன் "மகன் அல்ல" என்ற கட்டளையை அல்லாஹ் இறக்குகிறான். சிந்திப்பவர்களுக்கு இதில் படிப்பினையுண்டு.*

*ஜைதின் மனைவியை முஹம்மது திருமணம் செய்ததை "விவாகரத்து பெற்ற பெண்ணுக்கு வாழ்வுகொடுத்த மாநபி" என்று வர்ணிப்பார்கள். ஆனால் முஹம்மதுவின் மரணத்தின் பிற்பாடு அவருடைய அனைத்து மனைவிகளும் விதவைகள் ஆகிவிட்டார்கள். தனது மரணத்தின் பின்னும் அவர்களை யாரும் திருமணம் செய்ய கூடாது என்பதற்காக அவர்களை முஃமீன்களின் தாய்மார்களாக ஆக்கிவிட்டார் முஹம்மது. அப்படியானால் முஃமீன்களின் தகப்பன் யாராக இருக்கவேண்டும்? முஹம்மது தான் தகப்பனாக இருக்கவேண்டும் என்று நீ நினைப்பாய். ஆனால் குர்ஆன் சொல்கிறது.*

*முஹம்மது(ஸல்) உங்கள் ஆடவர்களில் எவர் ஒருவருக்கும் தந்தையாக இருக்கவில்லை ஆனால் அவரோ அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களுக்கெல்லாம் இறுதி (முத்திரை)யாகவும் இருக்கின்றார் மேலும் அல்லாஹ் எல்லாப் பொருள்கள் பற்றியும் நன்கறிந்தவன். (33:40)*

*பார்த்தாயா இஸ்லாமிய நியாயத்தை? தான் மனைவிகளை தனக்கு பின்பு யாரும் திருமணம் செய்து விட கூடாது என்பதற்காக தனது மனைவிமாரை எல்லா முஸ்லீம்களுக்கும் தாய் ஆக்குகிறார். தனது மகனின் மனைவியை திருமணம் செய்துக் கொள்ளவேண்டுமென்பதற்காக தான் யாருக்கும் தகப்பன் இல்லையென்று வஹி வருகிறது. இங்குள்ள முரண்களும் தில்லுமுல்லுகளும் உனக்கு நன்றாக புரிந்திருக்கும் என்று நம்புகிறேன்.*

*வெளியில் இருக்கிற கவர்ச்சியை கண்டு நீ இஸ்லாத்துக்குள் நுழைந்துவிட்டாய். இப்பொழுதுதான் நரக வாயிலிலிருந்துகொண்டு, மிகவும் அலங்காரங்கள் நிறைந்த கதவுகளை வைத்து வருகிறவர்களை கவரும் வகையில் காரியங்களை காண்பித்து, அந்த கதவுகளுக்குள் நுழைந்த பிறகுதான் தெரியும் எரி நரகத்துக்குள் வந்துள்ளோம் என்று. இப்பொழுது இதுதான் உனது நிலையாகவுள்ளது எனதருமை தம்பியே!*

*உன்னை இந்த நரகத்திலிருந்து மீட்டுகொள்ளதான் எனது இந்த பிரயாசம். பரலோகக் கதவு உனக்காக இன்னும் திறந்துதான் இருக்கிறது. எனது கர்த்தராகிய இயேசு சொன்ன இந்த வார்த்தைகளோடு இந்த கடிதத்தை முடிவு செய்கிறேன். நாளை சந்திப்போம்.*

*விபசாரஞ் செய்யாதிருப்பாயாக என்பது பூர்வத்தாருக்குஉரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச்சொல்லுகிறேன் ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன்இருதயத்தில் அவளோடே விபசாரஞ்செய்தாயிற்று. (மத்தேயு* 5:27-28)

*இப்படிக்கு,*

*உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## நாள் 23 - போரில் பிடிபட்ட பெண் கைதிகளுக்கு நல்வாழ்வு தரும் நல்லவர்

[*'அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* **இங்கு** *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*உன்னுடைய கடிதம் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன். நீ ஆரோக்கியமாக இருப்பதாகவும், நீ கடந்த மூன்று வாரங்களாக கடைபிடித்து வரும் நோன்பு உன்னை ஆரோக்கியமானவனாக வைத்திருக்கிறது என்றும் கூறியிருந்தாய். உனக்கு இருந்த சில வயிற்று சம்மந்தப்பட்ட பிரச்சனைகள் இந்த ரமளான் காலகட்டத்தில் காணப்படாமல் போய்விட்டது என்று நீ குறிப்பிட்டு இருந்தாய், மேலும் நீ அந்த பிரச்சனைக்காக பயன்படுத்தும் மாத்திரைகளும் பயன்படுத்தும் அவசியம் இந்த மாதத்தில் வரவில்லை என்று நீ எழுதியிருந்தாய். உன் ஆரோக்கியம் குறித்து நீ சொன்ன விவரங்கள் அனைத்தையும் கேட்டு நான் அதிகமாக மகிழ்ச்சி அடைகிறேன். அம்மாவிற்கு, அப்பாவிற்கும் இதனை நான் தெரிவித்த போது, அவர்களும் உன் சரீர சுகச்செய்தி கேட்டு மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தார்கள். அவ்வப்போது உன் சுகச்செய்திகளை தொடர்ந்து பகிர்ந்துக்கொள்.*

*நேற்று நான் எழுதிய விவரங்களை படித்தவுடன், நீ தாமதமில்லாமல், எனக்கு பதில் எழுதியிருந்தாய். நேற்று நான் முஹம்மது பற்றி சொன்ன விவரங்களை பற்றிய ஆய்வை பிறகு செய்வேன், ஆனால், என்னுடைய இந்த கேள்விக்கு உங்கள் பதில் என்ன? என்று என்னிடம் ஒரு கேள்வியை கேட்டு இருந்தாய். அதாவது போரில் பிடிபடும் பெண் அடிமைகளை மிகவும் கொடுமையாக நடத்தும் படி பழைய ஏற்பாடு கூறுகிறது என்று குற்றம் சாட்டினாய், ஆனால், பெண் அடிமைகளுக்கு பாதுகாப்பு அளிக்கும் படி குர்-ஆன் கூறுகிறது, அதாவது அவர்களுக்கு ஒரு ஆண் துணை தேவை, அவர்களுக்கு உணவு, உடை இருப்பிடம் இம்மூன்றும் தேவை என்பதை கவனத்தில் கொண்டு, அல்லாஹ் வசனங்களை இறக்கியுள்ளான், வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்ட பெண்கள் இவர்கள் என்று அல்லாஹ் கூறுகின்றான். பெண்களுக்கு கவுரவம் கொடுப்பதில் குர்-ஆனும் இஸ்லாமும் கவனமாக இருக்கிறது, ஆனால், பைபிளோ அப்படிப்பட்ட பெண்ணுக்கு மொட்டை அடிக்கச் சொல்லி அவளை அவமானப்படுத்துகிறது. இந்த விவரம் பற்றி என்னுடைய பதில் என்ன என்று கேள்வி எழுப்பியிருந்தாய்.*

தம்பி, நீ மேற்கண்ட விவரங்களை எனக்கு எழுதும் போது, உன் கேள்விகளுக்கு அடிப்படையாக இருக்கும் குர்-ஆன் மற்றும் பைபிள் வசனங்களை குறிப்பிடாமல் எழுதியிருந்தாய். இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால், நீ அவசரத்தில் எழுதுகிறாய், மற்றும் உன் இஸ்லாமிய சகோதரர்கள் சொன்ன விவரங்களை சரி பார்க்காமல், அப்படியே என்னிடம் கேட்டுள்ளாய்.

நான் இப்போது இந்த கடிதத்தில் நீ பைபிள் பற்றி கூறிய குற்றச்சாட்டிற்கு முதலில் பதில் எழுதுகிறேன், மற்றும் குர்-ஆன் எப்படி அடிமைப்பெண்ணுக்கு பாதுகாப்பு அளிக்கிறது, கவுரப்படுத்துகிறது என்பதைப் பற்றி நாளைக்கு உனக்கு எழுதுவேன்.

## 1) பெண் போர்க்கைதிகளை திருமணம் செய்துக்கொள்ளுதல்:

பழைய ஏற்பாட்டில் யூத மக்களை எகிப்திலிருந்து கொண்டு வந்து கானானை அவர்களுக்கு கொடுக்கும் போது, சில கட்டளைகளை தேவன் கொடுத்தார். அவர்கள் ஒரு புதிய நாட்டில் வாழப்போகிறவர்கள் என்பதாலும், அவர்கள் பல ஆண்டுகளாக அடிமைகளாக எகிப்தில் வாழ்ந்தபடியினாலும், அவர்களுக்கு தேவையான சட்டங்களை தேவன் மோசே மூலமாக கொடுத்தார். அவைகளில் சில சட்டங்கள், நாடு, அரசாங்கம், சட்ட ஒழுங்கு மற்றும் குற்றம் புரிந்தவர்களுக்கான தண்டனைகள் போன்றவைகள் பற்றி இருந்தது. இன்னும் சில சட்டங்கள் அவர்கள் எப்படி தங்கள் மார்க்க விஷயங்களை கடைபிடிக்கவேண்டும், தேவனை எப்படி தொழுதுக்கொள்ளவேண்டும் என்பவைகள் பற்றி கொடுக்கப்பட்டது. இவைகள் மட்டுமல்லால் பொதுவாக எப்போதும் கடைபிடிக்கவேண்டிய கட்டளைகளையும் கொடுத்தார், உதாரணத்திற்கு பத்து கட்டளைகளைச் சொல்லலாம்.

இப்படிப்பட்ட சட்டங்கள் தரப்படும் போது, போரில் பிடிப்பட்ட பெண்களை, ஆண்களை எப்படி நடத்தவேண்டும் என்று அனேக கட்டளைகளையும் கொடுத்துள்ளார். இந்த கடிதத்தைப் பொருத்தமட்டில், பெண் அடிமைகளை திருமணம் செய்துக்கொள்ளுதல் பற்றி மட்டுமே நான் விளக்குகிறேன். அடிமைகள் பற்றிய கட்டளைகளை நாம் பைபிளில் கண்டோமானால், நம் தேவன் மீது நாம் வைத்திருக்கும் அன்பு இன்னும் அதிகமாகும் தெரியுமா? ஆனால், குர்-ஆனும், இஸ்லாமும் அடிமைகள் பற்றிச் சொல்லும் விவரங்களை கண்டால் நிச்சயமாக இவர் ஒரு இறைவன் தானா என்று எண்ணத்தோன்றும், தேவைப்பட்டால் இந்த விவரங்கள் பற்றி இன்னும் அதிகமாக வருங்காலங்களில் நான் உனக்கு எழுதுவேன். ஒரு பானை சொற்றுக்கு ஒரு சோறு பதம் என்பார்கள் அது போல, இந்த இரண்டு கடிதங்கள், இஸ்லாமின் இறைவனாகிய அல்லாஹ்வின் உள்ளத்தையும், யெகோவா தேவனின் உள்ளத்தையும் படம் பிடித்துக் காட்டும்.

**சரி தம்பி, உன் கேள்விக்கான பைபிள் வசனங்களை இப்போது படிப்போமா? உபாகமம் 21:10 லிருந்து 14ம் வசனம் வரைக்கும் படிப்போம்.**

21:10 நீ உன் சத்துருக்களுக்கு எதிராக யுத்தத்திற்குப் புறப்பட்டு, உன் தேவனாகிய கர்த்தர் அவர்களை உன் கையில் ஒப்புக்கொடுக்கிறதினால், அவர்களைச் சிறைபிடித்துவந்து,

21:11 சிறைகளில் ரூபவதியான ஒரு ஸ்திரீயைக்கண்டு, அவளை விவாகம்பண்ண விரும்பி,

21:12 அவளை உன் வீட்டிற்குள் அழைத்துக்கொண்டுபோவாயானால், அவள் தன் தலையைச் சிரைத்து, தன் நகங்களைக் களைந்து,

21:13 தன் சிறையிருப்பின் வஸ்திரத்தையும் நீக்கி, உன் வீட்டிலிருந்து, ஒரு மாதமட்டும் தன் தகப்பனையும் தாயையும் நினைத்துத் துக்கங்கொண்டாடக்கடவள்; அதன்பின்பு நீ அவளோடே சேர்ந்து, அவளுக்குப் புருஷனாயிரு, அவள் உனக்கு மனைவியாயிருப்பாள்.

21:14 அவள்மேல் உனக்குப் பிரியமில்லாமற்போனால், நீ அவளைப் பணத்திற்கு விற்காமல், அவளைத் தன் இஷ்டப்படி போகவிடலாம்; நீ அவளைத் தாழ்மைப்படுத்தினபடியினால் அவளாலே ஆதாயம் பெறும்படி தேடவேண்டாம். (உபாகமம் 21:10-14)

## 2) அடிமைப் பெண்ணை நீ விரும்பினால்:

குர்-ஆனுக்கு 1500 ஆண்டுகளுக்கு முன்பே யெகோவா தேவன் *"அடிமைப் பெண்ணை" நீ விரும்பினால், அவளை திருமணம் செய்துக்கொள்ளவேண்டும், அவளை மனைவியாக்கிக்கொண்ட பிறகே அவளுடன் திருமண உறவில் ஈடுபடலாம் என்று சொல்லியுள்ளார். ஆனால், இன்றிலிருந்து 1400 ஆண்டுகளுக்கு முன்பு வந்த குர்-ஆன் (அல்லாஹ்) இப்படி சொல்லவில்லை, திருமணம் செய்யாமலேயே அடிமைப்பெண்களோடு உடலுறவு கொள்ளலாம் என்று குர்-ஆன் முஸ்லிம்களுக்கு அனுமதி அளிக்கிறது.*

*திருமணத்திற்கு வெளியே உடலுறவு இல்லை என்பதை பைபிள் சொல்கிறது. வசனம் 11ம் படி, ஒரு அழகான அடிமைப்பெண்ணை கண்டு, அவளை விரும்பினால், நீ அவளை திருமணம் செய்துக்கொள்ளவேண்டும். வேறு வகையில் சொல்லவேண்டுமென்றால், இவ்வசனத்தின்படி, ஒரு யூத ஆண், ஒரு அந்நிய அடிமைப்பெண்ணை விரும்பினால், திருமணம் தான் அவன் செய்யவேண்டிய முதலாவது காரியம், இந்த வசனத்தை ஒரு முறை மறுபடியும் படிப்போம்:*

21:11 *சிறைகளில் ரூபவதியான ஒரு ஸ்திரீயைக்கண்டு, அவளை விவாகம்பண்ண விரும்பி,*

*இந்த வசனத்தில், "**அவளை விவாகம்பண்ண விரும்பி**" என்று வருகிறது. அதாவது ஒரு பெண்ணோடு உடலுறவு கொள்ளவேண்டும் என்று விரும்பினால், முதலில் திருமணம் செய்யவேண்டும் என்பது தான் ஒரு யூதனின் மனதில் தோன்றவேண்டிய முதல் எண்ணமாக இருக்கவேண்டும். வேறுவகையில் சொல்லவேண்டுமென்றால், திருமணம் பந்தமில்லாமல் உடலுறவு பற்றி ஒரு யூதன் நினைக்கவே கூடாது. ஆனால், ஒரு முஸ்லிமின் நிலை இதற்கு எதிர் மறையாக உள்ளது, இதனை அடுத்த கடிதத்தில் விவரமாக பார்ப்போம்.*

## 3) பழயவைகளை மறந்து, தன் குடும்பத்திற்காக துக்கம் கொண்டாட 30 நாட்கள்:

*ஒரு யூதன் ஒரு அடிமைப்பெண்ணை விரும்பினால், முதலாவது அவன் அவளை திருமணம் செய்துக்கொள்ளவேண்டும், குர்-ஆன் சொல்வது போல அவளை திருமணம் செய்துக்கொள்ளாமல் உடலுறவு கொள்ளக்கூடாது. இது மட்டுமா, தன் குடும்பத்தை இழந்த அந்தப் பெண் திருமண வாழ்விற்கு உடனே தயாராகிவிடுவாளா? நிச்சயமாக இல்லை. பைபிளின் படி:*

***அ) அந்த பெண்ணை வீட்டிற்கு அழைத்துகொண்டு** வந்து, அவளை சுத்திகரித்து (அவளுடைய தலைமயிரை சிறைத்து, நகங்களை சுத்தப்படுத்தி, அப்பெண் பிடிபட்டபோது அணிந்து இருந்த பழைய உடைகளை நீக்கி, வேறு ஆடைகளை ஆடைகளை உடுத்தி) அவள் தன்குடும்பத்திற்காக துக்கம் கொண்டாட 30 நாட்கள் அவளுக்கு தரப்படவேண்டும். (துக்கம் கொண்டாடுவது என்பது மனிதனுக்கு நல்லது, அவனுடைய காயப்பட்ட மனம் சுகமாக்கப்படும்). தன்னையும் மதித்து தனக்கு கொடுக்கப்பட்ட இந்த காலகட்டத்திற்காக அந்தப்பெண் நன்றியுள்ளவளாக இருப்பாள்.*

***ஆ) பழயவைகள் அனைத்தையும்** அதாவது தான் ஒரு அடிமைப்பெண் என்பதை மறக்கவைத்து, தனக்கும் ஒரு யூதப்பெண்ணுக்கு இருக்கின்ற உரிமையைப்போன்ற உரிமை உண்டு என்பதை நிலை நாட்ட, அந்தப் பெண் அடிமையாக பிடிக்கப்பட்டபோது அணிந்திருந்த உடைகளை நீக்கி, நல்ல உடைகளை உடுத்துவிக்கப்படவேண்டும். தன் குடும்ப நபர்களுக்காக துக்கம் கொண்டாட 30 நாட்கள் அனுமதிக்கப்படவேண்டும்.*

***இ) இந்த முப்பது நாட்கள்,** அந்த ஆண் இந்த பெண்ணை தொந்திரவு செய்யக்கூடாது, இவளுக்கு பாதுகாப்பு அவனே தரவேண்டும்,உடவு உடை இருப்பிடன் இந்த மனிதனே கொடுக்கவேண்டும், அவனுடைய வீட்டிலேயே இந்த பெண் 30 நாட்கள் இருக்கவேண்டும்.*

***ஈ) இப்படி முப்பது நாட்கள் அந்த பெண் புது வாழ்விற்கு தயாராகிறாள்,** அந்த ஆணின் மீது சிறிது சிறிதாக அன்பு வர ஆரம்பிக்கும்.*

***உ) இந்த கட்டளை இல்லையென்றால்,*** *அந்த பெண்ணுக்கு பாதுகாப்பு இல்லை, அடிமைபெண் தானே, நான் விலைக்கொடுத்து வாங்கினேன் என்றுச் சொல்லி, அவளை கற்பழிக்க மனிதன் முயலுவான் ( இதனைத் தான்குர்-ஆன் அனுமதிக்கிறது). ஆனால், யெகோவா தேவன் இதனை கட்டளையாக கொடுத்து இருப்பதினால், அவளுக்கு பாதுகாப்பு கிடைக்கும். குறைந்தபட்சம் 30 நாட்கள் அவளுக்கு கிடைக்கிறது.*

***ஊ) தம்பி, இப்போது நீ "ஏன் மொட்டை அடிக்கவேண்டும்?"*** *என்று கேள்வி எழுப்பலாம். இந்த வசனத்தில் கொடுக்கப்பட்ட அனைத்து விவரங்களையும் நீ கவனித்தால், ஒரு மணப்பெண்ணை தயார் படுத்துவது போல காணப்படும். அதாவது, புதிய வாழ்வு வருகிறது, ஒரு புதிய ஆரம்பம் வாழ்வில் தொடங்கப்போகிறது, எனவே, தலை மயிரை சிறைப்பது ஒரு புதிய ஆரம்பம் என்பதைக் காட்டுகிறது. தலைமயிர் மட்டுமல்ல, நகங்களையும் களையவேண்டும் என்றும் வசனம் கூறுகிறது. இந்த செயல் அப்பெண்ணை அவமானப்படுத்துவதற்கு அல்ல, அவளுக்கு ஒரு புதிய ஆரம்பத்தைப் பற்றிய மகிழ்ச்சியை அல்லது மாற்றத்தை தெரிவிக்க இப்படி சொல்லப்பட்டுள்ளது. அப்பெண் அந்த குடும்பத்தில் தொடர்ந்து மொட்டை அடித்துக்கொண்டே இருக்கவேண்டும் என்று வசனம் சொல்லவில்லை, ஒரே ஒரு முறை மட்டும் இப்படி செய்யப்படவேண்டும். மனதளவில் தான் ஒரு புதிய வாழ்விற்குள் நுழையப்போகிறாள் என்ற உணர்வு அவளுக்கு வருகிறது.*

## 4) இப்போது கணவன் மனைவி என்ற உறவு முறையில் புதிய வாழ்வை தொடங்கலாம்:

*அந்த முப்பது நாட்கள் அவளை இந்த ஆண் நெருங்கக்கூடாது, அவள் தன் துக்கத்தை நினைத்து அழுது, தன் குடும்ப நபர்களை பிரிந்த துக்கத்தை நினைத்து, அழுது, மன சாந்தி அடையவேண்டும். அதன் பிறகு, அந்த யூதன் அவளுக்கு கணவனாக இருக்கவேண்டும், அவள் அவனுக்கு மனைவியாக இருக்கவேண்டும். ஆனால், குர்-ஆன் என்ன சொல்கிறது? திருமணம் செய்துக்கொள்ளாமலேயே அப்பெண்ணோடு உடலுறவு கொள்ளலாம். அந்தோ பரிதாபம்.*

21:13 *தன் சிறையிருப்பின் வஸ்திரத்தையும் நீக்கி, உன் வீட்டிலிருந்து, ஒரு மாதமட்டும் தன் தகப்பனையும் தாயையும் நினைத்துத் துக்கங்கொண்டாடக்கடவள்;* ***அதன்பின்பு நீ அவளோடே சேர்ந்து, அவளுக்குப் புருஷனாயிரு, அவள் உனக்கு மனைவியாயிருப்பாள்.***

*நன்றாக கவனித்துப்பார் தம்பி, "அதன்பின்பு நீ அவளோடே சேர்ந்து, அவளுக்கு புருஷனாயிரு, அவள் உனக்கு மனைவியாக இருப்பாள்", என்று வசனம் சொல்கிறது, கணவன் மனைவி உறவுக்குள் மட்டுமே தாம்பத்திய உறவு, அதற்கு வெளியே அது விபச்சாரம் எனப்படும். எப்படி பைபிள் ஒரு அடிமைப் பெண்ணுக்காக பேசுகிறது என்பதை கவனி, எப்படி இந்த அந்நிய நாட்டுப் பெண் ஒரு யூதனுடைய வீட்டிற்குள் நடத்தப்படுகிறாள் என்பதை கவனி.*

## 5) அவளை மறுபடியும் விற்கும் உரிமை உனக்கு இல்லை:

*தம்பி, யெகோவா தேவன் எப்படி தன்னை தொழுதுக்கொள்ளும் ஆண்கள் நடந்துக்கொள்ளவேண்டும் என்று கற்றுக்கொடுக்கிறார் என்பதைப் பார். இந்த பெண் நான் விலைக்கொடுத்து வாங்கிய அடிமை தானே என்றுச் சொல்லி, அவளோடு அனேக நாட்கள் அல்லது மாதங்கள் அல்லது ஆண்டுகள் வாழ்ந்துவிட்டு, மறுபடியும் அவளை அடிமையாக விற்க உனக்கு உரிமை இல்லை. எனவே, உனக்கு அவள் பிரியமானவளாக இல்லாமல் போனால், அவளை அப்படியே விடுதலையாக போகவிட்டுவிடு, மறுபடியும் விற்று அவளை அடிமையாக்காதே.*

21:14 *அவள்மேல் உனக்குப் பிரியமில்லாமற்போனால், நீ அவளைப் பணத்திற்கு விற்காமல், அவளைத் தன் இஷ்டப்படி போகவிடலாம்; நீ அவளைத் தாழ்மைப்படுத்தினபடியினால் அவளாலே ஆதாயம் பெறும்படி தேடவேண்டாம்.* (உபாகமம் 21:14)

*அவள் உனக்கு மனைவியாக இருந்தாள் நீயும் புருஷனாக இருந்தாய். அவளோடு நீ உடலுறவு கொண்டபடியினாலே "நீ அவளை தாழ்மைபடுத்தினாய்", இதற்கு உனக்கு தண்டனையாக, நீ மறுபடியும் அவளை விற்று லாபம் சம்பாதிக்க உனக்கு உரிமை இல்லை.*

*தம்பி, அல்லாஹ் இந்த விஷயம் பற்றி என்ன சொல்கிறார்? வலக்கரம் சொந்தமாக்கிக்கொண்ட பெண்களை அனேக ஆண்டுகள் கற்பழித்துவிட்டு, மறுபடியும் அவளை விற்க அல்லாஹ் அனுமதி தருகிறார், இதுவா அடிமைப்பெண்கள் பற்றி அல்லாஹ் கொண்ட அக்கரை.*

*தம்பி, இதுவரை படித்த விவரங்கள் ஏதோ இரகசியம் அல்ல. தமிழில் அந்த நான்கு வசனங்களை நீயே படித்து இருந்தால், புரிந்துக்கொண்டு இருப்பாய். ஆனால், இஸ்லாமியர்களின் சொற்களைக் கேட்டு, நீ ஆய்வு செய்யாமல் கேள்வி எழுப்புகிறாய். யெகோவா தேவன் எப்படி ஒரு அந்நியப்பெண்ணைப் பற்றி எழுதியுள்ளார் என்பதை நீயே கவனித்துப் பார்.*

1. *ஒரு யூதன் திருமணம் செய்யாமல் அடிமைப்பெண்ணை தொடக்கூடாது,*
2. *அந்த பெண்ணுக்கு 30 நாட்கள் தன் குடும்ப நபர்களை நினைத்து துக்கம் கொண்டாட தன் வீட்டிலேயே அனுமதி அளிக்கவேண்டும்.*
3. *இந்த 30 நாட்களிலும் அவளை தொடக்கூடாது.*
4. *அதன் பிறகு திருமணம் செய்துக்கொண்டு, அவளுக்கு புருஷனாக அவளோடு வாழவேண்டும், அவள் அவனுக்கு மனைவியாக இருப்பாள்.*
5. *மேலும், அவளை மறுபடியும் விற்க இந்த யூதனுக்கு அனுமதி இல்லை, அந்தப் பெண் விடுதலையான பெண்ணாக வாழ விட்டுவிடவேண்டும்.*

*பார்த்தாயா தம்பி, பைபிளின் தேவன் எப்படி அந்நிய பெண்ணுக்காக கட்டளைகளை கொடுத்துள்ளார், இவர் தான் உண்மையான தெய்வம். இப்படிப்பட்டவரை தொழுதுக்கொள்வதில் கிறிஸ்தவர்கள் மகிழ்கிறார்கள். ஆனால், நீ தொழுதுக்கொள்ளும் அல்லாஹ் அடிமைப்பெண்களின் திருமணம் பற்றி என்ன சொல்கிறார் என்பதை அடுத்த கடிதத்தில் விவரிக்கிறேன்.*

*நான் சொன்ன விவரங்களை ஒரு முறை பரிசோதித்துப் பார். யேகோவா தேவன் அடிமைப்பெண்கள் விஷயத்தில் கரிசனை உள்ளவராக இருக்கிறார். அல்லாஹ் அடிமைப்பெண்களை அவமானச் சின்னங்களாக மாற்றுகிறார்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு, உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## நாள் 24 - முஸ்லிம்களின் வலக்கரத்திற்கு சொந்தமானவர்களின் சோகக்கதைகள்

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*நேற்று நான் எழுதிய கடிதத்தில், பழைய ஏற்பாட்டில் அடிமைப் பெண்களை திருமணம் செய்யும் விதம் பற்றி தேவன் விதித்த கட்டளைகளை விளக்கினேன். இந்த கடிதத்தில், எப்படி அல்லாஹ் அடிமைப் பெண்களின் திருமணம் பற்றி கூறுகிறார் என்பதை சுருக்கமாக காண்போம்.*

### 1) அடிமைப்பெண்கள் பற்றி குர்ஆனின் நிலைப்பாடு: "வலக்கரத்திற்கு சொந்தமானவர்கள்"

*குர்ஆன் அடிமைகளைப் பற்றி குறிப்பிடும் போது "அவர்கள் முஸ்லிம்களின் வலக்கரத்திற்கு சொந்தமானவர்களாக" கூறுகிறது.*

*குர்ஆன்* 23:5,6

*மேலும், அவர்கள் தங்களுடைய வெட்கத் தலங்களைக் காத்துக் கொள்வார்கள். ஆனால், அவர்கள் தங்கள் மனைவிகளிடமோ அல்லது தங்கள் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களிடமோ தவிர - (இவர்களிடம் உறவு கொள்வது கொண்டும்) நிச்சயமாக அவர்கள் பழிக்கப்படமாட்டார்கள்.* (23:5,6)

*குர்ஆன்* 33:50

*நபியே! எவர்களுக்கு நீர் அவர்களுடைய மஹரை கொடுத்து விட்டீரோ அந்த உம்முடைய மனைவியரையும், உமக்கு(ப் போரில் எளிதாக) அல்லாஹ் அளித்துள்ளவர்களில் உம் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்களையும், நாம் உமக்கு ஹலாலாக்கி இருக்கின்றோம்;* …(33:50)

*குர்ஆன்* 4:24

*இன்னும் (போரில் பிடிபட்டு உங்கள் ஆதரவிலிருக்கும்) அடிமைப் பெண்களைத் தவிர, கணவனுள்ள பெண்களை நீங்கள் மணமுடிப்பது விலக்கப்பட்டுள்ளது. (இவையனைத்தும்) அல்லாஹ் உங்கள் மீது விதியாக்கியவையாகும். ... (*4:24)

*போரில் பிடிக்கப்படும் பெண்களிடம் ஒரு முஸ்லிம் திருமணம் செய்துக்கொள்ளாமலேயே உடலுறவு கொள்ளலாம் என்று குர்ஆன் கூறுகிறது.*

## 2) மருமகனும் மாமனாரும்:

*தம்பி இதுவரை நீ காணாத விவரங்களை, கேளாத விவரங்களை கேட்டுக்கொண்டு இருக்கிறாய். இதோ உன்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தும் இன்னொரு விஷயம்:*

*பாகம்* 4, *அத்தியாயம்* 64, *எண்* 4350 *புரைதா இப்னு ஹுஸைப்(ரலி) அறிவித்தார்*

*நபி(ஸல்) அவர்கள் காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களிடம் 'குமுஸ்' நிதியைப் பெற்றுவர அலீ(ரலி) அவர்களை அனுப்பினார்கள். அலீ(ரலி) (போர்ச் செல்வத்தில் தமக்கென அடிமைப் பெண்ணை எடுத்துக் கொண்ட பின்) குளித்துவிட்டு வந்தார்கள். அவர்கள் மீது நான் கோபமடைந்து, காலிதிடம், 'இவரை நீங்கள் பார்க்கமாட்டீர்களா?' என்று கேட்டேன். நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் சென்றபோது, நான் அவர்களிடம் அதைச் சொன்னனே;. அதற்கு அவர்கள், 'புரைதாவே! நீ அலீ மீது கோபமடைந்து இருக்கிறாயா?' என்று கேட்க நான், 'ஆம்!" என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள், 'அவரின் மீது நீ கோபம் கொள்ளாதே! ஏனெனில், அவருக்கு 'குமுஸ்' நிதியில் அதை விட அதிக உரிமையுள்ளது" என்று கூறினார்கள்.*

*எனதருமை தம்பியே, குர்ஆனுக்கு அடித்தபடியாக இஸ்லாமியர்கள் மதிக்கும் புகாரி ஹதீஸைத் தான் நீ மேலே படித்தது.*

*போரில் கிடைக்கும் பொருட்களில், அடிமைகளில் ஐந்தில் ஒரு பங்கு முஹம்மதுவிற்கும், அல்லாஹ்விற்கும் சொந்தமானதாகும். ஒரு குறிப்பிட்ட போர் முடிந்தவுடன், தனக்கு வரவேண்டிய இப்படிப்பட்ட ஐந்தில் ஒரு பாகத்தை (குமுஸ்) கொண்டு வரும் படி முஹம்மது தம் மருமகனாகிய அலியை அனுப்புகிறார். அலியும் செல்கிறார், ஆனால், அந்த போர்ச்செல்வத்தில் ஒரு பெண்ணை கண்டு, அவளோடு உடலுறவு கொண்டு (அப்பெண்ணை கற்பழித்துவிட்டு), அதன் பிறகு குளித்துவிட்டு, அலி வருகிறார். இதனைக் கண்ட மற்றவர், அலி மீது கோபம் கொண்டு முஹம்மதுவிடம் செல்கிறார். முஹம்மது அந்த மனிதரிடம், "நீ கோபம் கொள்ளாதே, குமுஸ் நிதி மீது அலிக்கு இன்னும் அதிக உரிமை உள்ளது" என்று கூறி சமாதானப் படுத்துகிறார்.*

*இந்த நிகழ்ச்சி ஏதோ அந்த அடிமைப்பெண்ணை கற்பழித்துவிட்டதாக நினைத்து பேசப்பட்டது அல்ல, குமுஸ் நிதியிலிருந்து ஏன் அலி இப்படி செய்தார்? இது முஹம்மதுவிற்கு சொந்தமானது அல்லவா? என்று நினைத்து அந்த நபர் கோபம் கொள்கிறார். இதற்கு முஹம்மது தம் மருமகன் பற்றி கூறும் விவரம் என்ன தெரியுமா? இதை விட அதிக உரிமை அலிக்கு உண்டு என்பதாகும் (ஒரு பெண்ணை எடுத்துக்கொண்டு கற்பழித்தது மட்டுல்ல அதற்கு மேலாக அலி செய்வதற்கும் அவருக்கு உரிமை உண்டு என்பதாகும்).*

## 3) கற்பழித்துவிட்டு, மறுபடியும் அவர்களை விற்று காசு சம்பாதிக்க அனுமதி அளித்த அண்ணல்

*தம்பி, திருமணம் செய்துக்கொள்ளாமல் அடிமைப்பெண்களை கற்பழிக்க குர்-ஆன் அனுமதி அளிக்கிறது. தனக்கு கிடைத்த ஐந்தில் ஒரு பாகத்தில் வரும் பெண் அடிமையை தன் மருமகனே கற்பழித்தாலும் அதனை அங்கீகரித்த மாமனாராக உன் வழிகாட்டி இருக்கிறார். இதுமட்டுமல்ல, அடிமைப்பெண்களை கற்பழித்துவிட்டு, அதன் பிறகு அவர்களை விற்றுவிட்டு, காசு சம்பாதிக்கவும் உன் வழிகாட்டி வழிகாட்டுகிறார். இவைகளை நீயே தமிழ் மொழியில் உள்ள புகாரி ஹதீஸ்களில் படிக்கலாம். இதோ உனக்காக அந்த புகாரி ஹதீஸ்கள்:*

*பாகம்* 2, *அத்தியாயம்* 34, *எண்* 2229

*அபூ ஸயீத்(ரலி) அறிவித்தார்.*

*நான் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருக்கும்போது, 'இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு (பெண்) போர்க் கைதிகள் கிடைக்கின்றனர். அவர்களை நல்ல விலைக்கு விற்க நாங்கள் விரும்புவதால் (அவர்களுடன் உடலுறவு கொள்ளும் போது) நாங்கள் அஸ்ல் (உடலுறவின் போது) பெண்குறிக்குள் விந்தைச் செலுத்தாமல் வெளியேவிட்டுவிடும் செயலைச்) செய்யலாமா?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அப்படியா நீங்கள் செய்கிறீர்கள்? இதைச் செய்யாமலிருப்பது உங்களின் மீது கடமையல்ல! (அதாவது, நீங்கள் இப்படிச் செய்வதற்குத் தடை ஏதுமில்லை; ஆயினும், அஸ்ல் செய்யாமலிருப்பதே மேலானதாகும்!) ஏனெனில், உருவாக வேண்டுமென்று அல்லாஹ் விதித்துள்ள எந்த உயிரும் உருவாகாமல் இருப்பதில்லை!" என்று கூறினார்கள். (பார்க்க: பின்குறிப்பு)*

*மேலும் இதே விஷயத்தைக் கூறும் புகாரி ஹதீஸ் எண்கள்:*

*பாகம்* 3, *அத்தியாயம்* 49, *எண்* 2542

*பாகம்* 4, *அத்தியாயம்* 64, *எண்* 4138

*பாகம்* 5, *அத்தியாயம்* 67, *எண்* 5210

*பாகம்* 7, *அத்தியாயம்* 83, *எண்* 6603

*உன் வழிகாட்டி எப்படிப்பட்ட பதிலை கொடுத்தார் பார்த்தாயா? நீங்கள் பெண் அடிகைகளை கற்பழிக்கும் போது, உங்கள் விந்தை வெளியே விடவேண்டிய அவசியமில்லை, பிறக்கும் குழந்தை பிறக்காமல் இருக்காது, பிறக்காத குழந்தை பிறக்காது, என்று தத்துவங்கள் பேசுகிறார். ஆனால், அந்த பெண் அடிமைகளின் நிலையை நினைத்துப் பார்க்கவில்லை. தன் கணவனையும், பெற்றோர்களையும் போரில் பலி கொடுத்துவிட்டு, அனாதையாக நின்றுக்கொண்டு இருக்கும் பெண்களிடம் சென்று அவர்களிடம் உடலுறவு கொண்டால், அவர்கள் மகிழுவார்களா? அவர்களின் மனது சந்தோஷப்படுமா? சிந்தித்துப்பார் தம்பி. முஹம்மது அனுமதித்த இந்த செயலுக்கு நீ என்ன பெயர் கொடுப்பாய், இதை "கற்பழிப்பு" என்று தான் சொல்லமுடியும்.*

## 4) பெண் அடிமைகளை கேவலப்படுத்தும் இஸ்லாம்:

*இதுவரை ஒரு சில விவரங்களை உனக்கு நான் மேற்கோள் காட்டினேன், நீ உயிரினும் மேலாக மதிக்கும் முஹம்மதுவிற்கு அடிமைப்பெண்கள் இருந்ததாக, இஸ்லாமிய சரித்திரம் கூறுகிறது. தேவைப்பட்டால்*

முஹம்மதுவின் வைப்பாட்டிகள் (அடிமைப்பெண்கள்) பற்றி இஸ்லாமிய சரித்திரம் என்ன சொல்கிறது என்று பிறகு பார்ப்போம்.

கடந்த கடிதத்தில், பைபிளின் தேவன் எப்படி அடிமைப்பெண்கள் கற்பழிக்கப்படக்கூடாது என்பதில் கவனம் செலுத்தினார் என்பதையும், ஒரு யூதன் எப்படி இப்படிப்பட்ட நிலையில் நடந்துக்கொள்ளவேண்டும் என்பது பற்றியும் விளக்கினேன். இப்போது நீ பின்பற்றும் மார்க்கம் என்ன சொல்கிறது என்பதை மேற்கண்ட விவரங்களின் அடிப்படையில் சுருக்கமாக காண்போம்.

**1) ஒரு முஸ்லிம்** திருமண பந்தத்திற்கு வெளியே உடலுறவு கொள்ளலாம்.

**2) அடிமைப்பெண்களை அவன்** திருமணம் செய்துக்கொள்ளாமல் ஒரு வைப்பாட்டியாக வைத்திருக்கலாம். இதற்கு எண்ணிக்கை இல்லை, நீ எவ்வளவு பணக்காரனாக இருக்கிறாயோ, அதைப் பொருத்து எண்ணிக்கை மாறும், விலை கொடுத்து எத்தனை பேரையாவது வைத்துக்கொள்ளலாம்.

**3) அடிமைப்பெண் தன் குடும்ப நபர்களை** நினைத்து துக்கம் கொண்டாட 30 நாட்கள் ஒரு யூதன் ஒதுக்குவது போல, ஒரு முஸ்லிம் ஒதுக்கத் தேவையில்லை. அந்தப் பெண்ணின் மாதவிடாய் நின்று போனால், ஒரு முஸ்லிம் அவளை கற்பழிக்கலாம்.

**4) ஒரு முஸ்லிம் அடிமைப்பெண்களை அனேக நாட்கள் கற்பழித்துவிட்டு**, பிறகு அவளை மறுபடியும் விற்கலாம், இன்னொரு முஸ்லிம் அவளை வாங்கி அவனும் மறுபடியும் கற்பழிக்கலாம். அவளின் வாழ்க்கை ஒரு விபச்சாரியின் வாழ்க்கையைவிட கேவலமானதாக மாறிவிடுகிறது, இதற்கு காரணம் அல்லாஹ்வும், முஹம்மதுவும் தான். ஆனால், பைபிளின் தேவன் அப்பெண்ணுக்கு திருமணத்தை முதலில் தருகிறார், பிறகு அவளை அந்த யூதன் விரும்பவில்லையானால் விடுதலையாக அவளை அனுப்பிவிட கூறுகிறார், மறுபடியும் அவளை விற்க அவனுக்கு உரிமை இல்லை.

**5) முஹம்மதுவின் அடிமைப்பெண்களை வைத்திருந்தார்**, அவரது மருமகனும், தோழர்களும் இந்த கொடுமையான செயலை பெண் இனத்திற்கு எதிராக செய்துவந்தனர்.

**6) அடிமைப் பெண்களை ஒரு போகப்பொருளாக பார்த்து**, அவர்களின் வாழ்வை சீரழிக்கும் படி இஸ்லாமிய மார்க்கம் சொல்கிறது. ஆனால், இஸ்லாமுக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பாக வந்த பைபிளின் கட்டளைகளோ அப்பெண்களுக்கு ஒரு புதிய வாழ்வையும், மகிழ்ச்சியையும் தருகிறது, மனைவி என்ற ஸ்தானத்தைத் தருகிறது, கடைசியாக அவளை விடுதலைச் செய்கிறது. யெகோவா தேவன் எங்கே, அல்லாஹ் எங்கே, ஓ இவ்விருவரும் ஒருவரல்ல, இவர்கள் நேர் எதிர் துருவங்கள், எக்காலத்திலும் அல்லாஹ் யெகோவா தேவன் ஆகமுடியாது.

தம்பி இதுவரை இஸ்லாமிய நூல்களிலிருந்து ஒரு சில விவரங்களை உனக்கு கூறினேன். நான் குர்-ஆனைலிருந்தும், ஹதீஸ்களிலிருந்தும் மேற்கோள்களை காட்டினேன்.

தம்பி, நீ நினைப்பது போல, **இஸ்லாம் ஒரு நல்ல மார்க்கமன்று,** ஒரு மார்க்கத்தை அதன் கனிகள் மூலம் அடையாளம் காணலாம். இந்த கடிதத்தில் நான் விளக்கியது, இஸ்லாமிய மரத்தின் ஒரு கனியாகும். இஸ்லாமை அதன் கனி மூலம் அறியலாம், நீ படித்தவன், அறிவுள்ளவன், எனவே சிந்தித்துப் பார். நான் சொல்லியவைகளில் தவறு இருந்தால் எனக்கு தெரிவி, நான் உனக்கு அதற்கான பதிலை எழுதுவேன். ஆனால், சத்தியத்தை முதலாவது நீ அறிந்துக்கொள், அது உன்னை நிச்சயமாக விடுதலையாக்கும்.

அதிகமாக எழுதிவிட்டேன் என்று நினைக்கிறேன், அடுத்த கடிதத்தில் சந்திப்போம்.

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

## நாள் 25 - ஆபிரகாமின் குர்பானியும் இயேசுக் கிறிஸ்துவும்

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* ***இங்கு*** *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு,*

*உனக்கு சமாதானம் உண்டாகட்டும்.*

*தம்பி, உன் பதில் கடிதங்களை பார்க்கும் போது உன் வாழ்க்கையில் மாற்றம் ஏற்பட்டு வருவதை உணர்கிறேன், எனக்கு மிகவும் சந்தோஷமாகவுள்ளது. எம்மை படைத்த நாயன் அவருடைய தூதர்கள் (மலக்குகள்) முன் உன் மனந்திரும்புதலை எதிர்பார்த்து எப்படி காத்திருப்பார் என்பதை சற்று சிந்தித்துப் பார்.*

*இந்த கடிதத்தில் ஆபிரகாம் (இப்ராஹிம்) கொடுத்த குர்பானி பற்றி உன்னுடன் உரையாட விரும்புகிறேன்.*

### 1) ஆபிரகாமும் குர்பானியும்

*ஆபிரகாமின் மனைவி தனது முதிர்வயதில் இறைவனின் வார்த்தையின் படி குழந்தையை பெற்றெடுக்கிறாள். அந்த குடும்பத்தில் ஏற்பட்ட சந்தோஷத்தை வார்த்தைகளில் வர்ணிக்கமுடியாது. காலங்கள் உருண்டோடின. இந்த விசுவாசத்தின் தந்தைக்கு இறைவன் ஒரு சோதனையை வைக்கிறார். அதாவது தன் உயிரிலும் மேலாக நேசித்த தன் அன்பு மகனை தனக்காக குர்பானி (பலி) கொடுக்குமாறு இறைவன் கட்டளையிடுகிறார்.*

*இறைவனின் மேல் முழு நம்பிக்கை வைத்திருந்த ஆபிரகாம், தன் உயிருக்குயிரான மகனைவிடவும் அதிகமாக இறைவனை தான் நேசிக்கிறேன் என்பதை உறுதிப்படுத்த மகனை பலி (குர்பான்) கொடுக்க ஆயத்தமாகிறான். கத்தியை ஓங்கும் போது, இறைவன் ஆபிரகாமை தடுத்து ஒரு ஆட்டை கொடுத்து தன் மகனுக்கு பதிலாக அந்த ஆட்டை பலியிடுமாறு கூறுகிறான்.*

*தம்பி, நீ பலியை பற்றி படித்த பாடங்களை மறந்திருக்க வாய்ப்பில்லை. என்றாலும் இன்னும் நீ குர்பானி ஹகீகா போன்ற பேர்களில் பலி கொடுத்துகொண்டுதான் இருக்கிறாய். உன் இஸ்லாமிய நண்பர்களிடம் இதற்கு நீ விளக்கம் கேட்டால். "ஆபிரகாமின் மேற்கண்ட நிகழ்ச்சியை கூறி, மேலும் முஹம்மது நபி சொன்னார் நாங்கள் செய்கிறோம்" என்று அவர்கள் சொல்வார்கள். ஆனால், அதன் அர்த்தம் அவர்களுக்கு தெரிவதில்லை. இந்த பலிகளை செலுத்தி வெறுமனே இறைச்சி சாப்பிடுவது மட்டும் தான் அவர்களுக்கு தெரியும். ஆபிரகாமின் மகனை பலியிடுவதிலிருந்து தடுத்த இறைவன் அப்படியே விட்டிருக்கலாம், ஆனால், ஒரு ஆட்டை காண்பித்து, அவனுக்கு பதிலாக இந்த ஆட்டை குர்பானி கொடு என்று ஏன் கூறவேண்டும்?*

### 2) இறைவனிடம் நெருங்குவதற்கான வழி எது?

*பலிகளை நாங்கள் எதற்காக கொடுக்கிறோம்? இறைவன் இதில் எங்களுக்கு கற்பிக்கும் படிப்பினை என்ன? பலிகொடுக்கும் முறை எங்கு தோன்றியது. முந்தைய நபிமார்கள் எதற்காக கொடுத்தார்கள்? எனும் கேள்விகளை கேட்டால் "அல்லாஹ் மட்டும் தான் அறிவான்" எங்களுக்கு தெரியாது. முஹம்மது நபி சொன்னதை நாங்கள் செய்வோம் என்பதுதான் இஸ்லாமியரின் பதிலாக இருக்கும். ஆனால் நீ அப்படி தக்லீது (கண்மூடித்தனமாக பின்பற்றுதல்) செய்ய மாட்டாய் என்று நினைக்கிறேன்.*

***குர்-ஆனில் கீழ்கண்ட விதமான ஒரு வசனம் உள்ளது:***

*நம்பிக்கைகொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள்! அவனை நோக்கி ஒரு வஸீலாவைத் தேடிக் கொள்ளுங்கள்! (குர்ஆன் 5:35 பீஜே குர்ஆன்)*

*இந்த மொழிபெயர்ப்பை வாசித்துவிட்டு வஸீலா எனும் வார்த்தையை தமிழ் அகராதியில் தேடினேன் ஆனால் கண்டுபிடிக்க முடியவில்லை. பிறகு அப்துல் ஹமீத் பாகவியின் தமிழ் குர்ஆனை எடுத்து பார்த்தேன்.*

"நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வை அஞ்சுங்கள். அவனிடம் செல்வதற்குரிய வழியைத் தேடிக் கொள்ளுங்கள்." (5:35 அப்துல் ஹமீத் பாகவி குர்ஆன்)

இப்பொழுதுதான் புரிந்தது. அதாவது விசுவாசிகளே! இறைவனுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள். அவர்பால் நெருங்குவதற்குரிய வழியை தேடிக் கொள்ளுங்கள் என்று தான் இந்த வசனம் சொல்கிறது.

தம்பி, குர்ஆன் இறைவனிடம் நெருங்குவதற்குரிய வழியை தேடிக் கொள்ளுங்கள் என்று சொன்னாலும். இஸ்லாமிய போதனை மனிதன் இறைவனை நெருங்கமுடியாது என்றுதான் போதிக்கிறது. மேலும் இறைவனை நெருங்குகிற வழியை குர்ஆனோ ஹதீஸ்களோ தெளிவாக காட்டவில்லை எனும் உண்மையை நீ அறியவேண்டும். அப்படியானால் குர்ஆனில் ஏதும் சந்தேகம் வந்தால் வேதம் கொடுக்கப்பட்டவர்களிடம் கேட்குமாறுதானே குர்ஆன் சொல்கிறது.

## 3) உலகம் முழுவதுக்கும் ஒரே குர்பான்(பலி)

தம்பி, நான் உனக்கு எழுதும் கடிதங்களை உனது இஸ்லாமிய நண்பர்களும் வாசிப்பதாக, நீ எனக்கு எழுதிய ஒரு பதில் கடிதத்தில் இகுறிப்பிட்டிருந்தாய். அதனால் இறைவனை கிட்டிச்சேறும் வழியை அவர்களுக்கு புரியும் தமிழிலேயே எழுதுகிறேன்.

ஆதம் அவர்களும் அவ்வா (ஏவாள்) அவர்களும் இறைவனோடு மிகவும் நெருங்கிய உறவு வைத்திருந்தனர். அதனை தகப்பன் பிள்ளைகள் உறவோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். இறைவன் அவர்களுக்கு முழு சுதந்திரத்தையும் கொடுத்திருந்ததோடு ஒரு கட்டளையையும் போட்டிருந்தான். அதாவது தோட்டத்திலுள்ள சகல மரங்களின் கனிகளையும் புசிக்கலாம் ஆனால் தோட்டத்தின் நடுவிலுள்ள நன்மை தீமை அறியத்தக்க மரத்தின் கனியை மாத்திரம் சாப்பிட வேண்டாம் என்பதாகும். ஆதம் அவ்வா இருவரும் ஆடைகள் அணிந்திருக்க வில்லை. அது அவர்களுக்கு வெட்கமாக இருக்கவில்லை.

- ஒரு நாள் சைத்தான் ஏவாள் அவர்களிடம் வந்து இறைவன் இந்த தோட்டத்திலுள்ள எந்தவொரு மரத்தின் கனியையும் சாப்பிடவேண்டாம் என்று சொன்னாரா? என்று கேட்டான். அதற்கு ஏவாள் அவர்கள் "இல்லை இந்த ஒரு மரத்தின் கனியை மாத்திரம் சாப்பிடவோ தொடவோ வேண்டாம் என்றார்" என்று பதிலளித்தார். "அந்த மரத்தின் கனியை சாப்பிட்டால் நீங்களும் இறைவனைப்போன்று மாறிவிடுவீர்கள்; என்று ஆசைக்காட்டினான் சைத்தான். அவனின் ஆசைவார்த்தைகளுக்கு வஞ்சிக்கப்பட்ட ஏவாள் அவர்கள் தடைசெய்யப்பட்ட மரத்தின் கனியைச் சாப்பிட்டு தன் கணவருக்கும் கொடுத்தார்கள்.
- இறைவன் அவர்களோடு உறவாட வந்தபோது அவர்கள் இருவரும் ஒளிந்துக் கொண்டார்கள். "ஆதம் நீ எங்கே இருக்கிறாய்" என்று இறைவன் கேட்க " நாங்கள் ஆடையில்லாமல் இருக்கிறோம் உம்முடைய சந்நிதிக்கு வர முடியாமலிருக்கிறோம்" என்று ஆதம் பதிலளித்தார். "நீங்கள் நிர்வாணமாயிருப்பதை எப்படி அறிந்துகொண்டீர்கள்" என்று இறைவன் கேட்டு, நான் புசிக்காதீர்கள் என்றுச் சொன்ன மரத்தின் கனிகளை புசித்திர்களா? என்று கேட்டார்.
- • உலகத்தின் முதல் மனிதர்கள் இருவரும் இறைகட்டளையை மீறியது அவர்களுக்கும் முழு உலகத்துக்கும் பாவமாக கருதப்பட்டது. இறைவனோடு மனிதனுக்கிருந்த உறவு உடைந்தது. அதன் பிறகு பிறக்கின்ற ஒவ்வொரு பிள்ளையும் பாவத்திலேயே பிறக்கின்றது. இறைவனோடு சரியான உறவு இருந்தபோது சந்தோஷமாகவும் நிம்மதியாகவும் இருந்த ஆதமின் குடும்பம் பிரச்சினைகளையும் துன்பங்களையும் சந்திக்க நேர்ந்தது.

இன்று நம்மில் பலருக்கு குர்பான் (பலியிடுதல்) என்றால் என்னவென்றே தெரியாது. வெறுமனே மாட்டை அறுத்து சாப்பிடுவது என்று நினைத்துக் கொண்டிருக்கின்றனர். உண்மையில் குர்பான் என்பது பாவ நிவாரணப் பலியாகும். குர்பான் இல்லாமல் பாவமன்னிப்பு இல்லை என்பது மனித

சரித்திரத்தை சரியாக அறிந்த யாவருக்கும் புரியும்.

இறைவனின் திட்டம் மனிதனின் பாவத்தை மன்னிப்பது மாத்திரமல்ல உடைந்த உறவை மீண்டும் புதுப்பிப்பதாகும். அதாவது இறைவன் மனிதனை படைத்தது தன்னோடு உறவாடுவதற்காகவேயாகும். இதுவே உண்மையான தொழுகையாகும்.

• ஒரு நபருக்கு ஒரு குர்பான்.

• ஒரு குடும்பத்திற்கு ஒரு குர்பான்.

• ஒரு சமுதாயத்திற்கு ஒரு குர்பான்.

• கடைசியாக முழு உலகுக்கும் ஒரு குர்பான்.

தம்முடைய முந்தைய நபிகள் முலமாக பலியைப் பற்றி அனேக கட்டளைகளை இறைவன் கொடுத்துள்ளார், அதனை ஈஸா அல்-மஸீஹ் மூலமாக முற்றுப்புள்ளி வைத்தார். இனி தனி மனிதனுக்காகவும், குடும்பத்துக்காகவும் பலியிடவேண்டிய அவசியமில்லை. முழு உலகத்துக்கும் குர்பானி செலித்தியாகிவிட்டது.

என் அன்பு தம்பி,

முழு உலகத்திற்காக இறைவன் கொடுத்த குர்பான் தான் "இறைவனிடம் மனிதர்கள் நெருங்குவதற்கான வழியாகும்".

இறைவன் தனது வார்த்தையை (கலிமா) மரியம் மூலமாக உலகிற்கு வெளிப்படுத்தினார். இவ்வுலகில் வாழும்போது இறை வார்த்தைக்கு இடப்பட்ட பேர் ஈஸா அல் மஸீஹ் என்பதாகும். பாவமறியா பரிசுத்தரான ஈஸா அல்-மஸீஹ் முழு உலகிற்கும் பாவதோஷம் நீங்க பலியானார் (குர்பானானார்).

எவனொருவன் தன் பாவத்திற்காக ஈஸா அல்-மஸீஹ் குர்பானானார் என்பதை நம்பிக்கை கொள்கிறானோ அவன் வாழ்க்கையில் இறைவனோடுள்ள உறவு புதுபிக்கப்படுகிறது. அவன் ஆதமைப் போன்று அல்லாஹ்வோடு பேசும்; பாக்கியத்தை பெறுகிறான்.

தம்பி நீ மீண்டும் இந்த பாக்கியத்தை பெறவேண்டும் என்றுதான் நான் இத்தனை கடிதங்களை உனக்கு எழுதுகிறேன். யோவான் 3:16 உனக்காகவும் உனது இஸ்லாமிய நண்பர்களுக்காகவும் தான் எனும் உண்மையை எந்தவொரு சக்தியாலும் மாற்ற முடியாது.

அடுத்த கடிதத்தில் தொடர்வோம்.

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்

மூலம்

உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்

---

## நாள் 26 - இன்னும் விடுதலையாகாத மனிதன் யார்? அடிமையாக இருக்கும் மனிதன் யார்?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

இன்று ஆகஸ்ட் 15, அதாவது இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைத்த நாள். கடந்த 66 ஆண்டுகளாக நாம் சுதந்திர காற்றை சுவாசித்துக்கொண்டு இருக்கிறோம். சுதந்திரத்தின் விலை என்னவென்று உனக்குத் தெரியுமா? குறைந்தபட்சம் சுதந்திரத்தின் முக்கியத்துவம் எவ்வளவு பெரியது என்று உனக்குத் தெரியுமா தம்பி.

நான் மேலை நாட்டு மக்களை பார்க்கும் போது, அவர்கள் அளவுக்கு அதிகமாக சுதந்திரத்தை அனுபவிப்பவர்களாக காண்கிறேன். அதே நேரத்தில் இஸ்லாமியர்களை காணும் போது, "சுதந்திரத்தின் வாசனையை கூட இவர்கள் சுவாசிக்காதவர்கள்" என்று எண்ணத்தோன்றுகிறது. அதாவது முஸ்லிம்கள் எந்த நாட்டில் வாழ்ந்தாலும் சரி, அவர்கள் இன்னும் அடிமைகளாகவே இருப்பதாக காண்கிறேன். மேலை நாட்டவர்கள் சுதந்திரத்தை அளவுக்கு அதிகமாக தவறாக பயன்படுத்துகின்றனர். ஆனால், இஸ்லாமியர்களுக்கோ, அதன் வாசனையும் இன்னும் காட்டப்படவில்லை. என்னடா அண்ணன் குழப்புகிறானே என்று பார்க்கிறாயா? உனக்கு நான் தெளிவாக விளக்குகிறேன், சுந்திரமாக படித்துக்கொள்.

உனக்கு மூன்று வகையான சுதந்திரம்பற்றி நான் கூறப்போகிறேன். இதில் மூன்றாவதாக சொல்லப்போகும் சுதந்திரம் தான் உன்னை அதிகமாக சிந்திக்கச் செய்யும் என்று நம்புகிறேன்.

1) நாட்டு சுதந்திரம்

2) மத சுதந்திரம்

3) ஆன்மீக சுதந்திரம் (அ) உள்ளான சுதந்திரம்

---

## 1) நாட்டு சுதந்திரம்:

முதலாவதாக, நாட்டு சுதந்திரம் பற்றி பார்ப்போம், நம் நாடு ஆங்கிலேயர்களிடமிருந்து 1947ம் ஆண்டு சுதந்திரம் அடைந்தது. நம்மை நாமே ஆட்சி செய்துக்கொண்டு வாழ்ந்துக்கொண்டு இருக்கிறோம். சிலர் "அரசியல் வாதிகளிடம் மாட்டிக்கொண்டு இருக்கிறோமே, எங்கே சுதந்திரம் கிடைத்தது" என்று வேதனைப்பட்டுக்கொண்டு இருப்பார்கள், உண்மை தான், ஆனால், மற்ற நாட்டுக்காரனிடமிருந்து விடுதலை கிடைத்ததே, இதுவே மிகப்பெரிய சுதந்திரம். ஆக, இந்தியாவில் வாழும் அனைவருக்கும், மத பாகுபாடு இன்றி நாட்டு சுதந்திரம் கிடைத்துள்ளது.

## 2) மத சுதந்திரம் (முஸ்லிம் ஒரு அடிமையாவான்):

கிறிஸ்தவனுக்கும், இந்துவிற்கும் மத சுதந்திரம் உண்டு, ஆனால் ஒரு முஸ்லிமுக்கு மத சுதந்திரம் இல்லை. இந்திய மக்கள் எந்த மதத்தையும் பின்பற்றலாம் என்று அரசியல் சாசனம் சொல்கிறது இது ஒரு பக்கம் இருக்கட்டும். ஆனால், தனிப்பட்ட முறையில் ஒரு இஸ்லாமிய குடும்பத்தில் பிறந்த முஸ்லிமுக்கு தன் மதத்தை விட்டு வெளியே வந்து தனக்கு பிடித்தமான மார்க்கத்தை பின்பற்ற அனுமதியில்லை. அரசு அனுமதித்தாலும், இஸ்லாமிய மார்க்க அறிஞர்கள், மக்கள் அனுமதிப்பதில்லை.

எனவே, முஸ்லிம் மத சுதந்திரம் கிடைக்காத ஒரு அடிமையாக இருக்கிறான். பேச்சுக்காக அப்படியெல்லம் ஒன்றுமில்லை என்று இஸ்லாமிய அறிஞர்கள் கூறினாலும், உண்மையில் இஸ்லாமிலிருந்து வெளியே வரும் மக்கள் சந்திக்கும் இன்னல்கள், துன்பங்கள், பயமுறுத்தல்கள், கொலை மிரட்டல்கள் கொஞ்ச மல்ல. இஸ்லாமிய நாடுகளில் இஸ்லாமை விட்டு வெளியேறியவர்களை கொலை செய்யும் சட்டமும் உண்டு. இதனை அவ்வப்போது செய்தித்தாள்களில் நாம் காணலாம். எனவே, ஒரு முஸ்லீமுக்கு மத சுந்திரம் இல்லை என்பது எழுதப்படாத சட்டமாகும். எனவே, தம்பி, நீயும் ஒரு அடிமை என்பதை மனதில் வைத்துக்கொள். நீ இன்னும் சுதந்திரம் அடையவில்லை என்பதை புரிந்துக்கொள்.

## 3) ஆன்மீக சுதந்திரம் (அ) உள்ளான சுதந்திரம்:

தம்பி, உலகத்தில் இருக்கும் இஸ்லாமியர்களை காணும் போது, அவர்கள் ஆன்மீக சுதந்திரம் அல்லது உள்ளான சுதந்திரம் அடையாமல் இருப்பதை காணமுடிகிறது. அது என்ன உள்ளான சுதந்திரம் என்று கேட்கிறாயா? மேற்கொண்டு படி உனக்கு புரியும்

### 3.1) இஸ்லாமை விமர்சிப்பவனை கொலை செய்ய துடிக்கும் அடிமைத்தனம்:

*இன்று உலக அளவில் நாம் காணும் போது, எந்த நாட்டிலாவது யாராவது இஸ்லாமை விமர்சித்து விட்டால் உடனே உலக இஸ்லாமியர்கள் தங்கள் எதிர்ப்பை தெரிவிப்பார்கள். தங்கள் மார்க்கம் பற்றி விமர்சித்தால் அதற்கு அமைதியான முறையில் எதிர்ப்பு தெரிவிப்பது தவறானது அல்ல. ஆனால், அப்படி எதிர்ப்பு தெரிவிப்பதோடு மட்டும் நின்றுவிடாமல், "விமர்சிப்பவர்கள் சாகவேண்டும்" என்று இஸ்லாமியர்கள் சொல்கிறார்கள். ஆக எந்த ஒரு முஸ்லிமானவது "தன் மார்க்கத்தை விமர்சிப்பவன் சாகவேண்டும்" என்று குரோதம் கொண்டு சொல்கிறானோ, அவன் இன்னும் அடிமைத் தனத்தில் இருப்பவன் என்று அர்த்தமாகும். அதாவது அவன் இன்னும் உள்ளான சுதந்திரம் அடையவில்லை, அல்லது ஆன்மீக சுதந்திரம் அடையவில்லை. அவன் குரோதம் அல்லது மதவெறி என்ற பாவத்தில் அல்லது அடிமைத் தனத்தில் சிக்கியுள்ளான். அவன் இன்னும் விடுதலை அடையவில்லை.*

### 3.2) *வெறுப்புணர்ச்சி, குரோதம், பழிவாங்க வேண்டும் என்ற அடிமைத் தனம்:*

*ஒரு மனிதன் தன் மார்க்கத்தை காரணமில்லாமல் விமர்சிக்கும் போது, அவனுக்கு எதிராக ஆர்ப்பாட்டம் நடத்தி, அவன் மன்னிப்பு கேட்கும் படி செய்துவிட்டு கடந்துச் சென்றுவிட்டால், ஒரு பிரச்சனையும் இல்லை. ஆனால், முஸ்லிம்களின் நிலை இந்த வகையில் இருப்பதில்லை. அவர்கள் பழி வாங்க துடிக்கிறார்கள், விமர்சித்தவன் சாகவேண்டும் என்று வெளிப்படையாக பானர்கள் எழுதி உலகிற்கு தங்கள் வெறுப்பை காட்டிக்கொள்கிறார்கள். இது நமக்கு எதைக் காட்டுகிறது? அவர்கள் இன்னும் "வெறுப்புணர்ச்சி, குரோதம், பழிவாங்க வேண்டும் என்ற துடிப்பு" போன்றவைகளுக்கு இன்னும் அடிமையாக இருக்கிறார்கள் என்பதைக் காட்டுகிறது.*

*ஆனால், இதே இஸ்லாமியர்கள் சொற்பொழிவு ஆற்றும் போது பார்த்தால், வெறுப்புணர்ச்சி, குரோதம், மற்றும் பழிவாங்குதல் என்பது சாத்தானின் செயல்களாகும், இவைகளை நாம் செய்யக்கூடாது என்றுச் சொல்வார்கள், எழுதுவார்கள். ஆனால், உண்மையில் தங்கள் மார்க்கத்தை யாராவது விமர்சித்தால், இவர்கள் தங்கள் சொல்லுக்கு நேர் எதிராக காணப்படுவார்கள். ஏன் இப்படி நடந்துக்கொண்டு இருக்கிறார்கள் என்று நாம் கவனித்தால், அவர்கள் இன்னும் விடுதலை அடையவில்லை அதாவது அவர்களின் உள்ளான மனுஷன் இன்னும் விடுதலை அடையவில்லை என்பது தெளிவாக புரியும். அவர்கள் இன்னும் புதிய மனுஷனாக மாறவில்லை, புதிய சிருஷ்டியாக மாறவில்லை என்பது புலனாகும்.*

### 3.3) *கிறிஸ்தவர்களின் உள்ளான மனுஷனின் விடுதலை:*

*இஸ்லாமியர்களுக்கு நடப்பது போல, கிறிஸ்தவர்களுக்கும் நடக்கிறது, அதாவது கிறிஸ்தவத்தை அனேகர் விமர்சிக்கின்றனர், புத்தகம் எழுதுகின்றனர், மேடைகளில் பேசுகின்றனர், மட்டுமல்ல படங்களும் எடுக்கின்றனர். ஆனால், கிறிஸ்தவ உலகம் இதனை எப்படி எதிர்க்கொள்கிறது?*

*அ) உலக கிறிஸ்தவ மக்கள், தங்கள் எதிர்ப்பை ஆய்வுக் கட்டுரைகளாக எழுதி செய்தித்தாள்களில் மறுப்பு எழுதுகின்றனர். விமர்சிப்பவர்களின் அறியாமையை உலகிற்கு எடுத்துக்காட்டி அவர்களின் வாயை அமைதியான முறையில் அடைக்கின்றனர்.*

*ஆ) மறுப்பு புத்தகங்களாக எழுதி வெளியிடுகின்றனர்.*

*இ) தங்கள் எதிர்ப்பை ஊர்வலமாக வந்து வெளிப்படுத்துகின்றனர்.*

*ஈ) இன்னும் ஒரு படி மேலே சென்று, விமர்சிப்பவரோடு விவாதம் புரிந்து, உண்மையை உலகிற்கு காட்டுகின்றனர்.*

*ஆனால், எந்த காரணத்தைக் கொண்டும், "கிறிஸ்தவத்தை விமர்சிப்பவர், கொலை செய்யப்படவேண்டும், சாகவேண்டும், கொடுமைப் படுத்தப்படவேண்டும்" என்று கிறிஸ்தவர்கள் சொல்வதில்லை, ஏனென்றால் கிறிஸ்தவர்கள் உள்ளான விடுதலை உடையவர்கள், அதாவது அவர்கள் "வெறுப்புணர்ச்சி, குரோதம், பழிவாங்கும் எண்ணம்" என்ற தீய குணங்களை வென்றவர்கள்.*

- *தாங்கள் உயிரினும் மேலாக மதிக்கும் இயேசுவை விமர்சிப்பவன் சாகவேண்டும் என்று விரும்பமாட்டார்கள்.*

• *தங்கள் பைபிளை விமர்சிப்பவன் சாகவேண்டும்* என்று பெரிய பலகைகளில் எழுதிக்கொண்டு, அவைகளை காட்டிக்கொண்டு புகைப்படங்களுக்கு போஸ் கொடுக்கமாட்டார்கள்.

• *இயேசுவின் சீடர்கள் பற்றி தப்பு தப்பாக விமர்சிப்பவர்கள்*, கேலி செய்பவர்கள் கொலை செய்யப்படவேண்டும் என்று எந்த ஒரு கிறிஸ்தவனும் பத்வா (சட்டம்) கொடுக்கமாட்டான்.

• *1999ம் ஆண்டு தன் வாகனத்தில் தூங்கிக்கொண்டு* இருந்த கிரஹாம் ஸ்டுவர்ட் ஸ்டேயின்ஸ் என்ற மிஷனரியையும், அவரது இரண்டு மகன்களையும் இந்துத்துவ நண்பர்கள் தீ வைத்து கொளுத்திவிட்டனர். இந்த கிறிஸ்தவ ஊழியரின் மனைவி கிளாடி ஸ்டெயின்ஸ், தன் கணவரையும், பிள்ளைகள் இருவரையும் கொன்றவர்களை மன்னித்துவிட்டதாக அறிவித்தார். இப்படிப்பட்ட மன்னிக்கும் குணம் எப்படி இவருக்கு வந்தது? இதற்கு பதில், "அவர் உண்மையாகவே விடுதலை அடைந்தவராக இருப்பதினால், இவ்வித செயலில் ஈடுபட்டவர்களையும் மன்னித்துவிட்டார்".

கிறிஸ்தவன் முழுவதுமாக விடுதலை அடைந்தவன், ஆனால், ஒரு முஸ்லிம் இன்னும் அடிமைத் தனத்தில் இருப்பவன், எனவே தான் இஸ்லாமை விமர்சிப்பவர்கள் சாகவேண்டும் என்று பத்வா கொடுத்துக்கொண்டும், சபித்துக்கொண்டும் இருக்கின்றான்.

தம்பி, நீ விடுதலை அடைந்துள்ளாயா? அதாவது உன்னுடைய உள்ளான மனுஷன் விடுதலை அடைந்துள்ளானா? இதனை எப்படி நான் அறிவேன் என்று நீ என்னிடம் கேட்கலாம். அதற்கு பதில் இது தான், அதாவது யாராவது குர்-ஆனை எரித்துவிட்டார் என்றும், முஹம்மது பற்றி கேலியாக பேசிவிட்டார் என்றும் நீ கேள்விப்படும் போது உன் மனதில் அப்போது தோன்றும் எண்ணம் எவ்வாக இருக்கிறது? "இப்படிப்பட்ட செயலைச் செய்தவன் சாகவேண்டும்" என்று உன் உள்ளம் சொல்கிறதா? அல்லது "அவன் மன்னிப்பு கேட்டால் போதும் என்று சொல்கிறதா?". அவன் சாகத்தான் வேண்டும் என்று உன் உள்ளம் சொன்னால், "நீ இன்னும் விடுதலை அடையவில்லை என்று அர்த்தம், சாத்தானுடைய குணம் உன்னில் காணப்படுகிறது என்று அர்த்தம், இறைவனின் குணமாகிய மன்னிக்கும் சுபாவம் உன்னிடம் இல்லை என்று அர்த்தம், மொத்தத்தில் நீ பாவத்திற்கு அடிமை என்று அர்த்தம்".

ஆனால், இதே நிலை கிறிஸ்தவனுக்கு நேர்ந்தால், அவன் உள்ளமும் துடிக்கும், துக்கம் அடையும், இஸ்லாமியர்களுக்கு செய்வது போலவே சாத்தான் அவன் உள்ளத்தில் அப்படிப்பட்டவனை சபிக்கச் சொல்லுவான், சாகவேண்டும் என்று சொல்லச்சொல்லுவான். ஆனால், வேதத்தை அந்த கிறிஸ்தவன் படிப்பதினாலும், பரிசுத்த ஆவியானவர் அவன் உள்ளத்தில் இருப்பதினாலும், கிறிஸ்துவின் அன்பு அவன் உள்ளத்தில் ஊற்றப்பட்டு இருப்பதினாலும், அவன் எல்லா தீய எண்ணங்களை ஜெயித்து, விமர்சிப்பவன் மனந்திரும்ப வேண்டும் என்று ஜெபிப்பான், நிச்சயமாக அவன் சாகவேண்டும் என்று கருதமாட்டான்.

உங்கள் எதிர்களை நேசியுங்கள், அவர்களுக்காக ஜெபியுங்கள் என்ற வார்த்தைகள் அவன் உள்ளத்தில் பதிந்து இருப்பதினால், அவன் ஜெபத்தில் தன் உள்ள குமுறல்களை கொட்டிவிட்டு, மன நிம்மதி அடைவான், கடைசியாக, யுத்தம் கர்த்தருடையது, நாம் ஒன்றும் செய்யக்கூடாது என்பதை நினைத்து, அவனை மன்னித்துவிடுவான். இப்படியெல்லாம் ஏன் கிறிஸ்தவன் செய்கிறான் என்று பார்த்தால், அவன் ஒரு புதிய மனிதனாக இருக்கிறான், புதிய சிருஷ்டியாக இருக்கிறான், அவனது உள்ளான மனுஷன் விடுதலையாகி இருப்பதினால் கிறிஸ்தவன் எல்லாவற்றையும் தேவனது சந்நிதியில் சொல்லிவிட்டு, விடுதலையோடு வாழுகின்றான்.

இந்த விடுதலை ஒரு முஸ்லிமுக்கு கிடைப்பதில்லை, எனவே தன் வேதனையை கோபமாக குரோதமாக வெளிக்காட்டி, பழிவாங்க துடிக்கிறான்.

தம்பி, இப்போது எனக்குச் சொல், நீ இந்த மேற்கண்ட சூழ்நிலையில் அகப்படும் போது என்ன நினைக்கிறாய்? பழிவாங்க துடிக்கிறாயா? விமர்சிப்பவன் சாகவேண்டும் என்று துடிக்கிறாயா? அல்லது மன்னித்து விடுகிறாயா? வெறும் வார்த்தைகளில் "இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம் என்றுச் சொல்வதல்ல, அதனை செயலில் காட்ட முஸ்லிம்களுக்கு பொறுமையுள்ளதா? இந்த பொறுமையை குர்-ஆன் கற்றுக்கொடுத்துள்ளதா? முஹம்மது கற்றுக்கொடுத்துள்ளாரா?" முஸ்லிம்கள் சிந்திக்கவேண்டும்.

*தம்பி இதோடு நான் முடிக்கிறேன், குமாரன் உன்னை விடுதலையாக்கினால் நீ உண்மையாகவே விடுதலை ஆவாய். கர்த்தருடைய ஆவி எங்கே இருக்குமோ, அங்கே விடுதலை இருக்கும். நீ சத்தியத்தை அறியும் போது, அந்த சத்தியம் உன்னை விடுதலையாக்கும்.*

*தம்பி, நான் விடுதலையோடு இருக்கிறேன், நீ விடுதலையோடு இருக்கிறாயா? உன் உள்ளான மனுஷன் விடுதலையோடு இருக்கின்றானா? உன் இஸ்லாமிய நண்பர்கள் விடுதலையோடு இருக்கிறார்களா?*

*இந்திய சுதந்திர நாளாகிய இன்று, நீ உள்ளான மனுஷனில் விடுதலை அடைய நான் வேண்டிக்கொள்கிறேன்.*

*விடுதலை நாயகன் இயேசுக் கிறிஸ்து உனக்கு விடுதலையை அளிப்பாராக.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்,*

*இப்படிக்கு, உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்.*

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## *நாள் 27 - இஸ்லாமின் மற்றும் கிறிஸ்தவத்தின் கண்ணியமிக்க இரவுகள்*

*['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* ***இங்கு*** *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*உன் கடிதம் கண்டேன், அதில் கண்ணியமிக்க இரவு பற்றி நீ சில விவரங்களை கூறியிருந்தாய். அதாவது இந்த இரவில் நம் கடந்த கால பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன, மேலும் இது 1000 மாதங்களை காட்டிலும் மேன்மையானது, இந்த இரவில் தான் குர்-ஆன் இறங்கியது என்றும் கூறினாய்.*

*உன் கடிதத்தில் நீ கூறிய கண்ணியமிக்க இரவு பற்றி சில விவரங்களை படித்தேன், மேலும் உனக்கு இன்னொரு கண்ணியமிக்க இரவைப் பற்றி எழுதலாம் என்று விரும்புகிறேன். மட்டுமல்ல, இவ்விரு கண்ணியமிக்க இரவுகளை ஒப்பிட்டு சில விவரங்களை உனக்கு எழுதலாம் என்று தீர்மாணித்தேன்.*

### 1) இஸ்லாமின் கண்ணியமிக்க இரவு: லைலத்துல் கத்ர்

*(சுன்னி) இஸ்லாமியர்கள் ரமளான் மாதத்தின் 27ம் நாளின் இரவை லைலத்துல் கத்ர் என்று கொண்டாடுகிறார்கள் (ஷியா இஸ்லாமியர்கள் வேறு ஒரு நாளை இதற்காக ஒதுக்கியுள்ளார்கள்). இதைப் பற்றி குர்-ஆன் 97ம் ஸூரா கூறுகிறது:*

*நிச்சயமாக நாம் அதை (குர்ஆனை) கண்ணியமிக்க (லைலத்துல் கத்ர்) என்ற இரவில் இறக்கினோம். (97:1) மேலும் கண்ணியமிக்க இரவு என்ன என்பதை உமக்கு அறிவித்தது எது? (97:2) கண்ணியமிக்க (அந்த) இரவு ஆயிரம் மாதங்களை விட மிக மேலானதாகும். (97:3) அதில் மலக்குகளும், ஆன்மாவும் (ஜிப்ரயீலும்) தம் இறைவனின் கட்டளையின் படி (நடைபெற வேண்டிய) சகல காரியங்களுடன் இறங்குகின்றனர். (97:4) சாந்தி (நிலவியிருக்கும்) அது விடியற்காலை உதயமாகும் வரை இருக்கும். (97:5)*

*இந்த இரவின் முக்கிய அம்சம் "குர-ஆன்" ஆகும், அதாவது இந்த இரவில் குர்-ஆன் கீழ்வானம் வரைக்கும் இறங்கியது என்றும், அதன் பிறகு ஜிப்ராயீல் தூதன் சிறிது சிறிதாக முஹம்மதுவிற்கு கொண்டு வந்து சேர்த்தார் என்றும் இஸ்லாமியர்கள் நம்புகிறார்கள். சுருக்கமாக சொல்லவேண்டுமென்றால்:*

*அ) குர்-ஆன் இறங்கிய இரவு (அல்லாஹ்வின் வார்த்தை)*

*ஆ) ஆயிரம் மாதங்களை விட மேலான இரவு*

*இ) இந்த இரவில் மலக்குகள் (தூதர்கள்) மற்றும் ஆன்மாவும் (ஜிப்ராயீல்) நடைப்பெறவேண்டிய காரியங்களுடன் இறங்குகிறார்கள்.*

*ஈ) சாந்தி, காலை வரை நிலைத்திருக்கும்.*

*தம்பி, இந்த அதிகாரத்தை படித்தவுடன், அதன் விவரங்களை படித்தபோது, எனக்கு கிறிஸ்தவத்தின் கண்ணியமிக்க இரவு ஞாபகத்தில் வந்தது.*

## 2) கிறிஸ்தவத்தின் கண்ணியமிக்க இரவு:

*கிறிஸ்தவத்தில் நான் சொல்லப்போகும் இரவு கண்ணியமிக்க இரவு என்று பைபிளில் எங்கும் எழுதப்படவில்லை, ஆனால், கண்ணிய மிக்க இரவு என்று இஸ்லாமியர்கள் கருதும் இரவை விட பல ஆயிர மடங்கு அதிக கண்ணியத்தை இந்த இரவு உலகிற்கு கொண்டு வந்துள்ளது.*

*இதனை இப்போது படிப்போம், லூக்கா* 2:6-14

2:6 *அவ்விடத்திலே அவர்கள் இருக்கையில், அவளுக்குப் பிரசவகாலம் நேரிட்டது.*

2:7 *அவள் தன் முதற்பேறான குமாரனைப் பெற்று, சத்திரத்திலே அவர்களுக்கு இடமில்லாதிருந்தபடியினால், பிள்ளையைத் துணிகளில் சுற்றி, முன்னணையிலே கிடத்தினாள்.*

2:8 *அப்பொழுது அந்த நாட்டிலே மேய்ப்பர்கள் வயல்வெளியில் தங்கி, இராத்திரியிலே தங்கள் மந்தையைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.*

2:9 *அவ்வேளையில் கர்த்தருடைய தூதன் அவர்களிடத்தில் வந்து நின்றான், கர்த்தருடைய மகிமை அவர்களைச் சுற்றிலும் பிரகாசித்தது; அவர்கள் மிகவும் பயந்தார்கள்.*

2:10 *தேவதூதன் அவர்களை நோக்கி: பயப்படாதிருங்கள்; இதோ, எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன்.*

2:11 *இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்.*

2:12 *பிள்ளையைத் துணிகளில் சுற்றி, முன்னணையிலே கிடத்தியிருக்கக் காண்பீர்கள்; இதுவே உங்களுக்கு அடையாளம் என்றான்.*

2:13 *அந்தக்ஷணமே பரமசேனையின் திரள் அந்தத் தூதனுடனே தோன்றி:*

2:14 *உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையும், பூமியிலே சமாதானமும், மனுஷர்மேல் பிரியமும் உண்டாவதாக என்று சொல்லி, தேவனைத் துதித்தார்கள்.*

*தம்பி, இயேசு பிறந்த இரவு பற்றி தான் மேற்கண்ட வசனங்களில் நீ படித்தாய். இந்த கண்ணியமிக்க இரவிலும், கீழ்கண்ட காரியங்கள் நடைப்பெற்று இருக்கிறது:*

*அ) இந்த இரவில் "தேவனுடைய வார்த்தையாம், இயேசுக் கிறிஸ்து" உலகிற்குள் வந்தார்.*

*ஆ) தேவதூதன் மேய்ப்பர்களுக்கு தரிசனமாகி, எல்லா ஜனத்துக்கும் சந்தோஷத்தை உண்டாக்கும் செய்தி பற்றி விவரித்தான், அதாவது இயேசுவின் பிறப்பு பற்றிய நற்செய்தியை கொடுத்தான்.*

*இ) இரட்சகராகிய இயேசு பிறந்தார் என்ற நற்செய்தியை தூதன் கூறினான்.*

*ஈ) அதன் பிறகு அனேக தூதர்கள் தோன்றி, தேவனை துதித்தார்கள்.*

*உ) தேவனுக்கு மகிமை, பூமியிலே சமாதானம், மனுஷர் மேல் பிரியம் உண்டாவதாக என்று கூறினார்கள்.*

## 3) இறைவனின் வார்த்தை இறங்கிய இரவு:

*இஸ்லாமியர்கள் "குர்-ஆனை" இறைவார்த்தை என்று நம்புகிறார்கள். பைபிள் இயேசுவை இறை வார்த்தை என்றுச் சொல்கிறது.*

*குர்-ஆன் கீழவானம் வரை இறங்கியது என்று இஸ்லாமிய அறிஞர்கள் கூறுகிறார்கள். ஆனால் இயேசு கீழ்வானம் வரை அல்ல, இயேசுக் கிறிஸ்து பூமி வரை இறங்கி வந்தார், மனிதர்கள் மத்தியிலே வாசம் செய்ய வந்தார்.*

*குர்-ஆனின் படி, "சமாதானம்" காலை வரை இருந்தது, ஆனால், பைபிளின் படி, பூமியிலே "சமாதானம்" முழுவதுமாக வந்து இறங்கியது, இனி அது எடுத்துக்கொள்ளப்படுவதே இல்லை. மேலும் மனுஷர் மேல் தேவனுடைய அன்பு வெளிப்பட்டது.*

*குர்-ஆனின் படி மனிதர்கள் இந்த இரவில் தொழுதால், அது ஆயிரம் மாதங்களுக்கு சமமாக கருதப்படுகிறது. ஆனால், இயேசுக் கிறிஸ்து இந்த உலகில் வந்த இரவாகிய அன்றிலிருந்து இரண்டாயிரம் ஆண்டுகளாக மக்களுக்கு நன்மைகள் நடந்துக்கொண்டு இருக்கிறது.*

*சில இஸ்லாமிய அறிஞர்களின் கூற்றுப்படி, சொர்க்கத்தின் வாசல்கள் இந்த ரமளான் மாதம் முழுவதும் திறந்திருக்கும். ஆனால், கிறிஸ்தவத்தின் கண்ணியமிக்க இரவுக்கு பிறகு, தேவனுடைய சொர்க்கத்தின் வாசல்கள் இன்று வரை மூடப்பட்டதே இல்லை. தம்மை நம்புகிறவர்களை அவர் வரவேற்க வாசல்களை திறந்தே வைத்திருக்கிறார். தம்மிடத்தில் வருகிறவர்களை அவர் புறம்பே தள்ளுவதே இல்லை.*

*இன்னும் சில இஸ்லாமிய அறிஞர்களின் படி, இந்த ரமளான் மாதம் முழுவதும் சாத்தான் சங்கிலிகளினால் கட்டப்பட்டிருப்பான், இது எவ்வளவு உண்மையோ, அதை சோதித்துப் பார்ப்பவருக்கே தெரியும். ஆனால், இயேசுக் கிறிஸ்துவின் கண்ணியமிக்க இரவுக்கு பிறகு சாத்தானுடைய தலை நசுக்க நாள் குறிக்கப்பட்டு, இயேசு சிலுவையில் செய்த தியாக பலியின் மூலமாகவும், அவரது உயிர்த்தெழுதலின் மூலமாகவும், சாத்தானின் தலை நசுக்கப்பட்டது.*

## 4) இஸ்லாமிய கண்ணியமிக்க இரவை கொண்டாடும் முஸ்லிம்களின் கனிகள்:

*தம்பி, உலகில் வாழும் முஸ்லிம் தீவிரவாதிகள் குறைந்தபட்சம் இந்த ரமளான் மாதத்திலாவது அமைதியாக இருந்திருக்கக்கூடாதா? சாத்தான் சங்கிலிகளினால் இந்த மாதம் கட்டப்படுவான் என்ற விவரத்தை கீழ்கண்ட பட்டியலை கண்டபிறகு நம்பவே முடியவில்லை. கட்டப்படுவதற்கு பதிலாக, இன்னும் அனேக சாத்தான்களை அவன் வேலைக்கு அமர்த்திக்கொண்டான் என்றுச் சொல்லத்தோன்றுகிறது.*

*இந்த ஆண்டு 2012 ரமளான் மாதம் இஸ்லாமின் பெயரில் அரங்கேறிய வன்முறைகள் எத்தனை என்பதை கீழ்கண்ட பட்டியலில் நீ காணலாம்:*

**Ramadan Bombathon**
**2012 Scorecard**

| Day 26 | In the name of The Religion of Peace | In the name of Any Other Religion | By Angry Racists |
|---|---|---|---|
| Terror Attacks | 221 | 0 | 1 |
| Dead Bodies | 996 | 0 | 6 |

Source: http://www.thereligionofpeace.com/

கடந்த 26 நாட்களாக, இஸ்லாமின் பெயரில் 221 தாக்குதல்கள் நடந்துள்ளன, 996 நபர்கள் மரித்துள்ளனர். குறைந்த பட்சம் லைலத்துல் கத்ர் இரவில் சமாதானம் இருக்கும் என்று குர்-ஆன் சொல்கிறதே, இந்த நாளிலாவது உலகம் முழுவதும் ஒரு தாக்குதல் கூட நடக்காமல் இருக்கிறதா என்பதை நாளை வெளிவரும் செய்தித்தாள்களை கண்டு தெரிந்துக்கொள்ளலாம்.

## 5) கிறிஸ்தவ கண்ணியமிக்க இரவை கொண்டாடும், கிறிஸ்தவர்களின் கனிகள்:

கிறிஸ்தவர்கள் அனைவரும் பரிசுத்தர்கள் என்று நான் வாதாடமாட்டேன், ஆனால், இயேசுவை நம்பும் கிறிஸ்தவர்களின் கனிகள் நன்மைக்கு ஏதுவாகவே உள்ளது என்பதை யாரும் மறுக்கமுடியாது. இயேசுவின் பெயரில் கிறிஸ்தவர்கள் தங்கள் உடல்களில் வெடிகுண்டுகளை வைத்துக்கொண்டு அலைவதில்லை, இதர மார்க்க இடங்களை வெடிவைத்து தாக்குவதில்லை. ஒருவேளை கிறிஸ்தவ பெயர் கொண்ட ஒருவன் வன்முறையில் ஈடுபட்டால், அதற்கு காரணம் பைபிள் என்றோ, இயேசு என்றோ அவனும் கூறமுடியாது, மற்றவர்களும் கூறமுடியாது. ஆனால், கிறிஸ்தவர்களின் சேவை மனப்பான்மையை நம்மை சுற்றியுள்ள கிறிஸ்தவ பள்ளிகளையும், பல்கலைக் கழகங்களையும், மருத்துவ மனைகளையும், சேவைசெய்யும் ஸ்தாபனங்களையும் கண்டால் தெரிந்துக்கொள்ளலாம் (இவர்களிலும் பணத்திற்கு ஆசைப்பட்டு பணந்தின்னி பிச்சாசுகள் இருக்கிறார்கள், ஆனால், இவர்களின் இந்த செயலுக்கு இயேசு தான் காரணம் என்று இவர்களே கூட சொல்லமாட்டார்கள்).

இஸ்லாமிய கண்ணியமிக்க இரவை கொண்டாடப்போகிறாயா? அல்லது கிறிஸ்தவ கண்ணியமிக்க இரவை கொண்டாடப்போகிறாயா? அவசரம் ஒன்றுமில்லை. குர்-ஆனை தமிழில் படி, ஹதீஸ்களை தமிழில் படி, முஹம்மதுவின் வாழ்க்கை சரிதையை முழுவதுமாகபடி, இஸ்லாமிய விரிவுரைகளை படித்து தெரிந்துக்கொள். சத்தியத்தை அறிந்துக்கொள், அதன் பிறகு அந்த சத்தியம் உன்னை நிச்சயமாக விடுதலையாக்குவதை காண்பாய்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு உன் சகோதரன்,

தமிழ் கிறிஸ்தவன்.

மூலம்

உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்

---

## நாள் 28 - கிரியை VS கிருபை – உன் நித்தியத்தை நிர்ணயிப்பது எது?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உனக்க சமாதானம் உண்டாவதாக,

தம்பி இன்று ஒரு முக்கியமான விஷயம் பற்றி உனக்கு எழுதப்போகிறேன். இதை முழுவதுமாக படித்துப் பார். இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் வித்தியாசங்களில் இது மிகவும் அடிப்படையான வித்தியாசமாகும்.

பொதுவாக சொல்லவேண்டுமென்றால், உலக மார்க்கங்களை இரண்டு வகைக்குள் அடக்கிவிடலாம், **1) கிருபை மார்க்கம் 2) கிரியை மார்க்கம்.**

## கிறிஸ்தவம் கிருபை மார்க்கமாகும், இஸ்லாம் கிரியை மார்க்கமாகும்.

கிருபையினாலே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள் என்று பைபிள் கூறுகிறது. அதாவது நாம் தேவனுடைய இரட்சிப்பை பெறுவதற்கு நம்முடைய கிரியைகள் உதவாது, அவர் தம்முடைய கிருபையினாலே நம்மை இரட்சித்து இருக்கிறார்.

ஆனால், இஸ்லாமை நாம் எடுத்துக்கொண்டால், அது கிரியை மார்க்கமாக உள்ளது. இஸ்லாமிலே மன்னிப்பு என்பது அல்லாஹ்வின் கிருபை மீதும், அதோடு கூட ஒரு மனிதன் செய்யக்கூடிய கிரியைகள் மீதும் ஆதாரப்பட்டுள்ளது. சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், மனிதன் செய்யும் கிரியைகள் பாதி, அல்லாஹ்வின் கிருபை பாதி. நியாயத்தீர்ப்பு நாளிலே ஒரு முஸ்லிமுடைய நற்கிரியைகள் அவனது தீய கிரியைகளை விட அதிகமாக இருந்தால், மேலும் அல்லாஹ் விரும்பினால் தான் அந்த மனிதனின் எல்லா பாவங்களும் மன்னிக்கப்பட்டு அவர் சொர்க்கம் அடையமுடியும்.

ஆக இஸ்லாமிய இரட்சிப்பை கீழ்கண்ட விதமாக கூறலாம்:

இஸ்லாமிய இரட்சிப்பு = மனிதனின் கிரியைகள் + அல்லாஹ்வின் கிருபை (அ) விருப்பம்

## 1) இஸ்லாமிய இரட்சிப்பு (கிரியைகள் மீது அதிகமாக சார்ந்து இருத்தல்)

தம்பி, இந்த இரண்டு வசனங்களை படி:

ஈமான் கொண்டு. நல்ல அமல்கள் செய்வோருக்கு, மன்னிப்பையும், மகத்தான (நற்)கூலியையும் அல்லாஹ் வாக்களித்துள்ளான். (குர்-ஆன் 5:9)

ஈமான் கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்து கொள்வீர்களானால் அவன் உங்களுக்கு (நன்மை தீமையைப்) பிரித்தறிந்து நடக்கக்கூடிய நேர்வழி காட்டுவான்; இன்னும் உங்களை விட்டும் உங்கள் பாவங்களைப் போக்கி உங்களை மன்னிப்பான்; ஏனெனில் அல்லாஹ் மகத்தான அருட்கொடையுடையவன். (குர்-ஆன் 8:29)

"இல்லை இல்லை... அல்லாஹ் கிருபையுள்ளவன், எனவே அவனது மன்னிப்பை பெற நாங்கள் அதிகமாக ஒன்றும் செய்யவேண்டுவதில்லை" என்று நீ கூறலாம்.

அல்லாஹ் கிருபையுள்ளவன் என்று குர்-ஆன் சொல்கிறது, அது சரி தான், ஆனால், அதே குர்-ஆன் இப்படியும் கூறுகிறதே:

. . . . ஆனால் அல்லாஹ் தன் அருட்கொடைக்கு உரியவர்களாக யாரை நாடுகிறானோ அவரையே தேர்ந்தெடுத்துக் கொள்கிறான்;. அல்லாஹ் மிகப் பெரும் கிருபையாளன். (குர்-ஆன் 2:105)

அதாவது ஒரு முஸ்லிம் எவ்வளவு தான் செய்தாலும், அல்லாஹ் தான் விரும்பியவரை தெர்ந்தெடுத்துக் கொள்கிறான். நான் செய்யும் நற்செயல்களைக் கொண்டு பார்த்தால், அல்லாஹ் என்னை நிச்சயம் அங்கீகரிப்பான், இரட்சிப்பான் சொர்க்கத்தில் சேர்ப்பான் என்று எந்த ஒரு முஸ்லிமும் கூறமுடியாது. மேற்கண்ட வசனங்களில் (5:9, 8:29), ஒரு முஸ்லிமுடைய இரட்சிப்பு அவனது கிரியைகள் மீது ஆதாரப்பட்டுள்ளது என்பதை சொல்கிறது.

*முஸ்லிம்கள் தங்களை அல்லாஹ் மன்னிக்கவேண்டும் என்று விரும்பினால், இன்னொரு காரியமும் அவர்கள் செய்யவேண்டும், அது என்ன? அது தான் "கலப்பற்ற முறையில், தூயமனதுடன்" மன்னிப்பு கேட்பதாகும்.*

*குர்-ஆன் 66:8ஐ படிப்போம்:*

*நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்விடம் கலப்பற்ற முறையில் பாவ மன்னிப்புத் தெடுங்கள், உங்கள் இறைவன் உங்கள் தீமைகளை அழித்துவிடக்கூடும் .... (பீஜே தமிழாக்கம்).*

*இதன்படி ஒரு முஸ்லிம் தூயமனதுடன் அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோருகிறான் என்று வைத்துக்கொள்வோம், அப்படியானால், அதன் பிறகு அந்த மனிதன், "ஆம் நான் தூயமனதுடன் பாவ மன்னிப்பு கோரிவிட்டேன்" என்றுச் சொல்லி, "நிச்சயமாக, நான் அல்லாஹ்வின் மன்னிப்பை பெற்றுவிட்டேன், இனி எனக்கு பயமில்லை, நான் நிச்சயமாக சொர்க்கம் அடைந்துவிடுவேன்" என்று கூறமுடியுமல்லவா? இப்படி கூறுபவனை மற்ற இஸ்லாமியர்கள் எப்படி பார்ப்பார்கள்? இது பெருமை என்ற பாவமாக கருதப்படுமல்லவா?*

*இதில் இன்னொரு சிக்கல் என்னவென்றால், அந்த மனிதன் தூயமனதுடன், கலப்பில்லாமல் பாவ மன்னிப்பு கோரினார் என்பதை எதன் மூலம் அவன் அறியக்கூடும்? தான் 100% கலப்பில்லாமல் மன்னிப்பு கோரினான் என்று எப்படி அவனால் இந்த உலகில் இருக்கும் போது கூறமுடியும்? ஒருவேளை தான் முழுமனதோடு பாவமன்னிப்பு கோரியதாக நினைத்துக்கொள்ளலாமே தவிர அவனால் நிச்சயமாக திட்டவட்டமாக கூறமுடியாது.*

***இதன் மூலம் அறிவது என்னவென்றால், இஸ்லாமிய இரட்சிப்பு என்பது அதிகமாக கிரியைகள் மீது சார்ந்துள்ளது. எனவே:***

*1) அல்லாஹ்வின் முன்பு நிற்கும் அந்த நியாயத்தீர்ப்பு நாளில், நான் பூமியில் இருக்கும் போது செய்த நற்கிரியைகளுக்காக எனக்கு அல்லாஹ் நிச்சயமாக சொர்க்கம் அளிப்பான் என்று எந்த ஒரு முஸ்லிமாலும் சொல்லமுடியுமா?*

*2) அனேக முஸ்லிம்களின் கூற்றின் படி, அந்த நாளில் தங்களின் நற்செயல்கள், தீய செயல்களை விட அதிகமாக இருக்குமா இல்லையா? என்று அவர்களுக்கு தெரியாது. அல்லாஹ் அன்று அவர்களுக்கு சொர்க்கத்தை நிச்சயமாக தருவார் என்ற நம்பிக்கை இன்று எங்களுக்கு இல்லை, அது அல்லாஹ்வின் விருப்பம் என்று கூறுகிறார்கள். இப்படி தங்களின் நித்தியம் பற்றிய நிச்சயம் இல்லாமல் முஸ்லிம்கள் வாழுகிறார்கள், தம்பி உன் நிலை என்ன? உனக்கு இந்த நிச்சயம் உண்டா?*

*3) முஸ்லிம்களால் ஒன்று செய்யமுடியும், தங்களின் நற்கிரியைகள், தீயகிரியகளை விட அதிகமாக இருக்கும்! என்று எதிர்ப்பார்த்து, மற்றும் அல்லாஹ் எப்படியாவது தங்களை அங்கீகரித்துக்கொள்வான் என்று நம்பி, அறைகுறை நிச்சயத்தோடு இவ்வுலகில் வாழவேண்டியது தான்.*

*தம்பி, உன் நிலைக்கு வருவோம், இதுவரை நீ செய்த கிரியைகள் அனைத்தையும் கருத்தில்கொண்டு, "என்னை அல்லாஹ் கண்டிப்பாக அந்த நாளில் ஏற்றுக்கொள்வான் என்று உன்னால் கூறமுடியுமா?" உன் கிரியைகள் அல்லாஹ்வை நிச்சயமாக மெச்சிக்கொள்ளச் செய்யும் என்ற விசுவாசம் உனக்கு உண்டா?*

## 2) கிறிஸ்தவ இரட்சிப்பு (விசுவாசத்தின் மூலம் கிருபையினால் வருவது)

*தம்பி இதுவரை இஸ்லாமிய இரட்சிப்பு பற்றி கூறினேன். இப்போது கிறிஸ்தவ இரட்சிப்பு பற்றி சுருக்கமாக எழுதுகிறேன்.*

*கிறிஸ்தவத்தில் இரட்சிப்பின் நிச்சயம் உண்டு (யோவான் 6:47, 1 யோவான் 5:13). கிறிஸ்தவத்தில் இரட்சிப்பு என்பது மனிதன் சம்பாதிப்பது அல்ல, அது இறைவனிடமிருந்து இலவசமாக கொடுக்கப்படுகின்ற பரிசு ஆகும் (ரோமர் 4:3, எபேசியர் 2:8-9). கிறிஸ்தவத்தில் மன்னிப்புக்காக நாங்கள் இயேசு நிறைவேற்றிய கிரியை மீது முழுவதுமாக சார்ந்து இருக்கிறோம். எங்களின் நற்கிரியைகள் மீதல்ல,*

*நம்முடைய நீதியெல்லாம் ,கந்தை துணியைப்போல இருப்பதினால் அவரது கிரியை மீது சார்ந்து அவர் மீது விசுவாசம் வைக்கிறோம். தேவனுடைய கிருபை நம்மை இரட்சிக்கிறது. அவர் நமக்கு கொடுத்த கிருபையின் மகிழ்ச்சியில் நாங்கள் நீதியோடும் உண்மையோடும், நற்கிரியைகள் செய்து வாழ்ந்து காட்டுகிறோம். எங்கள் இரட்சிப்பிற்கு ஆதாரம் கிருபையே தவிர எங்கள் கிரியை அல்ல.*

*கிறிஸ்தவத்தில் இரட்சிப்பு என்பது இறைவனை மையமாகக் கொண்டு இருக்கிறது. இஸ்லாமில் இரட்சிப்பு என்பது மனிதனை மையமாகக்கொண்டு இருக்கிறது.*

*இஸ்லாம் மற்றும் கிறிஸ்தவம் "இறைவன் மீது நம்பிக்கை/விசுவாசம்" வைக்கவேண்டும் என்று போதிக்கிறது. ஆனால், கிறிஸ்தவத்தில் தேவன் மீது நாம் வைக்கும் விசுவாசமே நம்மை இரட்சிக்க பொதுமானதாக உள்ளது (ரோமர் 5:1, எபேசியர் 2:8-9). ஆனால், இஸ்லாமில் நம்பிக்கை மட்டும் போதாது, அதோடு கூட அவன் முதலாவதாக ஒரு முஸ்லிமாக இருக்கவேண்டும், அவன் செய்யும் நற்செயல்கள், அவனது தீய செயல்களை விட அதிகமாக இருக்கவேண்டும், அவன் கலப்பில்லாமல் அல்லாஹ்வை தொழுதுக்கொண்டு இருக்கவேண்டும், இவைகளோடு கூட அந்த நாளில் அல்லாஹ் இவனை மன்னிக்க விரும்பவேண்டும். இத்தனையும் ஒரு மனிதனுக்கு கிடைத்தால், அப்போது தான் அவனது இரட்சிப்புக்கு ஒரு நிச்சயம் கிடைக்கும். இவைகள் எல்லாம் இந்த உலகில் இருக்கும் வரை நடக்காது, மரித்த பிறகு தான் நிர்ணயிக்கப்படும், ஆகையால் தான் இஸ்லாமியர்கள் "எனக்கு என்ன ஆகும் என்று எனக்கே தெரியாது, ஏதோ சொர்க்கம் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு இப்பூமியில் வாழலாம்" என்று பதில் அளிக்கிறார்கள்.*

*தம்பி, ஒரு இணைய தளத்தில் சில வரிகளை படித்தேன், அவைகள் உனக்கு உபயோகமாக இருக்குமென்று இங்கு பதிக்கிறேன்:*

**[Acceptance - ஏற்றுக்கொள்ளுதல்]**

***இஸ்லாம்* -** "I obey-therefore I'm accepted" *நான் கீழ்படிகிறேன், ஆகையால் ஏற்றுக்கொள்ளப்படுவேன்.*

***கிறிஸ்தவம்* -** "I'm accepted–therefore I obey" *நான் ஏற்றுக்கொள்ளப்பட்டேன், ஆகையால் நான் கீழ்படிகிறேன்.*

**[Motivation - *உற்சாகமூட்டுதல்*]**

***இஸ்லாம்* -** Motivation is based on fear and insecurity – *அல்லாஹ்வை பின்பற்றுதல் பயத்தோடும், பாதுகாப்பு இல்லாமலும் செய்யப்படும்.*

***கிறிஸ்தவம்* -** Motivation based on grateful joy. *தேவனை பின்பற்றுதல் ஒரு மகிழ்ச்சிகரமாக அனுபவம்.*

**[Obedience - *கீழ்படிதல்]***

***இஸ்லாம்* -** I obey God in order to get things from God. – *நான் இறைவனிடமிருந்து ஏதோ பெற்றுக்கொள்வதற்காக நான் கீழ்படிகிறேன்.*

***கிறிஸ்தவம்* -** I obey God to get God–to delight and resemble him – *நான் இறைவனையே பெறுவதற்காக, மகிழ்ச்சியோடு அவரை பிரதிபலிக்கிறேன், கீழ்படிகிறேன்.*

**[Criticism - *விமர்சனம்]***

***இஸ்லாம்* -** When I am criticized I am furious or devastated because it is critical that I think of myself as a 'good person.' Threats to my self-image must be destroyed at all costs.

*நான் விமர்சிக்கப்படும் போது, அதிகமாக கோபம் கொள்கிறேன். ஏனென்றால் நான் ஒரு நல்ல மனிதன் என்று எனக்குள் நானே முடிவு செய்துவிட்டு இருக்கிறேன். என்னுடைய சுய பிம்பத்தை விமர்சிக்கிற எல்லாவற்றையும் எப்படியானாலும் அழித்துவிட முயற்சி எடுப்பேன்.*

***கிறிஸ்தவம்*** - When I am criticized I struggle, but it is not critical for me to because it is critical that I think of myself as a 'good person.' My identity is not built on my record or my performance but on God's love for me in Christ. I can take criticism. That's how I became a Christian.

*நாம் விமர்சிக்கப்படும் போது, நான் போராடுகிறேன், ஆனால், இது ஒரு பெரிய பிரச்சனையாகவே எனக்கு இருப்பதில்லை. என்னுடைய அடையாளம் என் நற்கிரியைகள் மீது சார்ந்து இருக்கவில்லை, அது கிறிஸ்துவிற்குள் என்னை நேசிக்கிற தேவன் மிது சார்ந்துள்ளது. நான் விமர்சனங்களை ஏற்றுக்கொள்கிறேன், அதனால் தான் நான் ஒரு கிறிஸ்தவனாக இருக்கிறேன்.*

**[Prayer – *ஜெபம் / தொழுகை]***

***இஸ்லாம்*** - My prayer consists largely of petition and it only heats up when I am in a time of need. My main purpose in prayer is control of environment.

*என் ஜெபங்கள் எல்லாம் வேண்டுதல்களாக இருக்கும், எனக்கு தேவைகள் அதிகமாகும் போது, ஜெபம் சூடுபிடிக்கும். என் ஜெபத்தின் முக்கிய நோக்கம் என்னை சுற்றியுள்ள சூழ்நிலையை கட்டுப்பாட்டிற்குள் வைக்க முயற்சிப்பதாகும்.*

***கிறிஸ்தவம்*** - My prayer life consists of generous stretches of praise and adoration. My main purpose is fellowship with him.

*என்னுடைய ஜெபம், முழுக்க முழுக்க இறைவனை துதிப்பதிலும், ஆராதிப்பதிலும் இருக்கும். என் ஜெபத்தின் முக்கிய நோக்கம் தேவனோடு ஐக்கியம் கொள்வதாகும்.*

(*மூலம்:* **http://timmybrister.com/2010/11/religion-by-works-vs-salvation-by-grace/**)

*தம்பி, சுருக்கமாக கூறவேண்டுமென்றால், கிருபையால் இறைவனின் மன்னிப்பைப் பெற்று இவ்வுலகில் வாழும் நாட்கள் எல்லாம் மகிழ்ச்சியோடு, நம்பிக்கையோடு பரிசுத்தமாக வாழ்வது தான் கிறிஸ்தவம் சொல்லும் இரட்சிப்பு ஆகும்.*

*வாழும் நாட்கள் எல்லாம் நம்முடைய நற்செயல்களை எண்ணிக்கொண்டு, தீய செயல்களை கழித்துக்கொண்டு ஒரு கணக்கு போட்டு வாழும் வாழ்க்கை தான் இஸ்லாமிய வாழ்க்கை, இவ்வளவு செய்தும் இரட்சிப்பின் நிச்சயம் இல்லாமல், அல்லாஹ்விற்கு பயந்துக் கொண்டு நடுக்கத்தோடு வாழும் வாழ்க்கை தான் இஸ்லாமிய இரட்சிப்பு. இதில் எதுவேண்டும் என்று நீயே முடிவு செய்துக்கொள்?*

*இஸ்லாமுக்கு வரும் படி கிறிஸ்தவர்களை அழைக்கும் ஒரு நபரைப் பார்த்து கிறிஸ்தவர்கள் கேட்கும் கேள்வி:*

"Why should we Christians give up our guarantee of salvation in Jesus for the requirements of your Qur'anic law when you yourselves don't even know if you have done enough good deeds to be saved on the Day of Judgment?"

*கிறிஸ்தவர்களாகிய நாங்கள் எங்கள் இயேசு கொடுத்த இரட்சிப்பின் நிச்சயத்தை ஏன் உங்கள் குர்-ஆனுக்காக விட்டுவிடவேண்டும்? குர்-ஆனை நம்பும் உங்களுக்கே நீங்கள் செய்யும் நற்கிரியைகள் உங்களை நியாயத்தீர்ப்பு நாளிலே இரட்சிக்குமா என்று தெரியாத போது, எங்கள் இரட்சிப்பின் நிச்சயத்தை நாங்கள் ஏன் விட்டுவிடவேண்டும்?*

*தம்பி, சிந்தித்துப் பார்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

*இப்படிக்கு, உன் சகோதரன்*

*தமிழ் கிறிஸ்தவன்*

***பின் இணைப்புக்கள்***

1) **http://carm.org/religious-movements/islam/does-islam-teach-salvation-works**

2) **http://carm.org/religious-movements/islam/questions-muslims**

3) **http://timmybrister.com/2010/11/religion-by-works-vs-salvation-by-grace/**

***மூலம்***

***உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்***

---

## நாள் 29 - பவுலை குற்றப்படுத்தி அல்லாஹ்வை அவமதிக்கும் முஸ்லிம்கள்

['*அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க* இங்கு *சொடுக்கவும்]*

*அன்புள்ள தம்பிக்கு,*

*உனக்கு சமாதானம் உண்டாவதாக.*

*நீ எழுதிய கடிதத்தை படித்தேன், உன் நண்பர்கள் பவுல் பற்றி கேள்வி கேட்கிறார்கள் என்று என்னிடம் கூறினாய்: "கிறிஸ்தவத்தை தோற்றுவித்தவர் பவுல் தான், இயேசு அல்ல" என்ற குற்றச்சாட்டிற்கு உங்கள் பதில் என்ன என்னிடம் கேள்வி கேட்டுள்ளாய்.*

*கேள்வியை கேட்கும் இஸ்லாமியர்களிடம் ஒரே ஒரு முறை அவர்கள் புதிய ஏற்பாட்டை முழுவதுமாக படித்தார்களா? என்று கேட்டுப்பார். யாரோ சொன்ன விவரத்தை அப்படியே சொல்லும் இவர்கள் நிதானமாக ஆராய ஆரம்பித்தால் இவர்களின் இஸ்லாமிய நம்பிக்கை ஆட்டங்காணும். சரி நான் இப்போது உனக்கு சுருக்கமாக விளக்குகிறேன்.*

***உன் கேள்விக்கு சம்மந்தப்பட்ட புதிய ஏற்பாட்டு கால அட்டவணையை சுருக்கமாக கொடுக்கிறேன்.***

- கி.மு. 4 – கி.பி. 1: இயேசுவின் பிறப்பு
- கி.பி. 30 – 33: இயேசுக் கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டு, உயிர்த்தெழுந்தார்
- கி.பி. 35 – 36: சவுலின் மனந்திரும்புதல்

*கவனிக்கவும்: இயேசு உயிர்த்தெழுந்த பிறகு, இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு பிறகு தான் பவுல் மனந்திரும்புகிறார்.*

### 1) *இது இஸ்லாமியர்களின் அறியாமையா அல்லது வஞ்சகமா?*

*தம்பி, புதிய ஏற்பாட்டை படித்து முழுவதுமாக ஆய்வு செய்யும் ஒரு நபர் இப்படி அப்போஸ்தலர் பவுல் மீதும், கிறிஸ்தவத்தின் மீதும் இப்படிப்பட்ட குற்றச்சாட்டை சுமத்தமாட்டார். ஏனென்றால், எவர் ஒருவர் அப்போஸ்தலர் நடபடிகளை படிப்பாரோ, அவர் நிச்சயமாக இப்படிப்பட்ட குற்றச்சாட்டை வைக்கமாட்டார். ஏனென்றால், அப்போஸ்தலர் நடபடிகளில் கிறிஸ்தவத்தின் ஆரம்ப விவரங்கள் தெளிவாக கூறப்பட்டுள்ளது. இந்த கேள்வியை கேட்கும் இஸ்லாமியர்கள் ஒன்று அறியாமையில் இப்படி கேட்கவேண்டும் அல்லது கிறிஸ்தவத்தின் மீது வெறுப்போடு இப்படி வஞ்சகமான குற்றச்சாட்டுகளை சுமத்தவேண்டும்.*

**2) *இயேசுவின் சீடர்களின் ஆரம்பகால வாழ்க்கை வரலாறு:***

*இஸ்லாம் சொல்லுகின்றபடி, இயேசுவை அல்லாஹ் தன்னலவில் எடுத்துக்கொண்டு இருந்திருந்தால், சீடர்களின் வாழ்வு அப்போஸ்தலர் நடபடிகளில் உள்ளது போல இருந்திருக்காது. சீடர்கள் தங்களின் சொந்த தொழிலை செய்துக்கொண்டு, வாழ்ந்திருப்பார்கள். ஆனால், சரித்திரம் வேறுவகையாகச் சொல்கிறது. குர்-ஆனில் இயேசுவின் சிலுவைப் பற்றி அல்லாஹ் சொன்னது சுத்தப்பொய், அதாவது மிகப்பெரிய பொய்.*

*இயேசு உயிர்த்தெழுந்த பிறகு சீடர்களோடு அனேக நாட்கள் இருந்து அவர்கள் அடுத்து என்ன செய்யவேண்டுமென்று இயேசு அறிவித்துச் சென்றார். பரிசுத்த ஆவியானவரின் வருகைக்காக காத்திருக்கும் படி இயேசு கட்டளையிட்டார், அதே போல சீடர்கள் காத்திருந்தார்கள், பரிசுத்த ஆவியானவரும் பொழிந்தருளினார். அதன் பிறகு சீடர்களின் ஊழியம் ஆரம்பித்தது.*

[*தம்பி, இந்த விவரம் பற்றி ஒரு கட்டுரையை நான் இணையத்தில் படித்தேன், அதனை ஒரு முறை நீயும் படித்துப் பார் (***Answering PJ - 3: *இஸ்லாமை மண்ணை கவ்வ வைத்த அப். நடபடிகள் - பாகம்* 1 - isakoran.blogspot.in/2010/04/answering-pj-3-1.html).**]

**3) *பவுல் இல்லாமலேயே தொடர்ந்த இயேசுவின் ஊழியம்:***

*தம்பி, அப்போஸ்தலர் நடபடிகள் முதல்* 8 *அதிகாரங்களை படித்துப் பார்த்தால், முஸ்லிம்களின் குற்றச்சாட்டு ஒரு மிகப்பெரிய பொய் என்பது எல்லாருக்கும் தெளிவாக விளக்கும். அதாவது இயேசுவின் சீடர்களே ஊழியத்தை ஆரம்பித்தார்கள். அவர்கள் இயேசுவை தெய்வம் என்று அறிவித்தார்கள், அதனால் அனேக கஷ்டங்களை அனுபவித்தார்கள், ஸ்தேவான் என்ற சீடரும் கொல்லப்பட்டார், இவரின் மரணத்தின் போது சவுலும் அங்கீகரித்து இருந்தார்.*

***அப்போஸ்தலருடைய நடபடிகளின் முதல் எட்டு அதிகாரங்களின் சுருக்கம்:***

1) *உயிர்த்தெழுந்த இயேசு சீடர்களுக்கு காணப்படல், மற்றும் பரமேறுதல் (*1:4-11)

2) *தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியானவருக்காக சீடர்கள் எருசலேமில் காத்திருத்தல் (*1:12-14)

***எருசலேம் சபையின் ஆரம்பகால விசுவாசிகளின் நடபடிகள் (*1:15 - 8:3)**

1) *யூதாசுக்கு பதிலாக மத்தியாஸை நியமித்தல் (*1:15-26)

2) *பெந்தேகோஸ்தே நாளில் பரிசுத்த ஆவியானவரின் வருகை (*2: 1-13)

3) *எருசலேமில் பேதுருவின் முதல் பிரசங்கம், அனேகர் மனந்திரும்பினர்(*2:14-41)

4) *பேதுரு மற்றும் யோவான், ஒரு முடவனை சுகமாக்குதல் (*3:1-10)

5) *அற்புதத்திற்கு பிறகு பேதுரு செய்த இரண்டாம் பிரசங்கம் (*3:11-26)

6) *பேதுரு மற்றும் யோவானின் கைது, நீதிமன்றத்திற்கு முன்பு சாட்சி கொடுத்தல் (*4:1-22)

7) *பேதுரு யோவானின் விடுதலை, விசுவாசிகளின் கூட்டு ஜெபம் (*4:23-31)

8) *அப்போஸ்தலர்களின் அற்புதங்கள், சுகமாக்குதல் (*5:12-16)

9) *மறுபடியும் அப்போஸ்தலர்கள் கைது செய்யப்படல், நீதிமன்றத்திற்குமுன்பு சாட்சியிடல் (* 5:17-42)

10) *ஸ்தேவான் கைது செய்யப்படல், பயமில்லாமல் அவர் செய்த பிரசங்கம் (* 6:8 - 7:53)

11) ஸ்தேவான் கல்லெறியப்பட்டு கொல்லப்படல், தன்னை கொன்றவர்களுக்காக வேண்டிக்கொள்ளுதல் (7:54 - 60)

12) சவுல் சபையை துன்புறுத்த ஆரம்பித்தல் (8:1-3)

**4) பவுல் எதிரியாக இருந்த போதிலும் தொடர்ந்த இயேசுவின் ஊழியம்:**

தம்பி, பவுல் கிறிஸ்தவர்களுக்கு மிகபெரிய எதிரியாக மாறினார். அவர்களை கொடுமைப்படுத்தினார். தமஸ்குவில் இருக்கும் கிறிஸ்தவர்களை கொடுமைப்படுத்த அவர் பிரயாணம் செய்யும் போது இயேசுவால் சந்திக்கப்பட்டு அவர் மனந்திரும்பினார். அதன் பிறகு சீடர்களோடு சேர்ந்து அவரும் ஊழியம் செய்தார்.

தம்பி, இதுவரை நான் மேலே சொன்ன விவரங்களின் அடிப்படையில் உன்னிடம் சில கேள்விகளை வைக்கப்போகிறேன். உன்னால் முடிந்தால், உலக இஸ்லாமிய அறிஞர்களில் மிகப்பெரிய அறிஞரிடம் கேட்டு எனக்கு பதில்களை அனுப்பு:

அ) இயேசு கி.பி. 30 – 33 ல் சிலுவையில் அறையப்பட்டு உயிர்த்தெழுந்தார். பவுல் கி.பி. 35ம் ஆண்டு மனந்திரும்பினார் (கிறிஸ்தவரானார்), அப்படியானால், இந்த இடைப்பட்ட காலகட்டட்தில் (2 அல்லது 3 ஆண்டுகள்) சீடர்கள் என்ன செய்துக் கொண்டு இருந்தார்கள்? இயேசுவின் சிலுவைப் பற்றி இஸ்லாம் சொல்வது உண்மையானது என்று கருதுபவர்கள் மேற்கண்ட கேள்விக்கு பதில் சொல்லட்டும்.

ஆ) பவுல் கிறிஸ்தவராக மாறுவதற்கு முன்பாக, இயேசுவின் சீடர்கள் யூத மத தலைவர்களால் எந்த குற்றத்திற்காக துன்புறுத்தப்பட்டார்கள்?

இ) பவுல் கிறிஸ்தவர்களை அல்லது இயேசுவின் சீடர்களை கொடுமைப்படுத்த காரணமென்ன? இஸ்லாமியர்களின் கருத்துப்படி, இயேசு ஒரு நபி மட்டுமே என்று சீடர்கள் சொல்லியிருந்தால், இவர்களை கொலை செய்யவேண்டும் என்று பவுல் ஏன் நினைக்கவேண்டும்? யூத தலைவர்கள் ஏன் நினைக்கவேண்டும்? இதிலிருந்து அறிவது என்ன?

ஈ) இயேசு ஒரு நபி என்று சொல்லியிருந்தால், யூத தலைவர்கள் சீடர்களை ஏன் சிறைச்சாலையில் அடைக்கவேண்டும்?

உ) இயேசு ஒரு நபி என்று சொல்லியிருந்தால், ஏன் யூத தலைவர்கள் ஸ்தேவானை கல்லெரிந்து கொல்லவேண்டும்? ஏன் இவர்களுக்கு துணையாக பவுல் இருக்கவேண்டும்?

**5) குர்-ஆனை அவமதிக்கும் இஸ்லாமிய குற்றச்சாட்டுகள்:**

இயேசுவோடு மூன்று ஆண்டுகளுக்கும் அதிகமான நாட்கள் வாழ்ந்த அனைத்து சீடர்கள், இயேசு சொன்னதையெல்லாம் காற்றிலே விட்டுவிட்டு, பவுல் சொன்னதை ஏற்றுக்கொண்டார்கள் என்று இஸ்லாமியர்கள் குற்றப்படுத்துவது வேடிக்கையாக இருக்கிறது. இயேசுவின் அற்புதங்களை கண்டவர்கள், வார்த்தைகளை கேட்டவர்கள் எப்படி அவர் மூன்று ஆண்டுகளாக சொன்ன விவரங்களை மறந்துவிடுவார்கள்? இது சாத்தியமில்லாத ஒன்றாகும். ஒருவேளை ஒன்று அல்லது இரண்டு சீடர்கள் சிறிது தவறினாலும், மற்றவர்கள் அதனை சரிபடுத்தியிருப்பார்கள். ஆக, இஸ்லாமியர்களின் குற்றச்சாட்டு ஒரு பச்சைப்பொய்யாகும். முஹம்மதுவின் தோழர்கள் மீது இஸ்லாமியர்களுக்கு எவ்வளவு நம்பிக்கை உள்ளதோ அதைவிட பல ஆயிரமடங்கு நம்பிக்கை இயேசுவின் சீடர்கள் மீது கிறிஸ்தவர்களுக்கு உள்ளது என்பதை எல்லா இஸ்லாமியர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதுமட்டுமல்ல, இஸ்லாமியர்களின் குற்றச்சாட்டு குர்-ஆனையும், அல்லாஹ்வையும் அவமதிக்கிறது: இந்த குர்-ஆன் வசனத்தை படி தம்பி:

அவர்களில் குஃப்ரு இருப்பதை (அதாவது அவர்களில் ஒரு சாரார் தம்மை நிராகரிப்பதை) ஈஸா உணர்ந்த போது, "அல்லாஹ்வின் பாதையில் எனக்கு உதவி செய்பவர்கள் யார்?" என்று அவர் கேட்டார்; (அதற்கு அவருடைய சிஷ்யர்களான) ஹவாரிய்யூன்; "நாங்கள் அல்லாஹ்வுக்காக (உங்கள்) உதவியாளர்களாக இருக்கிறோம், நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் மீது ஈமான் கொண்டுள்ளோம்;. திடமாக நாங்கள்

*(அவனுக்கு முற்றிலும் வழிப்பட்ட) முஸ்லீம்களாக இருக்கின்றோம், என்று நீங்கள் சாட்சி சொல்லுங்கள்" எனக் கூறினர். (குர்ஆன் 3:52)*

*தம்பி, நன்றாக சிந்தித்துப் பார். கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த சீடர்கள் பற்றி, 7ம் நூற்றாண்டில் வந்த குர்-ஆன் மேற்கண்ட புகழாரத்தை சூட்டுகிறது. அதாவது, இயேசுவின் சீடர்கள் அல்லாஹ்விற்கு உதவியாளர்களாக இருப்பதாக கூறினார்களாம், அதனை முஹம்மதுவின் காலத்தில் அல்லாஹ் சாட்சி கொடுக்கிறார். இப்போது நமக்கு எழும் கேள்விகள் என்னவென்றால்:*

*அ) இன்று இஸ்லாமியர்கள் சூட்டும் குற்றச்சாட்டு உண்மையென்றால், அன்று அல்லாஹ் சூட்டிய புகழாரம் பொய்யாகும். எனவே, குர்-ஆன் சொல்வது பொய் என்று இன்று இஸ்லாமியர்கள் ஏற்க தயாராக இருக்கிறார்களா? இயேசுவின் சீட்ர்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக இல்லை, அவர்கள் பவுலின் பேச்சைக் கேட்டு மாறிவிட்டார்கள் என்று இஸ்லாமியர்கள் கூறப்போகிறார்களா?*

*ஆ) இயேசுவின் சீடர்களாகிய பேதுரு, யோவான் போன்றவர்கள், பவுலின் வார்த்தைகளை நம்பி அவர் சொன்னது போல செய்தார்கள் என்று இஸ்லாமியர்களின் குற்றசாட்டு உண்மையானால், குர்-ஆனில் சீடர்கள் பற்றி அல்லாஹ் சொல்வது பொய்யானதாகும்.*

*எனவே, பவுலின் மீது குற்றம் சுமத்த விரும்பும் இஸ்லாமியர்கள் குர்-ஆனை இறக்கிய அல்லாஹ்வை அவமானப்படுத்துகிறார்கள். தங்களுக்கு எல்லாம் தெரியும், ஆனால் அல்லாஹ்விற்கு ஒன்றுமே தெரியாது என்று நேரடியாகவே முஸ்லிம்கள் சொல்கிறார்கள்.*

*அல்லாஹ் சொல்கின்றான் "இயேசுவின் சீடர்கள் தனக்கு உதவியாளர்கள்", ஆனால், இஸ்லாமியர்கள் சொல்கிறார்கள், "இல்லை இல்லை, பவுலின் போதனைகளை கேட்டு சீடர்கள் கெட்டுவிட்டார்கள், இயேசு போதிக்காத கொள்கைகளை ஏற்றுக்கொண்டார்கள்".*

*ஆக, பவுலை குற்றப்படுத்துபவர்கள் கரியை தங்கள் அல்லாஹ்வின் முகத்தில் தான் முதலாவது பூசுகிறார்கள். பாவம் அல்லாஹ், இன்று நம்மிடம் இருக்கும் இஸ்லாமியர்களை விட அறிவில் குறையுள்ளவராக இஸ்லாமியர்களுக்கு காணப்படுகிறார். இன்றைய இஸ்லாமியர்கள் அல்லாஹ்வை விட சர்வ ஞானிகளாக இருக்கிறார்கள்.*

*தம்பி, பவுல் மீது குற்றம் சுமத்தும் இஸ்லாமியர்கள் முதலாவது புதிய ஏற்பாட்டை படிக்கட்டும், அதன் பிறகு தங்கள் குர்-ஆனை தமிழில் படிக்கட்டும், அதன் பிறகு கொஞ்சம் ஆய்வு செய்யட்டும். ஏனென்றால், இஸ்லாமியர்கள் கிறிஸ்தவத்தின் மீது சுமத்தும் குற்றச்சாட்டுகள் அவர்கள் அல்லாஹ்விற்கும், குர்-ஆனுக்குமே பிரச்சனையாக இருப்பதினால், அவர்கள் சிறிது எச்சரிக்கையாக இருக்கட்டும்.*

***முடிவுரை:** தம்பி, கடைசியாக நான் உனக்கு சொல்லிக்கொள்வது என்னவென்றால், முதல் நான்கு சுவிசேஷங்களில் இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மையை ஆணித்தரமாக விளக்கியுள்ளார். பவுலுக்கு முன்பாக இயேசுவின் சீடர்கள் இயேசுவே தெய்வம் என்று அறிக்கையிட்டு, சிறைச்சாலைகளில் அடைக்கப்பட்டுள்ளார்கள், கொலை செய்யப்பட்டுள்ளார்கள். சரித்திரம் நமக்கு முன்பாக தெளிவாக இருக்கும் போது அதனை ஏற்கமறுப்பவர்களை நாம் என்னவென்று கூறமுடியும்?*

*கிறிஸ்தவத்தை குற்றப்படுத்தினால், இஸ்லாமுக்கு ஆபத்து,*

*பைபிளை குற்றப்படுத்தினால், குர்-ஆனுக்கு ஆபத்து,*

## இயேசுவின் சீடர்களை, பவுலை குற்றப்படுத்தினால், அல்லாஹ்விற்கே ஆபத்து.

*எனவே, இவைகளை மனதில் வைத்து இஸ்லாமியர்கள் பேசட்டும், எழுதட்டும், மறுத்தால் விளைவுகளை சந்திக்க தயாராகிக்கொள்ளட்டும்.*

*உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.*

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

[மூலம்]

[உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்]

## நாள் 30 - ஆயிரம் நீதிமான்களை பார்க்கிலும் ...

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

சாந்தியும் சமாதானமும் உனக்கு உண்டாவதாக.

தம்பி, உன் பதில் கடிதங்களை பார்க்கும் பொழுது, உனக்குள் ஒரு மாற்றம் ஏற்பட்டு வருவதை காணமுடிகிறது. நீ மீண்டும் இறைவனிடம் வந்தால் அவர் உன்னை மன்னிப்பாரா என்று யோசிக்கிறாய். அல்லாஹ் இணைவைப்பை ஒருநாளும் மன்னிக்கமாட்டான் என்று உன்னை பயமுறுத்திவைத்திருப்பதை உணர்கிறேன். நீ என்னோடுகூட ஓய்வுநாள் பாடசாலைகளில் படித்த வேதாகம நிகழ்ச்சிகளை மறந்திருப்பாய் என்று நான் நினைக்கவில்லை. குறிப்பாக நீ மிகவும் விரும்பும் 'கெட்ட குமாரன் கதையை' நீ மறந்திருக்கமாட்டாய். நீ இருக்கும் நாட்டில் இறைவேதம் வாசிக்க தடையிருப்பதால் நான் அந்த கதையை உனக்கு மீண்டும் சொல்லுகிறேன். கவனமாக கேள்.

ஒரு மனிதனுக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள். அவர்களில் இளையவன் தகப்பனை நோக்கி: தகப்பனே, சொத்தில் என் பங்கை எனக்குத் பிரித்து தரவேண்டும் என்றான். எனவே தகப்பன் அவர்களுக்குத் தன் சொத்தை பங்கிட்டுக் கொடுத்தார். சில நாட்களுக்குப் பின்பு, இளையமகன் எல்லாவற்றையும் சேர்த்துக்கொண்டு, தூரநாட்டுக்குப் புறப்பட்டுப்போய், அங்கே துன்மார்க்கமாய் வாழ்ந்து, தன் சொத்தை எல்லாம் அழித்துப்போட்டான். எல்லாவற்றையும் அவன் செலவழித்தபின்பு, அந்தத் நாட்டில் கொடிய பஞ்சமுண்டாயிற்று. அப்பொழுது அவன் குறைவுபடத் தொடங்கி, அந்த நாட்டின் குடிகளில் ஒருவனிடத்தில் போய் சேர்ந்துக்கொண்டான். அந்தக் குடியானவன் அவனைத் தன் வயல்களில் பன்றிகளை மேய்க்கும்படி அனுப்பினான். அப்பொழுது பன்றிகள் தின்னும் தவிட்டினாலே தன் வயிற்றை நிரப்ப ஆசையாயிருந்தான், ஆனாலும் ஒருவனும் அதை அவனுக்குக் கொடுக்கவில்லை.

### மனமாற்றம்:

அவனுக்குப் புத்தி தெளிந்தபோது, அவன்: என் தகப்பனுடைய கூலிக்காரர் எத்தனையோ பேருக்குப் போதுமான சாப்பாடு இருக்கிறது, நானோ பசியினால் சாகிறேன். நான் எழுந்து, என் தகப்பனிடத்திற்குப் போய்: தகப்பனே, பரத்துக்கு விரோதமாகவும் உமக்கு முன்பாகவும் பாவஞ்செய்தேன். இனிமேல் உம்முடைய குமாரன் என்று சொல்லப்படுவதற்கு நான் பாத்திரனல்ல, உம்முடைய கூலிக்காரரில் ஒருவனாக என்னை வைத்துக்கொள்ளும் என்பேன் என்று சொல்லி எழுந்து புறப்பட்டு, தன் தகப்பனிடத்தில் வந்தான்.

கெட்ட குமாரன்அவன் தூரத்தில் வரும்போதே, அவனுடைய தகப்பன் அவனைக் கண்டு, மனதுருகி, ஓடி அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு, அவனை முத்தஞ்செய்தார். குமாரன் தகப்பனை நோக்கி: தகப்பனே, பரத்துக்கு விரோதமாகவும், உமக்கு முன்பாகவும் பாவஞ்செய்தேன், இனிமேல் உம்முடைய குமாரன் என்று சொல்லப்படுவதற்கு நான் பாத்திரன் அல்ல என்று சொன்னான். அப்பொழுது தகப்பன் தன் ஊழியக்காரரை நோக்கி: நீங்கள் உயர்ந்த வஸ்திரத்தைக் கொண்டுவந்து, இவனுக்கு உடுத்தி, இவன் கைக்கு மோதிரத்தையும் கால்களுக்குப் பாதரட்சைகளையும் போடுங்கள். கொழுத்த கன்றைக் கொண்டுவந்து அடியுங்கள். நாம் விருந்துண்டு, சந்தோசமாயிருப்போம். என் குமாரனாகிய இவன் மரித்தான், திரும்பவும் உயிர்த்தான் காணாமற்போனான், திரும்பவும் காணப்பட்டான் என்றான். அப்படியே அவர்கள் சந்தோஷப்படத் தொடங்கினார்கள்.

இந்த உவமை கதைக் கூடாக ஈஸா அல் மஸீஹ் (இயேசு கிறிஸ்து) பிதாவின் அன்பை போதித்தார்கள். பிதாவின் அன்பை நான் உனக்கு புதிதாக கூறத்தேவையில்லை. என் அன்பு தம்பியே, நீயும் இந்த மகனை போலதான் இப்பொழுது இருக்கிறாய். இறைவனின் வீடாகிய கிறிஸ்தவ குடும்பத்திலிருந்து வெளியேறி, உலக ஆசைகளுக்கு அடிமையாகி, முன்பு உன்னிடமிருந்த நிம்மதி, சந்தோஷத்தை இழந்து தவித்து கொண்டிருக்கிறாய். இஸ்லாம் எனும் வரட்சியில் சிக்கி, ஆவிக்குரிய பஞ்சம் உன்னை ஆக்கிரமித்துள்ளது.

உன் தகப்பனாகிய பரம பிதா, நீ எப்பொழுது திருப்பி வருவாய் என்று வாசலில் நின்று காத்துக்கொண்டிருக்கிறார் என்பதை புரிந்துகொள். புலியின் மேல் சவாரி செய்பவன் திரும்பி வருவது கூடாத காரியம் என்பது உண்மை! ஆனால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவால் எல்லாம் கூடும். நீ அவரிடம் கையேந்தினால் போதும் உனக்காக எல்லா காரியங்களையும் அவர் செய்வார்.

அல்லாஹ் இணைவைக்கும் பாவத்தை மன்னிக்கவே மாட்டான் என்று உன்னை இஸ்லாத்துக்கு மாற்றியவர்கள் சொல்லியிருப்பார்கள். அது உண்மைதான். அது மட்டுமல்ல அவனால் ஒரு பாவத்தையும் மன்னிக்க முடியாது என்பதற்கு சிறந்த ஆதாரம் தான் இஸ்லாம் மதத்தை தோற்றுவித்த முஹம்மது தனது மரணதருவாயில், தனது அன்பு மகளிடம் சொல்கிறார் "நான் போகும் இடத்தை அறியேன்"!

இப்பொழுது உனக்கு புரிந்திருக்கும் என்று நம்புகிறேன். இதுதான் இஸ்லாமிய ஸ்தாபகரின் நிலையென்றால் மற்றவர்களின் நிலையை எண்ணிப்பார்க்க வேண்டுமா?

இயேசுவின் சிலுவை மரணத்தை நினைத்துப்பார். அவர் பட்ட வேதனைகள் யாருக்காக? அவர் பட்ட காயங்கள் யாருக்காக? யாருக்கு அடிக்க வேண்டிய கசையடிகளை அவர் ஏற்றுக்கொண்டார். அவர் கரங்களில் ஆணியடிக்கப்பட்டது யாருக்காக? சிந்தித்து பார் என் அன்பு தம்பியே!

இப்பொழுது மனந்திருப்பி நீ ஜெபிக்க வேண்டிய முறையை நான் உனக்கு சொல்லித்தர தேவையில்லை. உனக்கு நன்கு தெரியும். தாமதிக்காதே உடனடியாக செயற்படு! உனக்கு ஒத்தாசை வரும் இறைவனிடத்திற்கு உன் கரங்களை உயர்த்து!

ஜெபித்துவிட்டு உன் பதில் கடிதத்தை எனக்கு எழுது.

தம்பி, இது இந்த ரமளான் மாதத்தில் நான் எழுதும் 30வது கடிதமாகும்.

இனி உன்னை தினமும் தொந்திரவு செய்யாமல், வாரம் ஒரு கடிதம் எழுத முயற்சி எடுப்பேன். மேலும் நீ கேட்ட அனேக கேள்விகளுக்கு நான் பதில் அளிக்கவேண்டியுள்ளது.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

---